## சுத்தமான பற்கள்!

## அதிக சுத்தமான பற்கள்!

## முற்றிலும் சுத்தமான பற்கள்!



## ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினூஸ்' டூத்பேஸ்டின் மேன்மை!

பச்சை 'கோலினூஸ்' டூத்பேஸ்ட் உபயோகிப்பதால் உங்கள் பற்கள் சுத்தமாயும், அதிக வெண்மையுடனும், ஆரோக்கியத்துடனும் இருக்கும், மேலும், இயற்கையின் அற்புதமான ஆக்டிவ் க்ளோரோபில் சேர்த்துள்ளதால், அது பற்களுக்குச் சொத்தை ஏற்படாமல் பாதுகாப்பு அளிக்கிறது.

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினூஸ்' டூத்பேஸ்ட் வாய் நாற்றத்தை நீக்கி உங்கள் நகையழகுக்கு சோபையூட்டும். அதன் சக்திவாய்ந்த க்ளோரோபில் துணையே பச்சை கோலினூஸின் சிறப்பிற்குக் காரணம்!

**பச்சை 'கோலினூஸ்'**

...க்ளோரோபில் சேர்ந்த டூத்பேஸ்டுகளில் முதன்மையானது, மேன்மையானது!

ஜெப்ரி மானேர்ஸ் அண்ட் கோ., பிரைவேட் லிமிடெட்
'கோலினூஸ்' டிரேட் மார்க் உபயோகிப்பதற்கு
அதிகாரம் பெற்றவர்கள்






# கல்கி பொங்கல் இதழ்

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17 | இதழ் 24

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி | மார்கழி 28

# பொங்கலோ! பொங்கல்!

செந்தமிழ் நாட்டு மக்களுக்கும் தமிழ்கூறும் நல்லுலகிலுள்ள தமிழ்ப் பேர் அன்பர்களுக்கும் பொங்கல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்! 'பொங்கலோ! பொங்கல்!' என்று போற்றி கூறுகிறோம்.

பொங்கல் புதுநாளில் அவர்கள் இல்லங்களில் பால் பொங்குவது போலவே, அவர்கள் உள்ளங்களிலும் இன்பம் பொங்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறோம். அவர்கள் வாழ்க்கையில் இந்த ஆண்டு முழுதும் இன்பம் பொங்க வேண்டும் என்று விழைகிறோம்!

பஞ்சமும் பிணியும் நீங்கிப் பாரத தேசம் முழுதும் சுபிட்சம் நிலவ வேண்டும் என்று இறைஞ்சுகிறோம். அச்சமும் குறுகிய மனப்பான்மையும் நீங்கி மக்கள் உள்ளத்தில் ஞான ஒளி உதயமாக வேண்டும் என்று இறைவனைப் பரவுகிறோம்.

* * * *

பொங்கல் திருநாள் உழவர் திருநாள். உழவர்கள் தங்கள் வாழ்வுக்கு ஜீவாதாரமாக விளங்கும் பகலவனை மட்டும் நம்பிடுவதில்லை. அடுத்த நாள் மாட்டுப் பொங்கல் என்று உழவுக்கு உதவி புரிந்த மாடுகளையும் பசுக்களையும் போற்றி வணங்குகிறார்கள்.

பகலவன், பறவை இனம், மிருக இனம், தாவர இனம், மனித இனம் யாவற்றுக்குமே உயிர் அளிப்பவன். அவன் இல்லையேல் உலகில் உயிரில்லை.

மனித வர்க்கத்தினர் உழவர்களின் பின் நிற்பவர்கள்.

> உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
> தொழுதுண்டு பின்செல்பவர் — குறள்

நிலத்தை உழுது நெல்லை விளைவிக்கவில்லை என்றால் மனித வர்க்கம் உயிர் வாழ்வதேது? ஆகவே, மனிதவர்க்கம் உழவர்களையே நம்பி வாழவேண்டியதாகிறது. உழவர்களோ, தங்கள் நிலத்தை உழுவதற்கும், தண்ணீர் இறைப்பதற்கும், போர் அடிப்பதற்கும், பாரத்தைச் சுமந்து செல்வதற்கும், நிலத்துக்கான உரம் அளிப்பதற்கும் இன்னும் பலப்பல விதங்களில் மாடுகளையே நம்பி வாழ்கிறார்கள்.

அப்படியானால் மாட்டினிடம் விவசாயிகள் எவ்வளவு நன்றி செலுத்துவார்கள் என்று சொல்லத் தேவையில்லை. ஆனால் பாரத நாட்டுப் பண்பாட்டில், நன்றிக்கு உகந்தவர்கள் எல்லாம் பக்திக்கு உகந்தவர்களே! அதனால்தான் கதிரவனை வணங்கிய பொங்கலுக்கு மறுநாள் மாட்டுப் பொங்கல் என்று மாட்டுக்குப் பூசை செய்கிறார்கள்.

பசுக்களிடம் நம்மவர்களுக்கு உள்ள பக்தியைச் சொல்லத் தேவையில்லை. "ஈன்றாளொடு எண்ணக் கடவுளும் இல்" என்றார் புலவர். கடவுளைவிட மிஞ்சியவள் தாய் என்றார். அந்தத் தாயின் பதவியில் பசுக்களை வைத்து, "கோ மாதா" என்று பூசிக்கும் பண்பாடு என்னவென்பது!



மாட்டுப் பொங்கல் திருநாளில் பசுமாடுகளையும் காளைமாடுகளையும் நம் கிராமங்களில் சிங்காரித்து அழகுபடுத்திப் பூசிப்பார்கள்.

கொம்புகளுக்கு வர்ணச் சாயம் பூசி, பட்டுக் குஞ்சலங்கள் கட்டி, கிண்கிணி சதங்கை அணிவித்து, நெற்றிக்குத் திலகமிட்டு, மலர் மாலை சூடி, கற்பூர ஆரத்தி எடுத்து, பொங்கல் படைத்து, அதன் கண்களில் மகிழ்ச்சி ததும்புவதைக் கண்டு உள்ளம் பெருமிதம் அடைவார்கள். அப்படிக் கண்களில் மகிழ்ச்சி ஒளி வீசும் மாட்டுக்கு, ஒரு மங்கை நல்லாள் திலகமிடும் அற்புதக் காட்சியை ஓவியர் மணியம் இவ்வாற அட்டைச் சித்திரமாக வழங்குகிறார்: இந்த அரிய சித்திரத்தை நாம் வெளியிடுவதில் பெருமிதம் அடைகிறோம்!

தமிழ்கூறும் நல்லுலகம் எங்கும் இப்படிப்பட்ட மகிழ்ச்சிப் பொங்கல் ஒவ்வொரு இல்லத்திலும் பொங்கப் பிரார்த்திக்கிறோம்.

# ராஜதந்திரமற்ற சமாதானம்

ஆங்கிலமும் ஹிந்தியும் ஆட்சி மொழியாக இருக்கலாம் என்று ராஜாஜியே சொல்லியிருக்கிறார். ராஜாஜி சமீபத்தில் வெளியிட்ட ஜனநாயகம் 'டெமோக்ரஸி' என்ற புத்தகத்தில் மேற்கண்டவாறு கூறியிருக்கிறார். "அதையேதான் நாங்கள் (சென்னை சர்க்கார்) கூறுகிறோம்" என்று திரு சி. சுப்பிரமணியம் சொல்லியிருக்கிறார்.

ராஜாஜி 'டெமோக்ரஸி' என்ற நூலில் மொழிப் பிரச்னையின் பல்வேறு அம்சங்களையும் சிக்கல்களையும் சர்ச்சை புரிந்திருக்கிறார். ராஜ்ய சர்க்காரின் மொழி, போதனு மொழி, மத்திய சர்க்காரின் மொழி ஆகிய பல பிரச்னைகளை விவாதித்து விட்டு, ஹிந்தியை ஆட்சி மொழியாகத் திணிப்பதால் பெருவாரியான மக்களுக்கு அநீதி இழைத்ததாகும் என்று சொல்லி, இருக்கிற நிலையில் ஹிந்தியும் ஆங்கிலமும் ஆட்சி மொழிகளாக ஏற்றுக்கொள்வது கூடியவரையில் நியாயமாகும் என்று கூறியிருக்கிறார். இது முக்கியமாக மத்திய சர்க்காரையும், ஹிந்தி வெறியர்களையும் மனத்தில் கொண்டு எழுதப்பட்டதாகும்.

## பொங்கல் எப்படி ?



பிரிட்டிஷ் பிரதமர் மாக்மில்லன், நேருஜியுடன் சம்பாஷணை நடத்தத் தில்லிக்கு வந்திருக்கிறார்.

# நல்ல சவாரி!




மந்திரி திரு சி. சுப்பிரமணியம் 'ஆட்சிமொழி சம்பந்தமாக ராஜாஜியைப் பின்பற்றுவதாகக் கூறியிருக்கிறார்.

---

"ஹிந்தி வேண்டாம்! ஆங்கிலமே மத்திய சர்க்காரின் மொழியாக இருக்கட்டும்!" என்று சொன்னால்தான் இந்த நிலை ஏற்பட முடியும். சென்னை ராஜ்ய சர்க்கார், ஹிந்தியைத் திணிப்பதால் ஏற்படக்கூடிய நஷ்டங்களையும் அநீதிகளையும் சொல்லி, தென்னாட்டின் உரிமையைப் பாதுகாப்பதற்குப் பதிலாகத் தாங்களே இருமொழி சமாதானத்தை எடுத்துச் சொல்லிச் சற்றும் ராஜதந்திரம் இல்லாத முறையில் நடந்து கொண்டிருக்கிறார்கள். ஹிந்தி வேண்டாம், ஆங்கிலமே மத்திய ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று போராடி வந்தால் ஹிந்தி வெறியர்களின் செல்வாக்கில் அகப்பட்டுக் கொண்டிருக்கும் மத்திய சர்க்கார் நியாயமான சமாதானத்துக்கு வருவார்கள். ஆங்கிலமும் ஹிந்தியும் இருக்கட்டும் என்று நம்முடைய சர்க்காரே சொல்லி விட்டால் மத்திய சர்க்கார் எந்த சமாதானத்துக்கும் ஒப்புக் கொள்ளாமல் ஹிந்தியே அரசியல் மொழி என்று பிடிவாதம் பிடிப்பார்கள்.

இந்த யுகத்தில் சாதாரண உரிமைகளுக்குக் கூட மத்திய சர்க்காரோடு ராஜதந்திரமான முறையில் போராட வேண்டிய நிலைமையில் இருக்கிறோம்!

ஒரு அணைக்கட்டுக்கும் ஒரு சிறு தொழிற்சாலைக்கும் நிச்சிக்குக் காவடி எடுத்தால்தான் கைகூடும் என்ற நிலையிலிருக்கிறோம்; பாரத ஜனநாயகத்தின் தென்வகுத்து மக்களின் உரிமைகளைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டிய மொழி போன்ற விஷயத்தில் எவ்வளவு உறுதியாகவும் ஜாக்கிரதையாகவும் இருக்க வேண்டும் என்பதைச் சொல்லத்தேவையில்லை.

இந்த முக்கியமான விஷயத்தில் சென்னை சர்க்கார் தமிழ் மக்களின் உரிமைகளைச் சாமர்த்தியமாகக் காப்பாற்றவில்லை.

எதிர்க் கட்சியார் சொல்ல வேண்டியதை-மத்திய சர்க்கார் சொல்ல வேண்டியதை—இவர்களே சொல்லித் தங்கள் நிலையைப் பலவீனப்படுத்திக் கொண்டு விட்டார்கள்.

'டெமோக்ரஸி' புத்தகத்தில் இந்தியும் ஆங்கிலமும் இருக்கட்டும் என்று சொன்ன ராஜாஜி அந்தப் புஸ்தகம் எழுதுவதற்கு முந்தியே ஆட்சி மொழிக் கமிஷன் முன்னிலையில் சாட்சியம் சொன்ன போதும், சமீபத்தில் ஆட்சி மொழியைப் பற்றிச் சென்னையில் கூடிய மகாநாட்டிலும் ஆங்கிலமே மத்திய சர்க்காரின் ஆட்சி மொழியாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். 'டெமோக்ரஸி' புத்தகத்தில் ராஜாஜி ஒரு மத்தியஸ்தர் நிலையில் நின்று எழுதியிருக்கிறார். மத்தியஸ்தர் நிலையில் நின்று எழுதுவதற்கு ராஜாஜிக்குப் பூரண உரிமை உண்டு. சென்னை சர்க்கார்

மத்தியஸ்தரின் பதவியை எடுத்துக் கொள்வது தவறு. தவிர ராஜாஜி இரு மொழிகள் பற்றிச் சொல்லியிருப்பதைச் சென்னை சர்க்கார் சரியாகப் பொருள் செய்து கொள்ளவில்லை. ஆபீஸ்களில் வேலை செய்யும்போது இரு மொழிகளை வைத்துக் குழப்ப வேண்டும் என்று ராஜாஜி சொல்லவில்லை. மத்திய சர்க்கார் அவ்வப்போது வெளியிடும் உத்தரவுகளையும் அறிக்கைகளையும் ஆங்கிலத்திலும் இந்தியிலும் இருந்தால் இரு சாராருக்கும் சமாதானமாக இருக்கும் என்று சொன்னார். இதைப் புரிந்து கொள்ளாமல், மிக சாமர்த்தியமாகப் பேசி விட்டது போல், தமிழ் மக்களின் உரிமைகளைக் கைவிட்டு விடுவதற்கு வழிதேடி விட்டார்கள் ராஜதந்திரமறியாத சென்னை அரசாங்கத்தார்.

ராஜாஜியின் யோசனைகளின்படி நடக்க வேண்டும் என்ற எண்ணமிருக்குமாயின், அந்தரங்க சுத்தியோடு ராஜாஜியைக் கலந்து யோசித்து முடிவு செய்திருக்கலாம்!

## சிறிய அணைகளும் உணவு உற்பத்தியும்

சமீபத்தில் கிருஷ்ணகிரிக்கு அருகில் பெண்ணாற்றுக்கு ஒரு அணை கட்டினார்கள். அதே பெண்ணாற்றுக்குச் சாத்தனூரில் ஓர் அணை கட்டித் திறந்து வைத்தார்கள். இப்பொழுது திருநெல்வேலி ஜில்லாவில் மணிமுத்தாறு திட்டம் முடிந்து திறந்து வைக்கப் பட்டிருக்கிறது.

இவை யெல்லாம், பக்ரா நங்கல் திட்டம், ஹிராகுட் திட்டம் போன்ற பெரிய திட்டங்களோடு ஒப்பிடும்போது மிக மிகச் சாதாரண சிறிய திட்டங்களாகும்; அணைகளாகும். ஆனால் இந்தப் பெரிய திட்டங்களில் இல்லாத ஒரு பெரும் சௌகரியம் இந்தச் சிறிய திட்டங்களில் உண்டு.

பெரிய அணைகளின் பாசனத்துக்கு வரும் நிலங்கள் புத்தம் புதிய நிலங்கள். காடுகளைத் திருத்தி நிலத்தைப் பண்படுத்திப் பயிர் செய்ய வேண்டியிருக்கிறது. ஒரு கிராமத்தில் வாழ்ந்து, அந்தக் கிராமத்திலேயுள்ள நிலங்களைப் பயிரிட்டுப் பழக்கப் பட்டுப் போன விவசாயிகள் புதிதாக விளைவுக்கு வரும் நிலத்தில் உழைக்கத் தயாராயில்லை. சொந்தக் கிராமத்தில் வேலையில்லாவிட்டால் சும்மாவாகிலும் இருக்கத் தோன்றுகிறதே தவிர வேறு ஊர்களுக்குச் சென்று பயிர் செய்ய முன் வர மறுக்கிறார்கள். பாரத நாட்டு விவசாயப் பெருமக்களைப் புது இடங்களில் குடியேற்றி உற்சாகமாக வேலைசெய்யும்படி செய்வது பெரும் கஷ்டமாக இருக்கிறது என்று விஷயம் அறிந்தவர்களெல்லாம் சொல்லுகிறார்கள்.

இந்த நிலையைப் பார்க்கும்போது, சிறு திட்டங்களால் பெரிய பயன் விளைகிறது என்றே சொல்ல வேண்டும். ஒரு போகம் விளைந்த நிலங்களில் இச் சிறு அணைத் திட்டங்களால் இரு போகம் விளைவிக்க ஏற்பாடு செய்ய முடிகிறது. சில இடங்களில் மூன்று போகங்கூட விளைவிக்க முடிகிறது. "உற்பத்தி பெருக வேண்டும்!" என்ற சூத்திரத்துக்குச் சிறு அணைத் திட்டங்கள் உடனடியாக நல்ல பயன் அளிக்கின்றன! சென்னை ராஜ்யத்தில் பெரிய அணைகள் கட்ட வாய்ப்பில்லையே என்று ஏங்காமல் சிறு அணைகள், சிறு திட்டங்கள் பல மேற்கொண்டு உணவு உற்பத்தியைப் பெருக்கலாம்! சென்னை ராஜ்ய சர்க்கார் இத் துறையில் பல அணைகள் நல்ல முறையில் சிக்கனமாகவும் கட்டி முடித்திருக்கிறார்கள்! அதே போல் இன்னும் பல ஊர்களில் பாசன வசதிக்குரிய சிறு திட்டங்களை மேற்கொண்டு உணவு உற்பத்திக்கு உதவ வேண்டும்.

## துயர் தீர உதவுங்கள்

இலங்கையில் பெய்த மழையின் காரணமாகவும் ஏரிகளின் உடைப்பின் காரணமாகவும் ஐம்பத்தைந்து கோடி ரூபாய் பெறுமானமுள்ள பொதுச் சொத்துக்கள் நஷ்டமடைந்திருப்பதாக அதிகாரபூர்வமான தகவல் வெளியாகியிருக்கிறது. தனி நபர்களின் சொத்துக்களின் சேதத்துக்கு ஒரு கணக்கில்லை. சுமார் மூன்று லட்சம் மக்கள் வீடு வாசல் இழந்து தவிப்பதாகச் சொல்லப் படுகிறது. வெள்ளம் காரணமாகச் சிதைந்து சீரழிந்து போன ரயில் பாதைகளைச் செப்பனிட இரண்டு மாதகாலம் பிடிக்குமாம்!

இவை யெல்லாவற்றையும்விட உள்ளத்தை நெகிழ வைக்கும் செய்தி ஒன்றிருக்கிறது. உடைப்பெடுத்துக் கொண்ட ஏரிகளின் தண்ணீர் முழுதும் வெளியே போய்விட்டதால், ஏரிகள் வறண்டுபோய், பாசனத்துக்குத் தண்ணீர் இல்லாமல் கஷ்டப்பட நேரும் என்று வேறு சொல்கிறார்கள். இப்பொழுது படும் கஷ்டம் போதாதென்று எதிர்காலத்திலும் வயல்களுக்குத் தண்ணீரின்றி உணவு உற்பத்தி தடைப்பட்டுக் கஷ்டங்கள் பெருகுவதற்கான அறிகுறிகளைத்தான் இலங்கை சர்க்காரும் மக்களும் காண்கிறார்கள்.

இலங்கையின் நிலையைக் கண்டு இந்தியா, ஜப்பான், நேப்பாளம், செஞ்சிலுவைச் சங்கம் உதவியிருக்கின்றன. இந்தியா உடனடியாகச் செய்த உதவிக்கு, இந்தியாவிலுள்ள இலங்கைத் தூதுவர் ஸர் ரிச்சர்டு அலுவிஹாரா நன்றி தெரிவித்திருக்கிறார்.

இலங்கை மக்களின் துயரைத் தீர்ப்பதற்கு இந்த உதவி போதாது. இன்னும் எவ்வளவோ தேவைப் படுகிறது. இந்தியாவில் இலங்கைக்கு உதவ ஆர்வம் கொண்டுள்ள ஈகை மனம் படைத்த வள்ளல்கள் சென்னையிலுள்ள மகாபோதி சங்கத்தின் தலைவருக்குத் தங்களாலான பொருளுதவியை அனுப்பி வைக்கலாம்.

அவர் விலாசம்: ஸ்ரீ பி. ஞானந்த தேரோ, தலைவர், இலங்கை வெள்ள நிவாரண சகாய நிதிக்குழு, மகாபோதி சங்கம், சென்னை-3.

# அருள் வாக்கு

உபநிஷத்துக்களிலும், தர்ம சாஸ்திரங்களிலும் 'இஷ்டம்', 'பூர்த்தம்' என்ற வார்த்தைகள் அடிக்கடி வரும். இஷ்டம் என்பது யாகத்தையும், அது சம்பந்தமான காரியங்களையும் குறிக்கும். பூர்த்தம் என்பது மண் வெட்டுவது போன்ற செயல்களைக் குறிக்கும். யக்ஞம் ஹோமம் போன்ற கிரியைகள் செய்வதென்றால், கடுமையான ஆசார-அனுஷ்டானங்கள் அவசியம். ஆனால் 'பூர்த்தம்' என்ற வார்த்தை குறிக்கும் பணியை எல்லோரும் செய்யலாம்.

கோயில் தேர் இழுப்பதில் உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள், பணக்காரர், ஏழைகள் எல்லோரும் கலந்து கொள்ளுகின்றனர். அவ்வாறே 'பூர்த்தம்' என்ற மேலே குறித்த பலவிதப் பணிகளில் எல்லோரும் பங்கெடுத்துக் கொள்ளலாம், பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய பணிகளில் சரீர உழைப்பு பிரதானம். கடவுள் நமக்கு ஆரோக்கியமான சரீரம் கொடுத்திருக்கிறார். அவருக்கு நன்றி தெரிவிக்க நாம் சரீரத்தினால் உழைக்க வேண்டும். உதாரணமாக, பொதுவில் ஒரு குளம் வெட்டப்படுகிறதென்றால், பணக்காரர்களும், உயர்ந்த அந்தஸ்தில் இருப்பவர்களும் கூடச் சில கூடைகளாவது மண் வெட்டிக் கொட்ட வேண்டும்.

தென்னிந்தியக் கோயில்களில் பல அருமையான சிலாசாஸனங்கள் இருக்கின்றன. இவ்வாறே ராஜஸ்தானில் கிணறுகளில் இத்தகைய சாஸனங்கள் காணப்படுகின்றன. ராஜஸ்தான் பாலைவனத்தில் தண்ணீர் கிடைப்பது மிக அரிது. ஒரு கிணறு இருக்குமிடத்துக்கு ஐந்து அல்லது ஆறு மைல் சுற்றளவில் இன்னொரு கிணறு பார்க்க முடியாது. இந்தக் கிணறுகள் ஜனங்களின் கூட்டு உழைப்பால் வெட்டப்பட்டவை என்பது அந்தச் சாஸனங்களில் இருந்து தெரிகிறது. தண்ணீர் அரிதாகவும், பூமி வளமற்றதாகவும் உள்ள இடங்களில் பிறக்கும் ஜனங்கள் நல்ல உழைப்பாளிகளாக இருப்பதைப் பார்க்கிறோம். அவர்கள் மற்றப் பிரதேசங்களுக்குச் சென்று தங்கள் கடுமையான உழைப்பின் மூலம், அந்தப் பிரதேசவாசிகளையும் விடப் பெரிய தனவந்தர்களாகின்றனர். மார்வாரி வகுப்பைச் சேர்ந்தவர்கள் நாட்டின் எல்லாப் பாகங்களிலும் தொழில் நடத்தி நிறையப் பணம் சம்பாதிப்பதன் காரணம் அதுதான். பிரிட்டிஷாரும் முன்பு உலகின் பல பகுதிகளுக்குச் சென்று அவற்றைத் தங்கள் ஆதிக்கத்துக்குள்ளாக்குவதில் துணிவு காட்டியதற்குக் காரணம், அவர்களது சொந்த நாட்டில் போதிய பூமி வளம் இல்லாதது தான். தட்டில்லாமல் தண்ணீரும், வளமான பூமியும் உள்ள இடங்களில் ஜனங்கள் சோம்பேறிகளாகி விடுகின்றனர்.

ஏதாவது ஒரு பொதுக் காரியத்துக்காக வாரத்தில் அரைமணி அல்லது ஒரு மணி நேரம் சரீரத்தால் உழைப்பதென்று நீங்கள் ஒவ்வொருவரும், உறுதி கொள்ள வேண்டும். எவ்வளவோ பொதுக் காரியங்கள் இருக்கின்றன. நகரங்களில் தெருக்களைச் சுத்தம் செய்வது, கோயில்களை அல்லது குளங்களைச் சுத்தப்படுத்துவது, கோயில் தோட்டங்களில் புஷ்பச் செடிகள் நடுவது அல்லது அவைகளுக்குத் தண்ணீர் விடுவது போன்ற ஏதாவது ஒரு பணியில் ஈடுபடலாம். எங்காவது ஒரு கோயில் கட்டப்பட்டால், நாமே வலுவில் செங்கல்லைத் தூக்கிக் கொண்டு போய்க் கொத்தர்களிடம் கொடுக்க முன்வரலாம். இப்படிச் சரீர உழைப்பில் நாமாக ஈடுபட்டால், நம் மனத்தில் காருண்ய உணர்ச்சி தானாகப் பெருக்கெடுத்து, நமக்கும் நமது சக ஜீவன்களுக்கும் உள்ள உறவு வலுப்படுகிறது. அகம்பாவம், கர்வம் போய் சமத்துவ உணர்ச்சி ஏற்படுகின்றது. மனத்திலுள்ள மாசுகள் விலகி, அதில் பரமாத்மா வந்து குடிகொள்வதற்குத் தக்க பக்குவம் ஏற்படுகிறது.



ஸ்ரீ சங்கராச்சாரியார் காஞ்சி காமகோடி பீடம்.

# இதுவன்றோ விழா!

மேலே குறிப்பிட்டாற்போல் எத்தனையோ விழாக்களைப் பற்றி எண்ணியிருக்கிறோம். விழாவின் கோலாகலத்தைப் பார்த்தும், நினைத்தபடி எல்லாம் ஒரு குறையுமின்றி விழா நடந்திருப்பதை நினைத்தும் எவ்வளவோ தடவைகள் 'இதுவன்றோ விழா' என்று எண்ணியிருக்கிறோம்! ஆனால் இந்தத் தடவை நாம் அந்தப் பொருளில் கூறவில்லை! அதைவிடச் சற்று அதிகமான பொருளில் ''இதுவன்றோ விழா!'' என்கிறோம். அல்லது இந்தத் தடவைதான் இதுவன்றோ விழா என்பதைச் சரியான பொருளில் உபயோகித்திருக்கிறோமோ என்று தோன்றுகிறது.

யாருக்காவது அறுபதாண்டு நிறைவு விழா நடக்கிறது என்றால், அவர் அந்த விழாவில் முக்கிய பாகம் வகிப்பார். அவர் முன்னிலையில் தான் எல்லோரும் பாராட்டுரைகள் வழங்குவார்கள். இதுதான் சம்பிரதாயம்.

ஆனால் ராஜாஜி தமது பிறந்த நாளைக் கொண்டாடக் கூடாது; தமக்குப் பிறந்த நாளே தெரியாது என்றெல்லாம் பிடிவாதமாகச் சொல்லி வந்ததினால் யாரும் ராஜாஜியின் பிறந்த தினத்தைக் கொண்டாட அவருடைய அனுமதி கேட்பதில்லை; ராஜாஜியையும் அழைப்பதில்லை. ராஜாஜி இன்றியே இத்தனை வருஷங்களும் பிறந்த தின விழா நடைபெற்று வந்திருக்கிறது; இது ராஜாஜி ஜெயந்தி விழா சம்பந்தமாக ஒரு சம்பிரதாயமாக இருந்து வந்தது.

ஆனால் 1958-ம் வருஷம் ஜனவரி 1-ம் தேதி நடைபெற்ற ராஜாஜி ஜெயந்தி விழாவில் ராஜாஜியே கலந்து கொண்டார்! எப்படி? யாரும் அழைக்காமல் தாமாகவே வந்து கலந்து கொண்டார். விழா ஆரம்பமானவுடனேயே யாரும் எதிர்பாராத விதமாக வந்து விட்டார். அப்பொழுது சபையில் எழுந்த கரகோஷம் வான்முகட்டையே எட்டி விட்டது. மேடையில் வீற்றிருந்த பேச்சாளர்களுக்குச் சற்று அச்சம் கலந்த சந்தோஷம் பொங்கியது. ராஜாஜியை வைத்துக் கொண்டே அவரை எப்படிப் பாராட்டிப் பேசுவது என்பதுதான் அவர்கள் அச்சம். எனினும் யாரும் அழைக்காமலே ராஜாஜி வந்து கலந்து கொண்டது எல்லாருக்கும் அளவுகடந்த மகிழ்ச்சி அளித்தது! ஆனால் பேச்சாளர்கள் ஒவ்வொருவரும் தங்கள் உள்ளத்தில் பட்டதை அப்படியே மெய்யுருகும்படி பேசினார்கள். அதனால் யார் யாரைவிட நன்றாகப் பேசினார்கள் என்று சொல்வதற்கே வழியில்லாமற் போய்விட்டது.

அன்றைய விழாக் காட்சிகளையும், அந்த விழாவில் பேசிய தலைவர்களையும் இதே இதழில் வெளியாகியிருக்கும் படங்களில் காணலாம். இந்தப் படங்களில் உள்ளவர்களைத் தவிர, திரு காஸா சுப்பாராவ், திரு கி. வா. ஜகந்நாதன், திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர் ஆகியோரும் ராஜாஜியின் பெருமையைப்பற்றிக் கூறினார்கள்.

எல்லோரும் பேசி முடித்தபிறகு ராஜாஜி பேசினார். அதில்தான் தாம் விழாவுக்கு வர நேர்ந்ததின் ரகசியத்தை வெளியிட்டார்.

ராஜாஜியும் நவரத்ன ராமராவ் அவர்களும் பால்ய நண்பர்கள். அவர்கள் நட்புக்கு இன்று 65 வயதாகிறது! பள்ளிக்கூட நாட்களிலிருந்து இணைபிரியாத நண்பர்கள்; ராஜாஜி தமக்கும் ஸ்ரீ ராமராவுக்கும் உள்ள நட்பைப் பற்றிக் குறிப்பிடும்போது 'காதல் நட்பு' என்றார். அப்படியானால் அவர்கள் நட்பின் தன்மையை ஊகித்துக்கொள்ளலாம்: ராஜாஜி கல்லூரி படிப்பு முடித்துக் கொண்டு சேலத்தில் வக்கீல் தொழில் ஆரம்பித்தார்; ராஜாஜி சேலத்திலிருக்கிறாரே என்று ஸ்ரீ ராமராவும் அடுத்த வருஷமே சேலத்துக்கு வந்து வக்கீல் தொழில் ஆரம்பித்தார். பிறகு ராமராவ், தாசில்தாராகி, கலெக்டராகி, சர்க்கார் காரியதரிசியாகி, தொழில் துறை டைரக்டராகி சர்க்கார் உத்தியோகஸ்தராக ஓய்வு பெற்றார். ஆனால் ராஜாஜியின் வாழ்க்கை முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது! அதனால் என்ன? அவர்கள் நட்பு பழையபடியே வளர்ந்து வந்தது! இன்னும் நெருக்கமாகவே வளர்ந்தது. இந்த நட்பின் காரணமாக ஸ்ரீ ராமராவ் தலைமை வகிக்கிறார் என்றவுடன் அது தமது ஜெயந்தி விழாவாயிற்றே என்பதையும் பொருட்படுத்தாமல் விழாவுக்கு வந்திருக்கிறார்.

ஸ்ரீ ராமராவ் அவர்கள் தமது தலைமையுரையில் ராஜாஜி தமது நெருங்கிய நண்பரென்றாலும், அவரை, இந்தியாவின் அறிவு செறிந்த ராஜதந்திரி மட்டுமல்ல, உலகின் தலைசிறந்த ராஜதந்திரி, நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டவர், இலக்கிய கர்த்தா, சிக்கலான பிரச்னைகளுக்குப் பரிகாரம் கண்டுபிடித்தவர், தத்துவ ஞானி என்றே தாம் குறிப்பிட விரும்புவதாகச் சொன்னார்! ஸ்ரீ ராமராவ் ராஜாஜி அவர்களைப்பற்றிப் பேசிய பண்பை எழுத்திலே எடுத்துக் காட்ட முடியாது. இந்த இரு நண்பர்களையும் நேரில் பார்த்தவர்கள் 'காதல் நட்பி'ன் உண்மையை அறிந்து கொண்டவர்கள்.

இந்த விழா இவ்வளவு சிறப்பாக அமைந்ததற்கு முக்கிய காரணஸ்தர்கள் ஸ்ரீ டி. எஸ். ராமஸ்வாமி அய்யர் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்ட ராஜாஜி ஜெயந்தி விழாக் குழுவைச் சேர்ந்த திரு விசுவநாதன், திரு சீனிவாசன் முதலிய இளைஞர்கள்தான். அவர்களுடைய இடைவிடா உழைப்பையும் உற்சாகத்தையும் எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

சென்னை நகரப் பெருமக்கள் ரஸிகரஞ்சனி சபா மண்டபத்திலும், வெளியிலும், பெருந்திரளாக ஆரம்பத்திலிருந்து முடிவு வரையில் கேட்டனர். அத்துடன் வாழ்க்கையின் பல்வேறு துறைகளில் ஈடுபட்டவர்கள் ராஜாஜியைப் பாராட்டினர். இதையெல்லாம் பார்க்கும்போது, ஒரு எண்ணம் உதித்தது: பட்டத்திலும் பதவியிலும் ராஜாஜி இல்லாத நிலையில் இவ்வளவு மகத்தான கூட்டம் நடைபெற்றிருக்கிறது. பதவியோ பட்டமோ இல்லாத நிலையில் ராஜாஜிக்குத் தவிர வேறு யாருக்கு இவ்வளவு சிறப்பாகப் பாராட்டு விழா நடக்க முடியும் என்று யோசித்தோம்; விடையே கிடைக்கவில்லை.







# பழமையும் புதுமையும் கோ-ஆப்டெக்ஸில் ஒருங்கே இணைந்திருக்கிறது



ஒவ்வொரு குடும்பமும் விரும்பும் ஆடை





உங்களுக்குச் சமீபத்திலுள்ள விற்பனை நிலையத்துக்கு விஜயம் செய்து, பொங்கல் பண்டிகையை உத்தேசித்து 4% விசேஷ விலைக் குறைவையும், 6 நயா பைசா விலைத் தள்ளுபடியையும் பயன்படுத்திக் கொள்ளுங்கள்

* புடவைகள்
* வேட்டிகள்
* லுங்கிகள்
* படுக்கை விரிப்புகள்
* அலங்கார துணிகள்
* டவல்கள்
* சோளிகள்

## கோ-ஆப்டெக்ஸ்
## கைத்தறி ஆடைகள்

சென்னை ராஜ்ய கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்
34/A-1, பாந்தியன் ரோடு, எழும்பூர், சென்னை - 8

SISTAS - MH-1




1958-ம் வருஷம் கோலாகலமாக ஆரம்பமாகியது. ராஜாஜி பிறந்த தின விழா கொண்டாடுவதற்கு டி. எஸ். ராமஸ்வாமி அய்யர் அவர்கள் தலைமையில் நிறுவப்பட்டிருந்த குழுவினர் ஜனவரி முதல் தேதியன்று சென்னை ரசிக ரஞ்சனி சபா ஹாலில் ராஜாஜி ஜெயந்தி விழாவை ராஜாஜியின் பால்ய நண்பர் பங்களூர் ஸ்ரீ நவரத்ன ராம ராவ் அவர்கள் தலைமையில் வெகு விமரிசையாகக் கொண்டாடினர்.

1. தலைவர் நவரத்ன ராம ராவ் ராஜாஜிக்குக் காஷ்மீரச் சால்வையை வழங்குகிறார். இரு நண்பர்கள் முகத்திலும் குதூகலம் பொங்கியது. 2. பிரார்த்தனை கீதத்துடன் விழா ஆரம்பமாகியது. 3. டி. கே. ஷண்முகம் அமைதியுடனும் அழகோடும் பேசினார். 4. பி. டி. ராஜன் மக்கள் உள்ளத்தில் குமுறிக் கொண்டிருக்கும் பாஷைப் பிரச்னையைக் குறிப்பிட்
இந்த இக்கட்டான நி
சமாளிப்பதற்கு ர
தான் உகந்த
என்றார். 5.
ராஜாஜிக்கு எவ்வ
பும் மரியாதை

# ராஜாஜி ஜெயந்தி விழா





இறது என்பதைப் பெருமிதத்தோடு கூறினார் ம. பொ. சி. 6. ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான், கண்ணாரக் காண ஒரு கடவுளாக விளங்குகிறார் ராஜாஜி என்று கூறினார். 7. திரு எஸ். மகராஜன் ஒரு கதையை விளக்கினார். 8. ஸ்ரீமதி மோனிகாபெல்டன் உலகுக்கு உரியவர் ராஜாஜி என்றார். 9. க. சந்தானம் தமது அன்பைத் தெரிவித்தார். 10. தலைவர் நவரத்ன ராமராவ் தலைமையுரை நிகழ்த்துகிறார். 11. இஞ்சிக்குடி பிச்சைக்கண்ணு அவர்களின் இனிய நாதஸ்வரத்துடன் விழாத்தொடங்கியது. 12. கல்கி அதிபர் ஸ்ரீ சதாசிவம் ராஜாஜிக்கு மலர்மாலை அணிவிக்கிறார். 13. ஸ்ரீமதி ருக்மிணி தேவி. 14. கல்வி மந்திரி சி. சுப்பிரமணியம், 'மக்களுக்கு வழிகாட்டி' என்றார். 15. மைசூர் முதன் மந்திரி ஸ்ரீ நிஜலிங்கப்பா தமது பெருமதிப்பைத் தெரிவித்துக் கொண்டார். 16. பேராசிரியர் அ. சீநிவாசராகவன் 'கல்லாத கலைஞர், வேதக் கடல்' என்றார். 17. ராஜாஜி எல்லாருக்கும் தமது அன்பையும் ஆசியையும் அருளினார்.



இன்ப மயமான மேலுலகம் அடைவதற்கு வழி துறவு என்று நம்முடைய மக்கள் எண்ணுவார்கள். துறவு மார்க்கம் கஷ்டமான மார்க்கம். வள்ளுவர் சொல்லுகிருர்: இல்வாழ்க்கையில் அன்பின் மகிழ்ச்சியை அனுபவித்து, அதாவது அன்பு தந்தும் அன்பு பெற்றும் இவ்விரு வகையிலும் இன்பம் இவ்வுலகில் அடைந்து, அறத்தோடு கலந்து வாழ்ந்த இல்வாழ்க்கையின் பயனை மேலுலகம் அடைவது. துறவு மார்க்கத்தினுள் கஷ்டம் நீங்கிய இன்ப மயமான முறை.

பரலோகத்துக்கு இரண்டு வழிகள்: ஒன்று கடின முறையான துறவும் தவமும்; மற்ருென்று அறம் வழுவாத இல்வாழ்க்கை. இல்வாழ்க்கையின் சிறப்பு என்னவென்ருல், பரலோக இன்பத்துக்கு வழியாவதுடன் அது இகத்திலும் இன்பம் தரும் வழியாகும்.

அன்புற்று அமர்ந்த
வழக்கென்ப வையகத்து
இன்புற்ருர் எய்தும் சிறப்பு.

இல்லறத்தின் மூலம் இப் பிறவியில் இன்பம் அடைந்து பரலோகத்திலும் இன்பம் அடையலாம். இவ்வளவு சிறப்புப் பொருந்திய இல்வாழ்க்கைக்கு இன்றியமையாதது அன்பு. தவம் செய்து துன்பப்பட்டுப் பிறகு அடையும் பரலோக இன்பத்தை, அந்தத் துன்பம் இல்லாமலே, இகத்திலும் இன்பம் அடைந்து கொண்டே இல்வாழ்க்கையின் மூலம் பெறலாம். அந்த விதமான இல்வாழ்க்கை அன்பு நிறைந்திருந்தால்தான் உண்டு.

அன்பு ஈனும் ஆர்வம்
உடைமை அதுஈனும்
நன்புஎன்னும் நாடாச் சிறப்பு.

இல்லற வாழ்க்கையில் செலுத்தும் அன்பானது, சமயத் துறையில் பக்திக்கு ஒரு பயிற்சியாகும். (ஆர்வம் என்ருல் பக்தி. ஈனும் என்ருல் தரும்.) அந்த இல்லற வாழ்க்கைப் பயிற்சி முதிர்ந்து, இறைவனிடம் பக்தி செலுத்தினேமானுல் அந்தப் பக்தியே முதிர்ந்து ஞானமாகும். ஞானம், மெய்யறிவு, ஈசுவர தரிசனம் இவை மூன்றும் ஒன்றே. அதுவே முக்தி. இது பெரியோர் கொள்கை.

நன்பு என்ருல் ஞானம். நாடாச் சிறப்பு—அளவிறந்த, அரிய ஆராய்ச்சிக்கு அடங்காத பேறு, அதாவது வீடு. "சிறப்பீனும், செல்வமும் ஈனும்" என்கிற குறளிலும், "பிறப்பென்னும் பேதைமை" என்கிற குறளிலும், வீடு என்ற பொருளில் 'சிறப்பு' என்ற சொல் வருகிறது.

இந்தக் குறளின் இரண்டாவது அடியில் முதலாவது சொல் 'நன்பு' என்று மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது. பழக்கத்தில் இருந்து வரும் பாடம் 'நண்பு.' முதலாழ்வார்களுள் ஒருவராகிய பூதத்தாழ்வார் அருளிய அந்தாதியில் முதலாவது பாட்டைப் பார்த்தால், இந்தக் குறளுக்கு நெருங்கிய தொடர்பை அதில் காணலாம். அந்தப் பாட்டில் 'நன்பு' என்னும் சொல் ஞானம் என்கிற பொருளில் வைத்துப் பாடியிருக்கிருர்.

அன்பே தகளியா
ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை
இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக்கு
ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த
நான்

ஆர்வம் என்பதற்கு வியாக்கியானம், அன்பினுடைய இரண்டாவது பருவம். நன்பு என்பது ஞானம். (பெரியவாச்சான் பிள்ளை)

அன்பினுல் ஆர்வம் உண்டாகும், ஆர்வத்தினுல் நட்பு அல்லது சிநேகம் உண்டாகும் என்று சொல்வதில், நான் ஒரு விசேஷமும் காணவில்லை. ஆகையினுல் நட்பைக் குறிக்கும் "நண்பு" என்கிற சொல்லுக்குப் பதிலாக, "நன்பு" என்று வைத்துக் கொள்வது பொருத்தமாக நினைக்கிறேன். இந்தக் குறளுக்குப் பழைய உரை ஒன்றில் "அன்பு, ஆர்வம் என்று சொல்லப்பட்ட ஞான நேயத்தைக் கொடுக்கும். அந்த ஞான நேயம் பிறவா நெறியாகிய முக்தியைக் கொடுக்கும்" என்று சொல்லப் பட்டிருக்கிறது. பரிதியாருடைய உரையிலும் இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வுரைகள் நான் தந்திருக்கும் பொருளுக்கு ஆதரவு தரும்.

# ஜனவரி 24உ முதல்




டைரக்‌ஷன்:

**Ch. நாராயணமூர்த்தி B.A.**

இசை: வேதா... வசனம்: விந்தன்... காமெரா: பிரகாஷ்

தரம் அய்யர், சென்னை ● வட ஆற்காடு, தென் ஆற்காடு, செங்கற்பட்டு, சித்தூர்
M. LTD., சென்னை-14 ● மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி கன்யாகுமரி:
ரிப்யூட்டர்ஸ், மதுரை ● கோயம்புத்தூர், நீலகிரி: சந்திரபிரபா பிக்சர்ஸ்
கூடகு: விக்ரம் பிக்சர்ஸ், பெங்களூர் ● F. M. S.: கீத ஆர்கனிசேஷன்
ங்களுக்குப் பூரண உரிமையாளர்கள்: A. V. M. LTD., சென்னை-14




விவசாயத்துக்கும் கால்நடைகளுக்கும், காடுகளுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. பாரதத்தில் எப்பொழுதுமே நிலத்தை உழுவதற்கும், கிணற்றிலிருந்து தண்ணீர் இறைப்பதற்கும், தானியத்தைச் சந்தைக்குக் கொண்டு போவதற்கும், கிராமவாசிகளை வண்டியில் ஏற்றிப் போவதற்கும் காளை மாடுகள்தான் உபயோகப்பட்டிருக்கின்றன. ஆண் எருமைகளும் ஓரளவு இவ்வேலைகள் செய்கின்றன. இதர நாடுகளில்போல் குதிரைகள் இவைகளுக்கு அதிகமாக உபயோகிக்கப் படவில்லை. சில இடங்களில் ஜட்கா, யக்கா வண்டிகளுக்கும், சவாரி செய்வதற்குமே, பிரயோசனப்பட்டு வருகின்றன. ஒட்டகங்கள் சிற்சில இடங்களில் வண்டி இழுப்பதற்கும், சாமான்களைத் தூக்கிச் செல்வதற்கும் உதவுகின்றன. காடு நிறைந்த இடங்களில் யானைகள்கூடச் சேவை செய்து வந்தன. ஆனால், இந்திய விவசாயம் காளை மாட்டின் மூலமாகவே முக்கியமாக நடைபெற்று வந்தது; இன்றும் நடைபெறுகிறது.

மாமிசம், முட்டை இந்நாட்டில் மிகவும் குறைந்த அளவிலேயே புசிக்கப்படுகிறது என்று முன்னொரு பகுதியில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதனால் ஆரோக்கியத்துக்குப் பால், வெண்ணெய், தயிர் முதலியவற்றின் ஸ்தானம் இதர நாடுகளைக் காட்டிலும் இத்தேசத்தில் உயர்ந்தது.

எண்ணிக்கையளவில் பாரதம் மாட்டுச் செல்வம் மிகுந்த தேசமாகும். பின்வரும் புள்ளி விவரங்களிலிருந்து இது தெளிவாகும்.

| தேசம் | மாடுகள் (1000) | ஆடுகள் (1000) |
|---|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 96592 | 31582 |
| ஆஸ்திரேலியா | 15836 | 130849 |
| பிரிட்டன் | 10688 | 22949 |
| பிரான்ஸ் | 17322 | 8013 |
| மேற்கு ஜெர்மனி | 11521 | 1226 |
| ஜப்பான் | 2919 | 780 |
| பாரதம் | 155099 | 38829 |

இதர நாடுகளில் காளை மாடுகளை மாமிசத்துக்காகவும், பசுக்களைப் பாலுக்காகவும் வளர்க்கிறார்கள். மாட்டு மாமிசம் பாரதத்தில் புசிக்கப் படுவதில்லை. ஆதலால் நமது மாடுகளில் ஒரு பாகம் வயதாகி எவ்விதத்திலும் பயன்படக் கூடாதனவாக இருக்கின்றன. உபயோகமுள்ள மாடுகளின் தீனியைப் பங்கு போட்டுக் கொள்கின்றன. ஆதலால், பசுவைக் காமதேனு என்றும், காளை மாட்டை நந்தியின் சந்ததிகளென்றும் போற்றி வணங்கும் இந்தியாவிலிருப்பதுபோல் துர்ப்பலமான மாடுகள் வேறெங்குமில்லை என்று கால்நடை நிபுணர்கள் கூறுகின்றனர். கிணறுகளிலிருந்து நீர் இறைப்பதற்கு மின்சாரத்தாலும், மண்ணெண்ணெயாலும் செலுத்தப்படும் மோட்டார் பம்புகள் பெருகி வருகின்றன. மோட்டார் பஸ்களும், லாரிகளும் வண்டி வேலைகளைக் குறைத்து வருகின்றன. வெறும் உழவுக்கு மட்டும் கோடிக்கணக்கான மாடுகளை வைத்துப் போஷிக்க முடியுமா என்ற பிரச்னை நாளுக்கு நாள் கடினமாகி வருகிறது. பெரும்பாலும் இந்திய விவசாயம் சிறிய பண்ணைகள் மூலம் நடைபெறுவதால் டிராக்டர் முதலிய இயந்திரங்கள் மூலம் நடத்துவதும் எளிதாகத் தோன்றவில்லை.

பாரதத்தின் பால் சுமார் 204 லக்ஷம் பசுக்களிடமிருந்தும் 119 லக்ஷம் எருமைகளிடமிருந்தும் கிடைக்கிறது. வருஷாந்திர உற்பத்தி 5203 லக்ஷம் மணங்குகள் என்று கணக்கிடப்படுகிறது. இந்திய மக்களுக்குத் தலைக்கு 7 அவுன்ஸ் பால் கிடைக்கிறது. இதைப் பாதி பாலாகவும், பாதி நெய்யாகவும் உபயோகிக்கிறோம்.

மற்ற நாடுகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்குப் பின்வரும் புள்ளி விவரங்கள் உதவும்.

பால் உற்பத்தி (மெட்ரிக் டன்களில்)

| தேசம் | உற்பத்தி (1000 டன்கள்) |
|---|---|
| அமெரிக்க ஐக்கியநாடு | 56043 |
| ஆஸ்திரேலியா | 6138 |
| பிரிட்டன் | 10810 |
| பிரான்சு | 18702 |
| மேற்கு ஜெர்மனி | 17347 |
| ஜப்பான் | 992 |
| பாரதம் | 19408 |

ஜப்பானைத் தவிர இதர நாட்டு மக்கள் உட்கொள்ளும் பாலில் இந்தியனுக்கு 5-ல் ஒரு பாகத்துக்குக் குறைவாகவே கிடைக்கிறது. வெளி நாடுகளில் பசும்பாலே அதிகம். இந்தியாவில் பாதிப் பால் எருமைகள் கொடுக்கின்றன. பால் கொடுக்கும் பசுக்கள், எருமைகள், உழக்கூடிய மாடுகள் இவற்றின் எண்ணிக்கை ராஜ்யவாரியாகப் பின்வருமாறு:

[1956 புள்ளி விவரங்கள்]

| ராஜ்யம் | கறவைப்பசு 1000 | கறவை எருமை 1000 | உழவுமாடு 1000 |
|---|---|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 1376 | 1525 | 4429 |
| அஸ்ஸாம் | 964 | 81 | 1663 |



| | | | |
|---|---|---|---|
| பீகார் | 1795 | 794 | 6168 |
| பம்பாய் | 2542 | 1748 | 8358 |
| கேரளம் | 398 | 63 | 571 |
| மத்தியப் பிரதேசம் | 3051 | 1042 | 7859 |
| மதராஸ் | 1133 | 542 | 3841 |
| மைசூர் | 1186 | 757 | 3247 |
| ஒரிஸ்ஸா | 863 | 125 | 3104 |
| பஞ்சாப் | 974 | 1214 | 2252 |
| ராஜஸ்தானம் | 1759 | 893 | 3464 |
| உத்தரப்பிரதேசம் | 2387 | 2790 | 11772 |
| மேற்கு வங்காளம் | 1421 | 84 | 3960 |

காடுகள் நாட்டின் செழுமையைப் பலவிதங்களில் பெருக்குகின்றன. காடுகளுக்கும் மழைக்கும் சம்பந்தமுண்டு. காடுகள் நிறைந்த இடங்களுக்கு மேல் வானத்தில் மேகங்கள் குளிர்ந்து மழை பெய்கின்றன. மழை ஜலமும் காடுகளின் மரங்களின் அடிவாரங்களில் தங்கித் தரைக்குள் புகுந்து பக்கத்துப் பிரதேசங்களில் பரவுகின்றன. அதனால் கிணறுகளில் ஊற்றுப் பெருகி அப்பிரதேசங்களின் நீர்வளம் அதிகரிக்கின்றது. கோடை காலங்களில் மாடுகள் மேய்வதற்குக் காடுகள் வசதியளிக்கின்றன. வீட்டுக்கும், விறகுக்கும் வேண்டிய மரங்கள் மூங்கில்கள் கொடுப்பதோடு, அரக்கு செய்யும் லாக்ஷம், காசிக் கட்டி, பீடி செய்யும் தெந்து இலையும், பலவித உணவுப் பொருள்களும் காடுகளில் கிடைக்கின்றன. சில இடங்களில் காடுகளிலிருந்து சர்க்காருக்குக் கிடைக்கும் வருமானம் விவசாய நிலத்திலிருந்து கிடைப்பதற்குச் சமானமாகவும், அதிகமாகவும்கூட இருக்கின்றது.

காடுகள் அழிந்து போவதால் மலைப் பிரதேசங்களிலிருக்கும் செழிப்பு நிலத்தின் மேல்பாகம் மழை நீரால் கரைத்துக் கொண்டு போகப்பட்டு, ஆறுகள் மூலமாகக் கடலில் தள்ளப்படுகின்றன. அதனால் மலைப் பிரதேசங்கள் எவ்வித சாகுபடிக்கும் பிரயோசனம் அற்ற பாறை நிலங்களாகி விடுகின்றன. மத்தியப் பிரதேசத்தில் இவ்விதம் ஏற்பட்டிருக்கும் நஷ்டத்தைக் கணக்கிட முடியாது. ராஜஸ்தானத்தில் பாலைவனம் பெருகியதன் காரணமும் காடுகளின் அழிவே என்று கூறப்படுகின்றது.

இந்தியாவில் மொத்த விஸ்தீரணத்தில் 21·11%, அதாவது 280,162 சதுர மைல்கள் காடுகளின் பரப்பு. நூற்றுக்கு 30 விகிதம் இருந்தால் நலமென்று நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆயினும் காடுகளின் மொத்த விஸ்தீரணம் அதிகக் குறைவில்லை என்றே கூறலாம். ஆனால் இந்தக் காடுகள் தேசமெங்கும் சமமாகப் பரவியிருக்கவில்லை. சில பிரதேசங்களில் அதிகமாகவும், மற்றப் பிரதேசங்களில் மிகக் குறைவாகவும் இருக்கின்றன. பிரதேசவாரியாகக் காடுகளின் விஸ்தீரணமும், அவற்றின் மூலம் ராஜ்யஅரசாங்கங்களின் வருமானமும் கீழே குறிப்பிடப்படுகின்றன.

| ராஜ்யம் | காடுகளின் விஸ்தீரணம் (1000 ஏக்கரா) | 1956-57 வருமானம் (லக்ஷம் ரூ.) |
|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | 12302 | 173 |
| அஸ்ஸாம் | 15797 | 71 |
| பீகார் | 8841 | 88 |
| பம்பாய் | 15629 | 343 |
| கேரளம் | 2460 | 100 |
| மத்தியப் பிரதேசம் | 33617 | 452 |
| மதராஸ் | 4757 | 176 |
| மைசூர் | 6413 | 109 |
| ஒரிஸ்ஸா | 10125 | 166 |
| பஞ்சாப் | 831 | 7 |
| ராஜஸ்தானம் | 3260 | 48 |
| உத்தரப் பிரதேசம் | 8479 | 360 |
| மேற்கு வங்காளம் | 2088 | 88 |
| ஜம்மு, காச்மீரம் | 1380 | 100 |

காடுகள் அழிவதனால் அவற்றில் வசிக்கும் மிருகங்களின் ஜாதிகளும் மறைந்து போகின்றன. காட்டு மிருகங்களால் நேரில் மனிதனுக்கு வேட்டையாடும் விநோதத்தைத் தவிர வேறு பிரயோசனமில்லாவிடினும், இயற்கையின் விசித்திரங்களை முற்றிலும் இழந்துவிடக்கூடாதென்ற எண்ணம் சமீபகாலத்தில்பெருகி வருகிறது. அதற்காக ஒரு அகில இந்திய சங்கமும் ஏற்பாடாகி, ஒவ்வொரு பிரதேசத்திலும் காட்டுப் பிராணிகளுக்காகக் காப்புக் காடுகள் ஏற்படுத்த முயற்சி செய்யப்படுகிறது. மத்தியப்பிரதேசத்தில் கானா என்ற வட்டத்தில் மான்களின் பல வகைகள் வளரும் ஒரு காப்பு ஸ்தலமிருக்கிறது. சௌராஷ்டிரத்தில் கிர் காடுகளில் சிங்கம் பாதுகாக்கப்படுகிறது. அஸ்ஸாமில் காஜிரங்காவில் ரைனோ என்ற காண்டா மிருகம் ரக்ஷிக்கப்படுகிறது. கேரளத்தில் பெரியார் ஏரிக் கரையில் யானைகளும், பைசன்களும் (காட்டு எருமைகள்) வசிக்கும் காப்புஸ்தலம் இருக்கிறது. அவ்விதமே இதரப் பிரதேசங்களிலும் பலவிதப் பிராணிகள் பயமின்றி வசிக்க வசதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. உல்லாசப் பிரயாணிகளின் சங்கியையை அதிகரிப்பதற்கு இவை உதவும்.

# ஜனவரி 14 பொங்கல் புது நாளன்று



அருணாசலம் பிக்சர்ஸ்

# தை பிறந்தால் வழி பிறக்கும்

தயாரிப்பு & டைரக்ஷன்.. A.K.வேலன்

அருணாசலம் பிக்சர்ஸ், சென்னை-28

BALU BROS

டிஸ்ட்ரிபியூட்டர்கள்: சென்னை நகரம், தென் ஆற்காடு, வட ஆற்காடு, செங்கற்பட்டு, சித்தூர், திருச்சி & தஞ்சாவூர்: M/s. A. V. M. Ltd., சென்னை-4 ★ மதுரை, ராமநாதபுரம் & திருநெல்வேலி: M/s. மதுரை பிலிம்ஸ், மதுரை ★ கோயமுத்தூர் & நீலகிரி: M/s. சந்திரபிரபா பிக்சர்ஸ், கோயமுத்தூர் சேலம்: M/s. அனகம்பா பிக்சர்ஸ், சேலம்-1 ★ மலபார் திருவாங்கூர் & கொச்சின்: M/s. சித்ரா பிலிம்ஸ் சென்னை-17 ★ மைசூர் ராஜ்யம்: M/s. விஜயா டாக்கி டிஸ்ட்ரிபியூட்டர்ஸ், பெங்களூர்-9 சிங்கப்பூர் & மலேயா: M/s. ஷா பிரதர்ஸ் லிட்., கொழும்பு ★ சிலோன்: M/s. சிலோன் என்டர்டெயின்மென்ட்ஸ் லிமிடெட், கொழும்பு ★ பர்மா யூனியன்: M/s. குமார் பிக்சர்ஸ், சென்னை-7

# இளம் பாடகர்களின் இன்னிசை

**காமு**

ஆயிரக்கணக்கான சங்கீத ரஸிகர்கள் அனுபவித்துத் திளைத்த இசை வெள்ளத்தில் முன்னணி வித்வான்களும் விதுஷிகளும் பொழிந்த கான மழையுடன் பல இளம் வித்வான்களும் 'ஜூனியர்'களும் தொடர்ந்து பெய்த நாதப் பெருக்கும் கணிசமான அளவுக்குக் கலந்தேயிருந்தது. வித்வத் சபையினர் வழக்கமாக அனுஷ்டித்து வரும் செயல்முறைக்கிணங்க இந்த வருஷமும் பல இளம் வித்வான்களையும் வருங்காலப்பாடகர்களையும் ரஸிகர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்கள். அவர்களுக்கென்று தனிக் கச்சேரிகள், பி. எஸ். உயர்தரப் பள்ளியில் அலங்காரப் பந்தலில் இல்லாவிட்டாலும் அதை அடுத்த கொட்டகையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. கச்சேரிகளும் இரு பகுதிகளாக்கப்பட்டு, ஒரு மணிக் கச்சேரி யென்றும் ஒன்றரை மணிக் கச்சேரிகளென்றும் பாகுபாடு செய்யப்பட்டிருந்தன. பிற்பகல் 2-30 மணியிலிருந்து 3-30 மணி வரையில் நிகழ்ந்த முதல் கச்சேரிகளின் நிகழ்ச்சிகளுக்கும் அதைத் தொடர்ந்து ஐந்து மணி வரையில் நடந்த கச்சேரிகளின் நிகழ்ச்சி நிரலுக்குமே ஒரு வித்தியாசம் ஏற்படுத்தப்பட்டிருந்தது. முதல் கச்சேரிகளில் 'உருப்படி'கள்தான் பாடப்பட்டன. அந்தந்தக் கீர்த்தனைக்குரிய ராக ஆலாபனமும் சிறிதளவு கற்பனை ஸ்வரங்களும் பாடினால் போதுமென்பது போல் அமைந்தன நிகழ்ச்சி நிரலெல்லாம். ஒரு வகையில் இது நல்ல பயன் அளித்ததென்று சொல்லலாம். பாடகர்களைத் தரம் பிரித்துப் பாகுபாடு செய்வது உகந்ததல்லவென்றாலும், கச்சிதமாக உருப்படிகள் பாடக் கூடியவர்களின் எண்ணிக்கை இப்போதெல்லாம் அதிகமாகியிருக்கின்றன. அப்படிப்பட்டவர்களுக்கெல்லாம் இந்தக் கச்சேரிகள் ஒரு வாய்ப்பாக இருந்திருக்க வேண்டும். இரண்டாவது கச்சேரிகள் சற்று விரிவானவை. ராகம், தானம், பல்லவிக்கு இவற்றில் இடம் அளிக்கப்பட்டிருந்தது. வித்வான்கள் தங்கள் ஞான முதிர்ச்சியையும் வித்வத் திறனையும் ஓரளவு வெளிப்படுத்த இவை உதவின.

ஆனால் முன் கூறியபடி இந்தப் பாகுபாடு ஓரளவுக்கு மட்டுமே பயன் அளித்திருக்கலாம் என்பதை வலியுறுத்துவது அவசியம். ஏனெனில், இளம் பாடகர்களெல்லாருமே இளம் பாடகர்களல்ல. ஜூனியர் வித்வான்களெல்லாரும் ஜூனியர்களும் அல்ல. ஆம், வயது, ஞானம் இரண்டையும்தான் குறிப்பிடுகிறேன்; சில இளம் பாடகர்கள் ஜூனியர் வித்வான்களாகவே இருக்கலாம். ஞான பாவமும் கலைத் தேர்ச்சியும் அவர்களிடம் காணப்பட்டன. பல ஜூனியர் வித்வான்கள் சீனியர் வித்வான்களாகவே இருக்கலாம். ஏன், பலர் சீனியர் வித்வான்கள்தான். அவர்கள் எல்லாரும் வருங்கால வித்வான்கள், அல்லது முன்னுக்கு வரவேண்டிய வித்வான்கள் என்னும் கோஷ்டியைச் சேர்ந்தவர்களல்ல—இப்போதே முன்னுக்கு வந்துள்ளவர்கள்தான். அவர்கள் வழங்கிய இசையமுது அவ்வளவு உயர்தரமாகவும் கலை மிகுந்தும் இருந்தது. இந்தக் கச்சேரிகளின் தரம் மிகவும் உயர்வானது என்பதற்கு அவற்றைக் கேட்டு ரசித்த அன்பர்களின் கூட்டமே சான்றாகும்.

22ம் தேதி நடந்த ஸ்ரீ டி. எம். தியாகராஜனின் கச்சேரி ஒரு சீனியர் கச்சேரி என்றே சொல்லலாம். பலருக்கு இவர் ரேடியோமூலம் அறிமுகமானவர். இயற்கையிலேயே இனிப்புடன் அமைந்த சாரீரம் இவருக்கிருந்தாலும் நீண்ட கால உழைப்பின் பலனாக சாரீரத்தைப் பண்படுத்தி மெருகிட்டு அழகுறச் செய்தால் அதனின்று கிடைக்கும் சுக பாவம் ஒரு தனியழகு பெற்று விளங்கும். இந்த வகையைச் சேர்ந்தது ஸ்ரீ தியாகராஜனின் சாரீரம். ஞானத்தின் உயர்வையும், நடையின் விறுவிறுப்பையும், லய சுத்தத்தையும் கொண்டு இவருடைய சங்கீதத்தை அனுபவிக்க வேண்டும். அன்று அவர் செய்த சங்கராபரண ராக ஆலாபனையும் 'பாருமினே' கீர்த்தனையின் நிரவல் கற்பனாஸ்வரமும், கௌளி ராகக் கீர்த்தனையும் கரஹரப்ரியா ராகமும் குறிப்பிடத்தக்கவை. பக்கவாத்தியம் வாசித்த பிடில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியிடம் பாவப் பொலிவும் ரஞ்சகமான பிடிப்புகளும், அழுத்தமான வாசிப்பும் காணப்பட்டன. திருச்சி ராகவனின் மிருதங்கம் அன்று சிறந்து விளங்கியது. ஏற்கனவே பலருக்கு அறிமுகமான இவருடைய வாசிப்பு எப்போதும் போல் இனிமையுடன் இருந்ததில் வியப்பில்லை. ஆனால் அன்று கடம் வாசித்த சிறுவன் விநாயகராமன் ரசிகர்களுக்குப் புதியவன். தலைமட்டுமே தெரியும்படி கட வாத்தியம் அவனை மறைத்திருந்தது. அவனது சின்னஞ்சிறு விரல்கள் எழுப்பிய நாதம் மட்டும் வெண்கல நாதம்போல் ஒலித்ததுமன்றி மிகுந்த விறுவிறுப்புடன் இருந்தது. மூர்த்தி சிறியதாக இருந்தாலும் லயஞானம் பெரியது என்பது இச் சிறுவனிடம் தென்பட்டது. கீர்த்தியும் போகப் போக வந்தடையலாம். வந்தனோபசாரம் கூறிய தலைவர் ஸ்ரீ தியாகராஜனின் கச்சேரி 'சீனியர்' வித்வான்களின் கச்சேரியாக மாற்றப்பட வேண்டியதென்பதைக் குறிப்பிட்டார். அடுத்த வருஷ இசை விழாவில் அவ்வாறே இருக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

23-ம் தேதியன்று கச்சேரி செய்த வித்வான் நரசிம்மலு, புல்லாங்குழல் வித்வான் திருப்பாம்புரம் ஸ்வாமிநாத பிள்ளையின் சிஷ்யர். சம்பிரதாய முறைப்படி சங்கீதம் அப்யசித்தவர் என்பது அவர் பாடியதிலிருந்து தெரிந்தது. சாரீரத்தில் விஸ்தாரமும் சுத்தமும் நிரம்பியுள்ளன. லய சுத்தமுள்ள பாட்டு. விஸ்தார சங்கீதமும் வேண்டுமானால் வழங்க முடியும் என்பதைக் காட்டுவதே போலிருந்தது அவர் அன்று நாடகுரஞ்சி ராகத்தில் பல்லவி பாடியது. ஆரம்பத்தில் பாடிய ஹம்ஸத்வனி கீர்த்தனத்திலேயே கச்சேரிக்கு மிடுக்குண்டாகி விட்டது. வேகமாக முன்னுக்கு வரக்கூடிய இளம் வித்வான்களில் இவர் ஒருவர். அவருக்கு பிடில் வாசித்த ஸ்ரீ சாவக்குடி நாராயண

ஸ்வாமியின் வாசிப்பில் ஸ்வர சுத்தமும் ராக பாவமும் குறிப்பிடத் தக்கனவாக அமைந்திருந்தன. வாய்ப்பாட்டுக்கு ஏற்றமுறையில் அநுசரணையாகவும் அடக்கமாகவும் இருந்தது ஸ்ரீ டி. ரங்கநாதனின் மிருதங்கம்.

அடுத்த நாள் செவ்வாய்க் கிழமை கச்சேரி செய்த ஜே. வெங்கடராமன் ஆலத்தூர் வெங்கடேசய்யரின் சிஷ்யர். எனவே உருப்படிகள் பாடுவதில் சுத்தமான முறையையும் வைசுத்தமான சங்கதி அமைப்புகளையும், இவரிடம் எதிர்பார்க்கலாம். அன்று அவர் பாடிய 'அப ராமபக்தி' என்ற பந்துவராளிக் கீர்த்தனம் சிறப்புற்று அமைந்தது. பக்க வாத்தியமாகப் பிடில் வாசித்த முருகேஷ் கச்சேரியைத் திறம்பட நிர்வகித்தார் எனலாம். மிருதங்கம் வாசித்த ஸ்ரீ ஷண்முகானந்தம் வித்வான் பழனி சுப்பிரமணிய பிள்ளையின் சிஷ்யர். லயவின்யாச வேலைப்பாடுகளில் ஆர்வம் உள்ளதோடு திறமையுமுண்டு என்பதை எடுத்துக் காட்டுவது போலிருந்தது, அவருடைய நாதம் நிரம்பிய மிருதங்க வாசிப்பு.

24-ம் தேதியன்று நடந்த ஸ்ரீ வி. என். ராஜத்தின் புல்லாங்குழல் கச்சேரி 'சீனியர்' கச்சேரி என்றே மதிப்பிடத் தகுந்தது. இவர் பல்லடம் சஞ்சீவிராவின் சிஷ்யர். எனவே அவருடைய பிரத்தியேகச் சிறப்புக்களையெல்லாம் ஸ்ரீ ராஜத்தினிடம் எதிர்பார்க்கலாம். அன்று அவையெல்லாம் அமோகமாக வெளிக் கிளம்பின. வேணுகானத்துக்கென்றே அமைந்த உருப்படிகளான "ராம நீ சமானமெவரு" 'கிரிபை நெல' இரண்டும் அவற்றுக்குண்டான அபரிமிதமான சங்கதிகளுடனும் மின்சார ரயில் வேகத்துடனும், கச்சிதமாக வழங்கப்பட்டன. ஒதுக்கங்களும் சதுக்கங்களும் பிசிரில்லாமல் சுத்தமாக இருந்தன. கீர்த்தனைகளுக்கு வாசித்த கற்பனை ஸ்வரங்களும் பைரவி ராகப் பல்லவி ப்ரஸ்தாரங்களும் ஸ்ரீ ராஜத்தின் பண்பட்ட ஞானத்தின் சிறப்பை



1. எச். ஆர். சீதாராம சாஸ்திரி பாட்டு. சித்தூர் தியாகராஜன் வயலின். பாலக்காடு ராமநாதன் மிருதங்கம். 2. சூரியநாராயணமூர்த்தி பாட்டு. தங்கவேலு வயலின். நடராஜன் மிருதங்கம். 3. எம். ஏ. வேணுகோபால் பாட்டு. வி. வி. சுப்பிரமணியன் வயலின், ஸ்ரீகண்டன் மிருதங்கம். 4. வள்ளியூர் சகோதரர்கள் பாட்டு. திருப்பாம்புலியூர் ராஜன் வயலின், கண்ணன் மிருதங்கம். 5. டி. பி. கைலாசம் பாட்டு. திருவனந்தபுரம் ஹரிஹரன் வயலின், கிருஷ்ணமூர்த்தி மிருதங்கம். 6. ஆர். கே. நாராயணசாமி பாட்டு. பி. ராமச்சந்திரன் வயலின், பல்லடம் ராமச்சந்திரன் மிருதங்கம்.

யும் நேரடியான இடங்களையும் அனுயாசமாகச் சமாளிக்கும் திறமையையும் பிரதிபலித்தன. புல்லாங்குழலின் விறுவிறுப்புக்கும் வேகத்துக்கும் சற்றும் குறையாது, ராக பாவத்தையும் நழுவ விடாமல் நிர்வகித்த பெருமை அவருக்குப் பிடில் வாசித்த வி. சீனிவாசனையும் மிருதங்கம் வாசித்த ஸ்ரீகணேசனையும் சார்ந்தது. சீனிவாசன் ஸ்ரீ ராஜத்தின் சகோதரர். எனவே ஒற்றுமையுடன் இணைந்து வாசித்துக் கச்சேரியைச் சோபிக்கச் செய்ததில் வியப்பில்லையல்லவா? கணேசன் மிருதங்க வித்வான் காரைக்குடி முத்து அய்யரின் சிஷ்யர். வாத்திய இசைகளுக்குப் பக்க வாத்தியமாக மிருதங்கம் வாசிப்பதில் பழகிப் பண்பட்டவர்; அவரிடம் வித்தை பயின்ற கணேசனின் அநுசரணையான வாசிப்புக்குக் கேட்கவா வேண்டும்!

**ம**றுநாள் 25-ம் தேதியன்று நடந்த இரண்டு கச்சேரிகளும் வெவ்வேறு வகையில் சிறப்புற்றிருந்தன. முதல் கச்சேரி ஸ்ரீமதி பாலம் ராமமூர்த்தி செய்தது. அமைதியுடன் கம்பீர நடைபெற்றிருந்தது. இவருடைய சங்கீதம்; கன சாரீரம் என்று சொல்லக்கூடிய வகையில் அமைந்த அவர் குரலினிமை கீர்த்தனங்களை மத்திம காலத்தில் பாடுவதற்கு ஏற்றதா யிருந்தது. அன்று அவர் பாடிய சங்கராபரண ராக ஆலாபனமும் 'கமலாம் பிகயா' என்ற தீக்ஷிதர் கீர்த்தனமும் நன்றாக அமைந்திருந்தன. அவருக்குத் துணையாகப் பிடில் வாசித்த பாபநாசம் பாலசரஸ்வதியின் ஞான பாவம் போற்றத் தகுந்து விளங்கியது. வாத்தியத்தில் உயர்ந்த ராக பாவம் இனிமையுற்று வெளிவந்தது. சுத்தமான வாசிப்பு. ஸ்ரீமதி கனகாம்புஜத்தின் மிருதங்கம் சென்னை ரஸிகர்களுக்குப் புதிதல்ல. வழக்கம்போல் நாதக்கட்டுடனும் கச்சேரிக்குத் தேவையான அளவுடன் அழகாக இருந்தது.

அதைத் தொடர்ந்து நடந்த ஸ்ரீ பி. ராஜம் அய்யரின் கச்சேரி உயர்தரத்தைச் சேர்ந்தது. அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்காரின் சிஷ்யர். அய்யங்கார் பாணிக்கு ஏற்ற காத்திரமான சாரீரம்; கம்பீரமாகவும் அனுயாசமாகவும் பாடுகிறார். பந்துவராளி கீர்த்தனத்தில் நிரவல் ஸ்வரமும் ஆனந்த பைரவியில் பாடிய 'ஓ ஜகதம்பா' கீர்த்தனையும் முழுப் பொலிவுடன் விளங்கின. சங்கராபரண ராக ஆலாபனையும், கீர்த்தனையும் பைரவி ராக பல்லவியும் எடுப்பாக அமைந்தன. அவருக்குத் துணையாக பிடில் வாசித்த கண்டதேவி அழகிரிசாமி வித்வான் சௌடய்யாவின் மதிப்புக்குரிய சிஷ்யர், எனவே இவர் வாசிப்பைப் பற்றி அதிகம் கூறுவது மிகையேயாகும். முதிர்ந்த வித்வான். பல இடங்களில் ஒலித்த நாத காம்பீர்யம் தான் ஸ்ரீ சௌடய்யாவின் சிஷ்யர் என்பதைக் காட்டியது.

இந்தக் கச்சேரிக்கு மெருகளித்த மற்றொரு அம்சம் மிருதங்கம் வாசித்த ராகவன், வேணுகோபால் என்னும் சிறுவர்கள். மிருதங்கங்கள் இவர்களை அநேகமாக மறைத்துக் கொண்டிருந்தன என்றால் அது மிகையாகாது. வாத்தியத்தின் இருபுறங்களும் இவர்களது கைக்கெட்டுமோ என்றுகூடத் தோன்றியது.

ஆனால் அவர்கள் கீர்த்தனை பாடும்போதும், தனி ஆவர்த்தனத்தின் போதும் வெளிப்படுத்திய அபாரத் திறமையும் விவரங்களும் லய ஞானமும் சபையோரைப் பரவசப்படுத்தின. சுமார் முப்பது வருஷங்களுக்கு முன் பாலக்காடு மணி அய்யருடைய மிருதங்கத்தைச் செம்பை வைத்தியநாத பாகவதருக்குப் பக்கவாத்தியமாகச் சென்னையில் முதன் முதலாகக் கேட்டவர்கள் எம்மாதிரி உணர்ச்சிப் பரவசமானார்களோ அம்மாதிரியே அன்று இச் சிறுவர்களின் மிருதங்க வாசிப்பைக் கேட்டு ரசித்தனர். ஆம், இதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. இவர்கள் இருவருமே பாலக்காடு மணி அய்யரின் சிஷ்யர்கள்தானும்.

மறுநாள் 26-ம் தேதியன்று பாடிய வள்ளியூர் சகோதரர்கள், ஆர். குருமூர்த்தியும், ஆர். கிருஷ்ணனும் தேர்ந்தெடுத்துப் பாடிய கீர்த்தனங்கள் இருவர் ஜோடியாகப் பாடுவதற்கு ஏற்றதாக இருந்தன. கச்சிதமாகவும் பாடப்பட்டன. தோடி ராக ஆலாபனையும் 'ஏமி ஜேஸிதே' என்ற கீர்த்தனமும் நன்கு பொருத்தமாக அமைந்திருந்தன. இனிமையுடன் விறுவிறுப்பும் கலந்திருந்த சங்கீதம். பக்கவாத்தியம் வாசித்த திருப்பாப்புலியூர் ஸ்ரீராஜத்திடம் நாதப் பொலிவும் ராக ரஞ்சகத்வமும் சேர்ந்திருந்தது குறிப்பிடத் தக்கது. மிருதங்கம் வாசித்த மற்றொரு இளைஞன் கண்ணனையும் இங்கே குறிப்பிட வேண்டும். சிறுவர்களுக்கும் லயவாத்தியத்துக்கும் ஏதோ ஒருவிதப் பொருத்தமிருக்கிறது போலும்!

இதையடுத்து நடந்த டி. கே. ஜயராமனின் கச்சேரியும் உயர்தரத்தைச் சேர்ந்தது. அன்று அவர் செய்த கல்யாணி ராக ஆலாபனையும் 'பஞ்சாசத்பீட ரூபிணி' என்ற கர்நாடக தேவகாந்தாரி கீர்த்தனையும் சுக பாவம் நிறைந்து விளங்கியது. தோடி ராக தானமும் பல்லவியும் அவருடைய ஞானச் சிறப்பை வெளிக் கொணர உதவியது. இவருக்குப் பக்கவாத்தியம் வாசித்த கும்பகோணம் சீனிவாசன் ஒரு பண்பட்ட வித்வான். வித்துவான் ராஜமாணிக்கத்தின் பாணியைப் பல காலம் பயின்று தமதாக்கிக் கொண்டவர்: ஸ்வர சுத்தமும் அழுத்தமான வாசிப்பும் நாத இனிமையும் இவரிடம் சிறப்பு வாய்ந்த அம்சங்கள். மிருதங்கம் வாசித்த சிவகுமாரனிடம் பல அம்சங்கள் மேலோங்கிப் பிரகாசித்தன. நாதக் கட்டும், சொல் கட்டுகளும் விறுவிறுப்பும் அவருடைய வாசிப்புக்கு உயர்வை அளித்தன.

27-ம் தேதி வெள்ளியன்று நிகழ்ந்த ஆர்: என். துரைஸ்வாமியின் வீணைக் கச்சேரி இந்த சீசனில் மற்றொரு உயர்தரக் கச்சேரி. இவர் மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்தவர்.

# தேனைச் சொரிந்திடும் தைமகளே!

லால்குடி கிருஷ்ணமூர்த்தி



காட்டைத் திருத்திக் கழனி யாக்கித் தன்
கண்ணினைப் போலவே பாதுகாத்து
வாட்டும் குளிரிலும் வெயிலிலும் தன்
வைர உடல்தனை ஈடுவைத்து
ஓட்டைச் சால் ஆனாலும் நீரிறைத்துத் தன்
உயிருக்கும் மேலாய்ப் பயிர்வளர்த்து
நாட்டுக் குழைவிடும் செம்மல்களின் பொன்
நாளிதைப் பொங்கலோ பொங்கலென்போம்!

பானையில் பொங்கல் கொதிக்கையிலே எங்கள்
பத்தினிப் பெண்களின் உள்ளமெலாம்
தேனைச் சொரிந்திடும் தைமகளே! எங்கள்
தெய்வத் தமிழன்னை ரத்தினமே!
நானே வளர்ப்பது மட்டுமில்லை எங்கள்
கூழும் நிமிர்ந்திட வேணுமம்மா!
யானையைப் போருக் கழைத்திடும் செஞ்சரம்
அன்னையே நீதர வேண்டுமம்மா!!

# ஜம்ஷெட்பூர் வழியே



அரசாங்க எஃகுத்தொழிற்சாலைகள் மூன்றையும் நிர்வகிக்க இருக்கும் ஐநூறு இள இன்ஜினீயர்கள் அயல் நாடுகளில் பயிற்சி பெறச் செல்லுமுன் ஜம்ஷெட்பூரில் ஆறுவாரம் தங்குவார்கள்.

இந்திய எஃகுத் தயாரிப்பின் அடிப்படை முறைகளை இவர்கள் எஃகு நகரமாகிய ஜம்ஷெட்பூரில் அறிந்து கொள்வார்கள். அத்துடன் டாடா ஸ்டீல் நிபுணர்களிட மிருந்து பல தொழில் நுணுக்கங்களையும் கேட்டறிவார்கள்.

வருங்கால எஃகு உற்பத்தியில் ஈடுபட இருக்கும் இவ்வின்ஜினீயர்களை வர வேற்பதில் ஜம்ஷெட்பூர் பெருமை கொள்கிறது.

## டாடா ஸ்டீல்

இரு மில்லியன் டன் உற்பத்திக்கு



தி டாடா அயர்ன் அண்ட் ஸ்டீல் கம்பெனி லிமிடெட்.

பிரசித்தி பெற்ற ஸ்ரீ வெங்கடகிரியப்பாவின் ஷிஷ்யர். சென்னைக்குப் புதிது. முதன்முதலாக இப்போது தான் அறிமுகம் ஆகியிருக்கிறார். ஆனால் அவருடைய வீணை வாசிப்பு திறந்த வெளியில் கேட்பதற்கு உகந்ததல்ல. அடக்கமான பந்தலில் அமைதியுடன் கேட்டு ரசிக்கத் தகுந்தது. அன்று அவர் வாசித்த ஸஹானா பந்துவராளி ஆலாபனைகளும், 'ஸார ஸாக்ஷா' கீர்த்தனையும், பல்லவியும் அவருடைய ஞானம் மிக உயர்ந்தது என்பதைக் காட்டின. அவருக்கு மிருதங்கம் 'வாசித்த மதுரை சீனிவாசன் காதுக்கினிய நாதத்தைப் பூரணமாக வழங்கியதுடன் வீணை வாத்தியத்தின் சிறப்பு குன்றாமல் வாசித்ததைப் போற்ற வேண்டும். மொத்தத்தில் இது ஒரு சிறந்த கச்சேரி.

29-ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடந்த முதல் கச்சேரி ஸ்ரீமதி எம். எஸ். காந்திமதி செய்தது. இனிமையான சாரீர வசதி பெற்றுப் பிர்க்காக்கள் அநாயாசமாகப் பொழியும் தன்மையுடையது அன்னாரின் குரல். அவர் பாடிய தோடி ராக ஆலாபனையும் 'கத்தனு வாரிகி' என்ற கீர்த்தனமும் குறிப்பிடத் தக்கனவாக அமைந்திருந்தன. அவருக்குப் பக்க வாத்தியம் வாசித்த டி. ருக்மணியின் வாசிப்பில் குழைமையும் ராக பாவமும் ததும்பின. சில நிமிஷங்களே தனியாக வாசிக்கும் சந்தர்ப்பம் கிடைத்ததெனினும் அப்போது அவருடைய வாசிப்பு கேட்பதற்கு மனோகரமாக இருந்தது.

அதைத் தொடர்ந்து நடந்த ராமநாதபுரம் கிருஷ்ணனின் கச்சேரி இந்தத் தொடர்ச்சியில் சிகரமாக அமைந்த இன்னிசை என்பதில் சந்தேகமில்லை. இவர் சுமார் இருபது வருஷமாகக் கச்சேரி செய்து பழக்கப்பட்டவர். முதிர்ந்த ஞான முன்னவர். சுகபாவம் நிறைந்த ரஞ்சகமான சாரீரம். விறுவிறுப்புடன் விவரமாகவும் ராகம், கீர்த்தனைகள் எல்லாவற்றையும் சுகபாவமுள்ள இடங்களில் நின்று வழங்கக் கூடிய ஆற்றலுள்ளவர். அபூர்வ ராகங்களை



7. ஜே. வெங்கடராமன் பாட்டு, முருகேஷ் வயலின், ஷண்முகானந்தம் மிருதங்கம். 8. பாலம் ராமமூர்த்தி பாட்டு, பாபநாசம் பாலசரஸ்வதி வயலின், கனகாம்புஜம் மிருதங்கம். 9. மகாராஜபுரம் நாகராஜன் பாட்டு, ஆலத்தூர் நடராஜன் வயலின், சங்கரன் மிருதங்கம். 10. பி. ராஜமய்யர் பாட்டு, அழகிரிசாமி வயலின், ராகவன், வேணுகோபாலன் மிருதங்கம். 11. எம். எஸ். காந்திமதி பாட்டு, டி. ருக்மிணி வயலின், ரமணி மிருதங்கம். 12. வித்வத்ஸபை சங்கீதப் போட்டிகளில் பரிசு பெற்றவர்கள்.

அனுயாசமாகப் பாட வல்லவர். அன்று அவர் ஆலாபனை செய்த உமாபரண ராகம் இதற்கு உதாரணம். கீரவாணி ராக ஆலாபனையும் 'கலிகியுண்டே' கீர்த்தனமும், பூர்விகல்யாணி ஆலாபனையும் 'பரிபூர்ண காமா' என்ற கீர்த்தனையும், பேகட ராக பல்லவியும் பிரமிக்கத் தக்கவாறு பாடினார். கேட்போர்கள் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டாலும் தான் முன்னணி வித்வான்தான் என்ற தன்னம்பிக்கையுடனேயே ஆரம்ப நிமிஷமுதல் கடைசி வரையில் விறுவிறுப்புக் குன்றாமல் பாடி முடித்தார். இவருக்குப் பக்கவாத்தியம் வாசித்த திருப்பாற்கடல் வீரராகவன் பிடில் வாத்தியத்தில் பிரபலமாகிக்கொண்டுவரும் இளம் வித்வான்; தகப்பனாரிடமே வித்தை பயின்றவர். அபஸ்வரமில்லாத வாசிப்பு. கச்சேரியைப் போஷிக்கும் வகையில் அமைந்திருந்தது. மிருதங்கம் வாசித்த ராமநாதபுரம் ராகவனும் ஒரு இளம் வித்வான். ஆனால் வாசிப்பு உயர்தரம்.

30-ம் தேதி நடந்த ஸ்ரீ வேதமூர்த்தியின் நாதஸ்வரக் கச்சேரி மற்றொரு முதல்தரக் கச்சேரி. நாதஸ்வர வாத்தியத்திலுள்ள பல அழகுகளும் இவருடைய வாசிப்பில் பொலிவுடன் பிரகாசித்தன. அன்று அவர் வாசித்த செஞ்சுருட்டி ஆலாபனை உயர்தரமாக இருந்தது. ஸ்ரீ ராகவ பிள்ளையின் தவில் அவருக்கு அநுகுணமாக இருந்தது விசேஷமாகக் குறிப்பிடத்தக்க அம்சம். அவருடைய தவில் வாசிப்பையே தனியாகக் கேட்டு மகிழ ஆவல் கொள்ளும் ரசிகர்கள் பலர் இருக்கின்றனர்.

கடைசி நாளான 31-ம் தேதி நிகழ்ந்த வி. ராமரத்தினத்தின் கச்சேரி ஞான பாவத்தில் சிறப்புற்று விளங்கியது. இவரும் மைசூரைச் சேர்ந்தவர். வித்வான் சௌடய்யா ஆரம்பித்து நடத்திவரும் அப்பய்யன் சங்கீத வித்யாலயத்தின் உப-பிரின்ஸிபாலாகப் பணியாற்றுபவர். பல சிஷ்யர்களுக்கு வித்தையைக் கற்பிக்கும் ஆற்றல் கொண்டு குரு ஸ்தானத்தில் இருப்பவர். ஆனால் சென்னைக்குப் புதிது. அன்று அவர் பாடிய தோடி ராக ஆலாபனையும் பல்லவியும் குறிப்பிடத் தகுந்தவை. காத்திரமான சாரீர வசதி படைத்தவரல்லவென்றாலும் முதிர்ந்த ஞானமும் அனுபவமும் உள்ளவர். அவருக்குப் பிடில் வாசித்த டி. என். மணி, பிடில் வித்வான் டி. என். கிருஷ்ணனின் சகோதரர் எனத் தெரிகிறது. இவருடைய வாசிப்பில் அதே அழுத்தம், அதே பாணி, அதே இனிமை காணப்படுகிறது.

பொதுவாகப் பார்க்கும்போது, வாத்திய இசையில் அநேகமாக உயர்தரம் காணப்பட்டது. பிடில் வாசித்தவர்கள் எல்லோருமே சுத்தமாகவும், அழுத்தமாகவும், ரஞ்சகமாகவும் வாசித்தனர். அவ்வாறே மிருதங்கத்திலும். சாதகம், உழைப்புக் காரணமாகவோ, மற்றெந்தக் காரணத்தாலோ, லய ஞானமும், ராக ஞானமும் பல பேர் இடையே பெருகி வருவதாகக் காணப்படுவது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

---


கலைகண்ட மலேயா கட்டுரை
அடுத்த இதழில் வெளியாகும்.




என்ன போஸ்ட்மேன்! பொங்கி வழியுதே!
எல்லாம் பொங்கல் வாழ்த்துங்க.


என்னுங்க! மாட்டுக்-கொம்புக்கு வர்ணம் பூசியாச்சா!


ஹாம்..ம்! பொங்கல் வாழ்த்து விலைக்கு வாங்கித்தான் ஆகணும்!


ஹாஸ்யப் பொங்கல்


அய்யாவ்! ஒட்டடை அடிக்கணுமா?


ஆ.. அய்யாவ்! ஒட்டடை அடிக்கணுமா.



# பாவை விளக்கு

## அத்தியாயம் 6

## நல்ல காலம்?

அடுத்த வாரக் கடைசியில் தணிகாசலம் குடும்பத்தை அழைத்துக் கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தான். எழும்பூர் ரயிலடியில் உமாவின் வரவேற்பு குதூகலமாக இருந்தது. கௌரியின் தாய்மைத் தோற்றத்தையும், அவளது தளர் நடையையும் கண்ட உமா பூரித்துப் போனாள். தணிகாசலம் உமாவுக்கு அந்த விஷயத்தை முன்பு ஏனோ சொல்லவில்லை.

''கௌரி! என்னிடம் இதைச் சொல்ல வேண்டாமென்று மாமாவுக்குச் சொல்லியிருந்தாயா? எல்லாவற்றையும் போல் மறைக்கக் கூடிய ரகசியமா இது!''

மாம்பலத்து வீட்டுக்கு வந்தவுடன் தன் அத்தை, மாமா இருவர்களிடமும் அவர்களை அறிமுகம் செய்து வைத்தாள் உமா. உமாவின் அத்தை சௌந்தரம்மாளுக்குக் கௌரியின் கழுத்தில் கிடந்த புது நகைகளும், அவள் உடுத்தியிருந்த பட்டுப் புடவையும் அவர்களை மதிக்க வைத்தன. கூடவே வந்து இறங்கிய பாத்திரம் பண்டங்களையும், துணிமணிகளையும் பார்த்து அவள் 'பழகக் கூடிய மனிதர்கள்தாம்' என்ற முடிவுக்கு வந்தாள். மங்களத்துப் பாட்டியின் முன் யோசனையான ஏற்பாட்டால் சென்னைக் குடித்தனத்துக்காகப் பல புதிய சாமான்கள் வாங்கப்பட்டிருந்தன.

சௌந்தரம்மாள் கல்யாணி அம்மாளைப் பார்த்துக் கூறினாள்: ''மாடி வீட்டை இவள் உங்களுக்கு விட்டுக் கொடுத்தது பெரிதில்லை; தன்னுடைய சொந்த அறையையே விட்டுக் கொடுத்தாளே, அதுதான் தாராளம்.''

உமாவின் மாமா தணிகாசலத்திடம் இரண்டு வார்த்தைகள் பேசிவிட்டு, ''பக்கத்தில் வந்துவிட்டீர்கள்; மெதுவாய்ப் பேசிக் கொள்ளுவோம்; எனக்கு ஆபீசில் கொஞ்சம் 'பேப்பர் டிஸ்போசல்' பாக்கி இருக்கிறது'' என்று கூறிக் கிளம்பினார்.

அவருக்கு எப்போதுமே ஆபீசில் 'பேப்பர் டிஸ்போசல்' பாக்கி இருக்கும். எட்டு மணி நேர வேலையைப் பதினெட்டு மணி நேரத்தில் செய்யக் கூடியவராதலால், காலையில் ஏழு மணிக்கே கிளம்பி விடுவார். திரும்புகிற நேரத்தைச் சொல்ல முடியாது. கறுப்புக் கோட்டு, தலையில் குல்லாய், கையில் குடை, காலில் செருப்பு — இவற்றுடன் காட்சி





வனிக்கும் மனித இயந்திரம் அவர். அவருடைய உலகமெல்லாம் அந்த ஆபீசுக்குள் அடக்கம். வாயைத் திறந்தாரானால் 'பேப்பர் டிஸ்போசல்' மணம் வீசாமல் இருக்காது.

கௌரிக்கும் கல்யாணி அம்மாளுக்கும் வீட்டைச் சுற்றிக் காட்டினாள் உமா. குழாயில் தண்ணீர் கொட்டியது; மின் விளக்குகள் கண் சிமிட்டின; சுழல் விசிறி ரீங்காரம் செய்தது. வழவழவென்ற சிமெண்டுத் தரையில் புதுமை மின்னியது. காற்றோட்டத்துக்கும் கதிரொளிக்கும் கொஞ்சமும் பஞ்சமில்லை.

'' தணிகாசலம் உன்னையும் இந்த வீட்டையுந்தான் வாய்க்கு வாய் பேசிப் பெருமைப்பட்டுக் கொண்டான் '' என்றாள் கல்யாணி அம்மாள். '' இந்த ஊரில் வீட்டுப் பஞ்சம் அதிகமாமே?''

'' அது என்னவோ எந்தப் பஞ்சமும் நமக்கு இல்லை '' என்றாள் உமா.

தணிகாசலம் தனக்காக உமா கொடுத்திருந்த அவனுடைய அறையில் உட்கார்ந்து அதன் அழகை ரசித்துக் கொண்டிருந்தான். சன்னல் வழியே வேப்ப மரக் கிளைகள் சாமரம் வீசின. புத்தக அலமாரி, மேஜை நாற்காலி எதையும் அவள் எடுத்துக் கொள்ளவில்லை. உமாவின் பெற்றோரது பெரிய புகைப்படமும் அங்கே தான் தொங்கியது. மேஜையின் ஓரத்தில் ஊதுவத்திகள் புகைந்து கொண்டிருந்தன. சன்னலுக்கு வெளியே கைப்பிடிச் சுவரின் மேல் சில பூச் செடிகள் சிரித்தன. எழுத்தாளனுக்கு இப்படி ஒரு அழகான அறை கிடைத்து விட்டால் வேறென்ன வேண்டும்?

உமா கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். அவளைக் கண்டவுடன் நன்றிப் பெருக்கால் தணிகாசலத்தின் உள்ளம் நிரம்பி வழிந்தது.

'' இப்போதே எனக்கு ஒரு கதை எழுத வேண்டுமென்று தோன்றுகிறது, உமா!'' என்றான்.

'' எழுதுங்களேன்.''

'' உன்னைப் பிடித்து வெளியே தள்ளிக் கதவைச் சாத்திக் கொண்டால்தான் எனக்கு எழுதுவதற்குக் கற்பனை ஓடும்!''

'' ஒட்டகத்துக்கு இடம் கொடுத்த கதையை எழுதுங்கள் '' என்று கோபமாய்ச் சொன்னாள் உமா. '' காட்டிலிருந்து பிடித்து வர வேண்டிய மனிதர் நீங்கள். உங்களுக்காக நான் இவ்வளவு செய்து வைத்திருக்கிறேன், பாருங்கள்!''

அவளைச் சீண்டி விட்டு முகம் சிவக்க வைப்பதில் அவனுக்கு ஒரு ஆனந்தம். பிறகு அவளை உட்காரச் சொல்லிச் சமாதானப் படுத்தினான். தன்னுடைய உண்மையான மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டான்.

'' உமா! ஏழையாக இருந்தால்தான் எழுத வரும் என்று சிலர் சொல்லுகிறார்கள். நீ என்னை இப்படிப் பிரமாதப் படுத்தி வைத்திருக்கிறாயே? என்னை நானே பணக்காரன் என்று ஏமாற்றிக் கொள்ளும் வகையில் அல்லவோ சூழ்நிலையை ஏற்படுத்தி விட்டாய்!''



"ஏழையாக இருந்தால்தான் கற்பனை கட்டுமீறிக் கொண்டு ஓடுமாக்கும்!" என்று நகைத்தாள் உமா. "வயிற்றுக்குள்ளேயே அது அடங்கி வற்றிப்போய் விடாதா? குடும்பக் கவலை பிடுங்கி எடுக்கும் மனிதர்களால் நாட்டுக்கோ, மொழிக்கோ, கலைக்கோ எப்படி உழைக்க முடியும்? கம்பர், வள்ளுவர், இளங்கோ ஏழைகளாகவா இருந்தார்கள்? இல்லை, மேல் நாட்டுக் கலைஞர்கள் பஞ்சப் பாட்டு பாடிக்கொண்டு தான் தங்கள் உயர்ந்த கற்பனைகளையெல்லாம் உருவாக்கினார்களா?"

டால்ஸ்டாய், டிக்கன்ஸ், பங்கிம், தாகூர் பலரைப் பற்றிச் சொன்னாள் உமா. நிலைத்து நிற்கும் எழுத்துக்களை எழுதிய எழுத்தாளர்கள் பலர் தங்களுடைய சமுதாயத்துடன் போராடினார்களே தவிர, தங்கள் வயிற்றோடு போராடும் கேவலமான நிலையை அவர்களுடைய நாடு அவர்களுக்குக் கொடுக்கவில்லை. படித்த பொதுமக்கள் அவர்களுக்கு ஆதரவு தந்தார்கள்; அல்லது பணக்காரர்கள் அவர்களுக்குப் பரிவு காட்டினார்கள்; அல்லது பிறவியிலேயே அவர்கள் செல்வர்களாகப் பிறந்தார்கள்.

உமா கூறினாள். "ஏழைகள் நசுங்கிச் சீரழிவார்களே தவிர, எதையுமே அவர்களால் உருப்படியாகச் செய்ய முடியாது, மாமா! அந்தப் பழிச்சொல்லை நீங்கள் காதில் போட்டுக் கொள்ள வேண்டாம். முட்டாள்கள் பெருத்த மோசமான நாட்டில் தான் மொழிக்கு உழைப்பவர்கள் பட்டினி கிடந்து சாக வேண்டும். உங்களுக்கு ஏன் இந்தக் கவலை?"

நம்பிக்கையின் திரு உருவமாக, கலைமகளும் திருமகளும் கலந்த ஓர் கற்பனைச் செல்வமாக, எதிரில் உட்கார்ந்திருந்தாள் உமா. அவள் கொடுத்த பேனா அவனுடைய கரத்தின் உறுதியான பிடிப்பில் அகப்பட்டிருந்தது. என்றாலும் பசுபதியினால் ஏற்பட்ட பயம் அவனிடம் குறுக்கிட்டது.

"பசுபதியை நம்பி நான் பட்டணத்துக்கு வந்தேன்! அவர் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. அவருக்கு உள்ள பணப் பசியில் என்னையே சாப்பிட்டு விடுவார் போலிருக்கிறது."

"அவரை நம்பித்தானா இந்த உலகத்தில் கடவுள் உங்களைப் படைத்திருக்கிறார்?" என்று கேட்டாள் உமா.

தணிகாசலத்துக்கு அவள் பேச்சு சிரிப்பைத் தந்தது. அப்போது கல்யாணி அம்மாளும் கௌரியும் புதுப் பால் காய்ச்சி எடுத்துக் கொண்டு அங்கே வந்தார்கள். அதை வாங்கிக் குடித்துக் கொண்டே உமாவின் தற்போதைய வளர்ச்சியைப்பற்றி அவர்களிடம் சொல்லிக் கேலி செய்தான்.

"இப்போது இவள் முன்போல் இல்லை; படித்துப் பட்டம் பெற்று உத்தியோகமும் பார்த்து வருகிறாள். இலேசாக நினைத்து விடாதீர்கள்! நான் எந்த வேலைக்குப் போக ஆசைப்பட்டேனோ, அதே வேலை இவளைத் தேடி வந்திருக்கிறது. இவளுக்குத் தகுந்த வேலைதான். இவளிடம் படிக்கும் மாணவிகள் இவளுடைய தொண்டைத் தண்ணீரை வற்ற வைத்து விடுவார்கள். இனிமேல் உமாவிடம் நாம் எல்லாரும் கூட மரியாதையோடு பழகவேண்டும்!"



வளிக்கும் மனித இயந்திரம் அவர். அவருடைய உலகமெல்லாம் அந்த ஆபீசுக்குள் அடக்கம். வாயைத் திறந்தாரானால் 'பேப்பர் டிஸ்போசல்' மணம் வீசாமல் இருக்காது.

கௌரிக்கும் கல்யாணி அம்மாளுக்கும் வீட்டைச் சுற்றிக் காட்டினாள் உமா. குழாயில் தண்ணீர் கொட்டியது; மின் விளக்குகள் கண் சிமிட்டின; சுழல் விசிறி ரீங்காரம் செய்தது. வழவழவென்ற சிமெண்டுத் தரையில் புதுமை மின்னி யது. காற்றோட்டத்துக்கும் கதிரொளிக் கும் கொஞ்சமும் பஞ்சமில்லை.

"தணிகாசலம் உன்னையும் இந்த வீட்டையுந்தான் வாய்க்கு வாய் பேசிப் பெருமைப்பட்டுக் கொண்டான்" என் றாள் கல்யாணி அம்மாள். "இந்த ஊரில் வீட்டுப் பஞ்சம் அதிகமாமே?"

"அது என்னவோ எந்தப் பஞ்சமும் நமக்கு இல்லை" என்றாள் உமா.

தணிகாசலம் தனக்காக உமா கொடுத் திருந்த அவனுடைய அறையில் உட் கார்ந்து அதன் அழகை ரசித்துக் கொண் டிருந்தான். சன்னல் வழியே வேப்ப மரக் கிளைகள் சாமரம் வீசின. புத்தக அலமாரி, மேஜை நாற்காலி எதையும் அவன் எடுத்துக் கொள்ளவில்லை. உமா வின் பெற்றோரது பெரிய புகைப்படமும் அங்கே தான் தொங்கியது. மேஜையின் ஓரத்தில் ஊதுவத்திகள் புகைந்து கொண்டிருந்தன. சன்னலுக்கு வெளியே கைப்பிடிச் சுவரின் மேல் சில பூச் செடிகள் சிரித்தன. எழுத்தாளனுக்கு இப்படி ஒரு அழகான அறை கிடைத்து விட்டால் வேறென்ன வேண்டும்?

உமா கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தாள். அவனைக் கண்ட வுடன் நன்றிப் பெருக்கால் தணிகாசலத் தின் உள்ளம் நிரம்பி வழிந்தது.

"இட்டோதே எனக்கு ஒரு கதை எழுத வேண்டு மென்று தோன்றுகிறது, உமா!" என்றான்.

"எழுதுங்களேன்."

"உன்னைப் பிடித்து வெளியே தள்ளிக் கதவைச் சாத்திக் கொண்டால்தான் எனக்கு எழுதுவதற்குக் கற்பனை ஓடும்!"

"ஒட்டகத்துக்கு இடம் கொடுத்த கதையை எழுதுங்கள்" என்று கோப மாய்ச் சொன்னாள் உமா. "காட்டி லிருந்து பிடித்து வர வேண்டிய மனிதர் நீங்கள். உங்களுக்காக நான் இவ்வளவு செய்து வைத்திருக்கிறேன், பாருங்கள்!"

அவளைச் சீண்டி விட்டு முகம் சிவக்க வைப்பதில் அவனுக்கு ஒரு ஆனந்தம். பிறகு அவளை உட்காரச் சொல்லிச் சமா தானப் படுத்தினான். தன்னுடைய உண்மையான மகிழ்ச்சியைத் தெரிவித் துக் கொண்டான்.

"உமா! ஏழையாக இருந்தால்தான் எழுத வரும் என்று சிலர் சொல்லு கிறார்கள். நீ என்னை இப்படிப் பிரமாதப் படுத்தி வைத்திருக்கிறாயே? என்னை நானே பணக்காரன் என்று ஏமாற்றிக் கொள்ளும் வகையில் அல்லவோ சூழ் நிலையை ஏற்படுத்தி விட்டாய்!"



"ஏழையாக இருந்தால்தான் கற்பனை கட்டுமீறிக் கொண்டு ஓடுமாக்கும்!" என்று நகைத்தாள் உமா. "வயிற்றுக்குள்ளேயே அது அடங்கி வற்றிப்போய் விடாதா? குடும்பக் கவலை பிடுங்கி எடுக்கும் மனிதர்களால் நாட்டுக்கோ, மொழிக்கோ, கலைக்கோ எப்படி உழைக்க முடியும்? கம்பர், வள்ளுவர், இளங்கோ ஏழைகளாகவா இருந்தார்கள்? இல்லை, மேல் நாட்டுக் கலைஞர்கள் பஞ்சப் பாட்டு பாடிக்கொண்டு தான் தங்கள் உயர்ந்த கற்பனைகளையெல்லாம் உருவாக்கினார்களா?"

டால்ஸ்டாய், டிக்கன்ஸ், பங்கிம், தாகூர் பலரைப் பற்றிச் சொன்னாள் உமா. நிலைத்து நிற்கும் எழுத்துக்களை எழுதிய எழுத்தாளர்கள் பலர் தங்களுடைய சமுதாயத்துடன் போராடினார்களே தவிர, தங்கள் வயிற்றோடு போராடும் கேவலமான நிலையை அவர்களுடைய நாடு அவர்களுக்குக் கொடுக்கவில்லை. படித்த பொதுமக்கள் அவர்களுக்கு ஆதரவு தந்தார்கள்; அல்லது பணக்காரர்கள் அவர்களுக்குப் பரிவு காட்டினார்கள்; அல்லது பிறவியிலேயே அவர்கள் செல்வர்களாகப் பிறந்தார்கள்.

உமா கூறினாள். "ஏழைகள் நசுங்கிச் சீரழிவார்களே தவிர, எதையுமே அவர்களால் உருப்படியாகச் செய்ய முடியாது, மாமா! அந்தப் பழிச்சொல்லை நீங்கள் காதில் போட்டுக் கொள்ள வேண்டாம். முட்டாள்கள் பெருத்த மோசமான நாட்டில் தான் மொழிக்கு உழைப்பவர்கள் பட்டினி கிடந்து சாக வேண்டும். உங்களுக்கு ஏன் இந்தக் கவலை?"

நம்பிக்கையின் திரு உருவமாக, கலைமகளும் திருமகளும் கலந்த ஓர் கற்பனைச் செல்வமாக, எதிரில் உட்கார்ந்திருந்தாள் உமா. அவள் கொடுத்த பேனா அவனுடைய கரத்தின் உறுதியான பிடிப்பில் அகப்பட்டிருந்தது. என்றாலும் பசுபதியினால் ஏற்பட்ட பயம் அவனிடம் குறுக்கிட்டது.

"பசுபதியை நம்பி நான் பட்டணத்துக்கு வந்தேன்; அவர் போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. அவருக்கு உள்ள பணப் பசியில் என்னையே சாப்பிட்டு விடுவார் போலிருக்கிறது."

"அவரை நம்பித்தானா இந்த உலகத்தில் கடவுள் உங்களைப் படைத்திருக்கிறார்?" என்று கேட்டாள் உமா.

தணிகாசலத்துக்கு அவள் பேச்சு சிரிப்பைத் தந்தது. அப்போது கல்யாணி அம்மாளும் கௌரியும் புதுப் பால் காய்ச்சி எடுத்துக் கொண்டு அங்கே வந்தார்கள். அதை வாங்கிக் குடித்துக் கொண்டே உமாவின் தற்போதைய வளர்ச்சியைப்பற்றி அவர்களிடம் சொல்லிக் கேலி செய்தான்.

"இப்போது இவள் முன்போல் இல்லை; படித்துப் பட்டம் பெற்று உத்தியோகமும் பார்த்து வருகிறாள். இலேசாக நினைத்து விடாதீர்கள்! நான் எந்த வேலைக்குப் போக ஆசைப்பட்டேனோ, அதே வேலை இவளைத் தேடி வந்திருக்கிறது. இவளுக்குத் தகுந்த வேலைதான். இவளிடம் படிக்கும் மாணவிகள் இவளுடைய தொண்டைத் தண்ணீரை வற்ற வைத்து விடுவார்கள். இனிமேல் உமாவிடம் நாம் எல்லாரும் கூட மரியாதையோடு பழகவேண்டும்!"

"போங்கள், மாமா!" என்று சிணுங்கினாள் உமா. "இந்த வீட்டுக்கு நான் என்றுமே சிறியவள்தான். — பெரிய எழுத்தாளர்களுடைய புத்தகங்களுக்கு விரிவுரை சொல்கிறவள்தானே நான்! சொந்தச் சரக்கு உங்களைப் போன்றவர்களுடையது! அதை வைத்துக் கொண்டு சொல்லிக் கொடுப்பது என் வேலை."

"நீதான் எதிர்காலக் கவியாகச் சிறகடித்துப் பறக்கப் போகிறாயே!"

மற்றொரு 'போங்கள் மாமா'வைச் சொல்லி விட்டு அவள் கல்லூரிக்குப் போய் விட்டாள். தணிகாசலமும் அலுவலகத்துக்குக் கிளம்பினான்.



தணிகாசலத்தைத் திருப்பவும் குடும்பத்துக்குக் காரணமாக இருந்தது. சென்ற வாரத்தில் கல்யாணி அம்மாள் அவனுக்கு எழுதிய கார்டுதான். ஞாயிற்றுக்கிழமை வந்த அந்தத் தபாலை மறுநாள் தணிகாசலத்திடம் கொண்டு வந்து கொடுத்தார் பசுபதி.

கல்யாணி அம்மாள் எழுதியிருந்தாள்:

"மங்களத்துப் பாட்டி தன் பங்கு வீட்டை நல்ல விலைக்கு விற்றுக் கையில் ரொக்கம் வைத்திருக்கிறாள். தேவகியிடம் வாங்கிய கடனையும் கட்டி விடலாம். உன் மாமாவும் சென்னைக்கு நெல் அனுப்புவதாக ஒப்புக் கொண்டிருக்கிறார். உன் அத்தையின் மனம் மாறி, தனக்குப் பேரக்குழந்தை பிறக்கப் போவது தெரிந்த பிறகு. கௌரிக்குப் புது நகைகள் செய்து போட்டிருக்கிறாள். பணக் கஷ்டம் என்று நீ இப்போது மலைக்க வேண்டாம். எங்களை வந்து உடனே அழைத்துக் கொண்டு போ. உள்ளதை வைத்துக் கொண்டு வருமானத்தைச் செலவு செய்தால் பிறகு பார்த்துக் கொள்ளலாம்."

இந்தக் கடிதத்தில் குறிப்பிட்ட பண விஷயம் பசுபதிக்கு முக்கியமாய்த் தோன்றியிருக்க வேண்டும். "ஏற்கனவே வீடு பார்த்திருப்பதாய்ச் சொன்னீர்களே? உங்களுக்கு நல்ல காலம் பிறக்கப் போகிறது; உடனே ஊருக்குப் போய் வாருங்கள்!" என்று கூறினார்.

கடிதத்தில் எழுதியிருந்த விஷயங்கள் எல்லாமே உண்மை என்பதைத் தணிகாசலம் பொன் வயலுக்குப் போனவுடன் கண்டு கொண்டான். கௌரியின் கழுத்து டாலடித்தது; கைகள் கலகலத்தன; மூக்கில் வைர பேசரி மின்னியது. பாத்திரம் பண்டங்களும் துணிமணிகளும் வாங்கி வைத்திருந்தாள் மங்களத்துப் பாட்டி. பேரனிடம் சென்னை வாழ்க்கைக்கு அஸ்திவாரம் போட்டுக் கொள்ளச் சொல்லிச் சில ஆயிரம் ரூபாய்களைக் கைமாற்றினாள். ரங்கசாமி மாமா நெல் மூட்டைகளை வெளியில் கொண்டு வந்து போட்டு ரயிலடிக்கு ஏற்றி விட்டார். இவ்விதமாகப் பொன்வயல் செல்வங்கள் சென்னை நகரத்துக்குப் புறப்பட்டன.

மாம்பலத்தில் குடித்தனம் மகிழ்ச்சிகரமாகவே நடந்தது. தினந்தோறும் பத்து முறையாவது மாடிப் படியேறிக் கீழ் இறங்கினாள் உமா. உண்மையான ஆனந்தம் அவளுக்குத்தான். மாலை வேளைகளில் கல்யாணி அம்மாளையும் கௌரியையும் அழைத்துக்கொண்டு பட்டணத்தைச் சுற்றிக் காட்டினாள் உமா. படிப்பின் செருக்கோ, வேலையின் கர்வமோ, பணத்தின் மமதையோ அவளிடம் சிறிதும் இல்லை.

"நீங்களும் எங்களுடன் கடை வீதிக்கு வாருங்களேன், மாமா!"

"கடை வீதியில் உள்ள உதவாக்கரைச் சாமான்கள் உங்களை ஏமாற்றுவதற்காகவே வைத்திருக்கிறார்கள். ஆண்களுக்கு அங்கே வேலையில்லை. நீங்கள் வாங்குகிற பணத்தைக் கண்டால் எனக்குக் கோபம் கோபமாக வரும். நமக்குள் சண்டை வேண்டாம்; நீங்கள் மட்டும் போய் வாருங்கள்."

"பாட்டித்தனம் பிறவிக் குணம்!" [illegible] இருவரும் அதை ஒப்புக் கொண்டு நடந்தார்கள்.

* * * *

[illegible] நிலைமை மாறி [illegible] அதை [illegible] என்று கூட [illegible] பத்தினி [illegible] அவர் ஒரு உவ [illegible] என்று பையன் [illegible] இரவல் கதை

னைப்பான்மை தணிகாசலத்தை உறுத்திக் கொண்டேயிருந்தது. மற்றவர்களுடைய மாணிக்கம் போன்ற கற்பனைகள் பின்னை இல்லாச் சொத்துக்களா?

குதூகலமாக ஒரு நாள்மாலை, தணிகாசலம் வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்த வேளையில் உள்ளே வந்தார் பசுபதி. "இன்றைக்கு உங்களிடம் ஒரு நல்ல செதி சொல்லப் போகிறேன்" என்று அவன் முதுகில் தட்டிக் கொடுத்தார். அவன் கழுத்தில் கையைப்போட்டு அழைத்துக் கொண்டு போய்த் தம் அறைக்குள் உட்கார்ந்தார்.

"மிகவும் முக்கியமான சமாசாரம் இது" என்று ஆரம்பித்து, "எதற்கும் உங்கள் தாயாரிடம் கேட்டுக் கொண்டு சொல்லுங்கள். இதில் வரப் போகும் லாபத்தை எடுத்து விளக்கினால் அவர்கள் ஒப்புக் கொள்வார்கள். உங்களுக்கு அதிர்ஷ்டம் வரப்போகிறது!" என்றார்.

"அதிர்ஷ்டமா?"

தணிகாசலத்துக்கு அந்தச் சொல்லில் நம்பிக்கை இல்லை. உழைக்கப் பிறந்த மனிதர்களுக்கு அதிலெல்லாம் நம்பிக்கை ஏது? 'அதிர்ஷ்டம் முட்டாள்களை உயர்த்துகிறது' என்ற ஆங்கிலப் பழமொழியை அவன் மனத்துக்குள் நினைத்துச் சிரித்துக் கொண்டான்.



மள மள வென்று அவனைத் தூக்கி வைத்து அவனுடைய வேலைத் திறமையைப் புகழ்ந்தார் பசுபதி. ஆசை காட்டினார் 'அடுத்த ஆண்டில் இவ்வளவு பணம் கிடைக்கும்; அதற்கு அடுத்த ஆண்டில் இவ்வளவு கிடைக்கலாம்! அதற்கு அடுத்த ஆண்டிலே...'

என்ன செய்தால் பணம் கிடைக்கும் என்று அவர் சொல்கிறார் என்று அவனுக்கு விளங்கவில்லை. திருட வேண்டுமா? பொய் சொல்ல வேண்டுமா? பிறரை ஏமாற்ற வேண்டுமா? பணம் என்னவோ அவனுக்குத் தேவையாக இருந்தது. அது நல்ல வழியில் கிடைத்தால்!

பணம் கிடைக்கும் என்று சொல்லியவர், "இப்போது நீங்கள் மூவாயிரம் கொடுத்தால் போதும்" என்று முடித்தார். "அடுத்தவர்கள் ஐயாயிரத்துக்குக் கேட்கிறார்கள். நான் முடியாதென்று மறுத்து விட்டேன். எல்லாம் உங்களுக்காகத்தான். நீங்கள் எப்படியாவது முன்னுக்கு வரவேண்டுமென்று எனக்கு ஆசை."

"எதற்கு?" என்று கேட்டான் தணிகாசலம். வீட்டில் அப்போது அந்த அளவுக்குப் பணம் இருந்தது.

பசுபதி சிரித்தார். "இன்னுமா புரிந்து கொள்ள வில்லை? சிறு பிள்ளை போல் வேஷம் போடுகிறீர்களே!"

பகல் வேஷம் போடுவதற்கும் நடிப்பதற்கும் இன்னும் அவன் அவரிடம் தயாராகவில்லை. விழித்தான்.

"என்ன விழிக்கிறீர்கள்? நீங்கள்தாம் இனி இந்தப் பத்திரிகையின் முதலாளி, இதன் ஆசிரியர், இதன் சொந்தக்காரர். நீங்களே பத்திரிகை; பத்திரிகை நீங்கள். வெளுத்துக் கட்டுங்கள்!"

உற்சாகம் தாங்காமல் அவன் முதுகை வெளுத்துக் கட்டினார் பசுபதி.

தணிகாசலத்தின் தலை சுற்றியது.

"என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டார் பசுபதி.

"வீட்டில் கேட்டுச் சொல்கிறேன்."

"கேட்டுச் சொல்வதென்ன? முடித்துக் கொண்டு வாருங்கள். உங்களிடம் பணம் இருக்கிறது; அது எனக்குத் தெரியும். நான் உங்களுக்காக இரண்டாயிரம் நஷ்டப்படத் தயாராக இருக்கிறேன்; அது உங்களுக்குத் தெரியும். நாளைக்குக் காலையில் நல்ல முடிவோடு வந்து சேருங்கள்."

தணிகாசலம் யோசனையோடு எழுந்து வந்தான். அவனையே கூர்மையாகப் பார்த்துக் கொண்டிருந்த பசுபதி அவனைத் திரும்பவும் அழைத்து உட்கார வைத்தார். இப்போது அவருடைய முகம் கடுகடுப்பாக மாறியிருந்தது. கீழுதட்டைத் தம்முடைய வலது கரத்தால் தட்டி விட்டுக் கொண்டே, அவன் காதருகே குனிந்து எதையோ ரகசியமாகக் கூறினார். இதைக் கேட்டவுடன் தணிகாசலத்தின் முகம் பயத்தால் வெளுத்தது. தேகமே கிடுகிடு வென்று நடுங்குவதை அவன் உணர்ந்தான்.

''சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன்; பிறகு என்னைக் குறை சொல்லாதீர்கள்'' என்றார்.

தணிகாசலம் மாம்பலத்துக்குப் போன போது அவனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. கண்ணாடியில் முகம் பார்த்துக் கொண்டிருந்த கௌரியோ, அவனுக்குப் பூச்சூடிவிட்டுக் கொண்டிருந்த உமாவோ அவன் கண்களில் படவில்லை. ஆனால் அவர்கள் அவன் கண்ணெதிரில்தான் சிரித்துக் கொண்டு நின்றார்கள்.

பசுபதி கடைசியாகக் கூறிய அந்த வார்த்தைகள் அவன் மனத்தைக் கலக்கிக் குழப்பிக் கொண்டிருந்தன.

## அத்தியாயம் 7

# கண்கள் இரண்டு

சோற்றுக் கவலை, துணிக் கவலை, வீட்டுக் கவலை இல்லாத இரண்டு தவிட்டுப் புறாக்கள் 'ஜிவ்'வென்று வேப்பமரக் கிளையிலிருந்து காற்றில் தாவி ஒன்றை ஒன்று துரத்திக் கொண்டு பறந்தன. தணிகாசலம் தன் அறையில் சன்னலுக்குப் பக்கமாக நின்று கொண்டு அந்தப் புறாக்களைப் பார்த்து வியப்பும் வேதனையும் அடைந்தான். சென்னை நகரத்தில் கையில் காலணா இல்லாமல், ஒரு இடத்தில் அடங்கி ஒடுங்கி வேலை செய்யாமல், மற்றொரு புறாவைத் தங்கள் வாழ்வுக்கு எதிர்பாராமல், எப்படி அவைகளால் இவ்வளவு ஆனந்தமாகச் சிறகடித்துத் திரிய முடிகிறது? மனிதனை நம்பி மனிதன் வாழ வேண்டிய உலகத்தில் தங்களை நம்பித் தாங்களாகவே வாழும் இந்தப் பறவைகளுக்கு என்ன திமிர்! என்ன உல்லாசம், என்ன கொண்டாட்டம், என்ன எக்களிப்பு அவைகளுக்கு! அந்த ஆண் புறாவுக்கு ஒரு பசுபதி இருந்து, 'நாளைக்கு மூவாயிரம் ரூபாய் கொண்டு வந்தால் ஆபீசுக்கு வா; இல்லாவிட்டால் மூட்டை கட்டிக் கொண்டு வந்த வழியைப் பார்த்துக் கொண்டு போ!' என்று சொல்லியிருந்தால், அது இப்படித் தன் காதலியுடன் கொஞ்சிக் குலாவுமா?—பெண்கள் ஆண்களுக்குத் தங்கள் கழுத்தை நீட்டித் தாலி கட்டிக் கொள்ளுகிறார்கள்; ஆண்கள் பணத்துக்காகக் கையை நீட்டிக் கல்யாணம் செய்து கொள்ளுகிறார்கள். பெண் ஆணுக்கு மட்டிலும்தான் அடிமை; ஆணோ பெண்ணுக்கும் அடிமை; பணத்துக்கும் அடிமை.

பசுபதி தணிகாசலத்திடம் விஷயத்தைப் பச்சையாகவே சொல்லி அனுப்பி விட்டார். ஒன்று அவன் பத்திரிகையை விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும்; அல்லது தகவலைச் சொல்லி விட்டு வீட்டுக்குத் திரும்பிவிட வேண்டும்; அவரிடம் அதற்குமேல் வேலை கிடையாது.

மூவாயிரம் ரூபாய் கொடுத்து வாங்குவதற்கு அந்தப் பத்திரிகையில் என்ன இருந்தது? வெறும் பெயர். ஆயிரம் பேர்களுக்குக் கூடத் தெரியாத பெயர். கொடுக்கல் - வாங்கல் கணக்கையும் அப்படியே ஒப்புக் கொள்ளச் சொன்னார். கொடுக்க வேண்டிய கடன்காரர்களோ கதவைத் தட்டிக் கழுத்தறுப்பார்கள். வந்து சேரவேண்டிய தொகையோ ஏட்டில் இருந்தது. கோர்ட்டில் போட்டு நாக்கை வழித்துக் கொள்ள முடியாது!

பொறியில் தன்னை மாட்டி விடப் பார்க்கிறார் என்பது அவனுக்குப் புரிந்து விட்டது. இருந்தாலும் அதையே விலை கொடுத்து வாங்கி, ஏதாவது முன்னேற முடியுமா என்று அவனுக்கொரு நப்பாசை. கையில் பணமிருந்தால் மனிதனை அது சும்மா இருக்க விடுமா?

கௌரியும் உமாவும் ஆளுக்கொரு பக்கமாக நின்றுகொண்டு, அவனுடைய முகத்தையே உற்றுப் பார்த்தார்கள். ''ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் உமா.

தணிகாசலம் கௌரியைப் பார்த்து வருத்தத்துடன் சிரித்தான். சென்னையில் புதுக் குடித்தனம் வைக்க வந்தவனல்லவா அவன்?

''நீங்கள் சிரித்து மழுப்பி ஏமாற்றப் பார்க்கிறீர்கள்! உங்களுடைய சிரிப்பு அழுகையை விட மோசமாயிருக்கிறது!'' என்று கூறினாள் உமா.

தணிகாசலம் விவரத்தைக் கூறினான். உமா விடமாட்டாள் போலிருந்தது.

''இவ்வளவுதானே? எதற்கும் 'மலர்க் கொத்து' ஆசிரியரிடம் போய் யோசனை கேளுங்கள்! அவர் சொல்கிறபடி நடந்தால் உங்களுக்குக் கஷ்டம் வராது.''

தணிகாசலம் நினைத்தபடியே உமா கூறினாள். நேரே கந்தசாமியைப் பார்த்து வருவதற்காகக் கிளம்பினான். 'மலர்க் கொத்து' ஆசிரியர் ஐந்தே நிமிஷங்களில் அவனுக்கு நிலைமையைத் தெளிவுபடுத்தினார். பசுபதியை எதிர்பார்த்து அவன் சென்னைக்கு வந்ததே அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. வந்த பிறகு அதைச் சொல்லக் கூடாதென்று இதுவரை பேசாதிருந்தார். இப்போது பேசினார்:

...பவம் வேறு; தொழில் ... வேறு. எழுத்தாளரும் ...பம் தெரிந்தவரும் கூட்டா ... நடத்தினால் பத்திரிகை ...றும். எழுத்தாளர் எழுத் ...வேண்டும்; பத்திரிகையைத் ...த்தினால் அது படுத்து விடும். ...ர் இல்லாமல் வியாபாரியே ... நடத்தினால் அது தரக்குறை ...வடைச் சரக்காகி விடும்.''

...காசலம் சிந்தித்தான். அவர் ... கூறினார்: ''வாசகர்களுக்குப் ...த்தமானதை எழுதிப் பொருள் தேட ...ண்டும் என்ற ஆசை உங்களுக்கு அத...ல் வளர்ந்து விடும். வியாபார மனப்பான்மைக்குப் பலியானால் இங்கே இலக்கியமும் வளராது; பண்பாடும் பாழாகும். படிப்பவர்களுக்குப் பிடித்தமானதை எழுதுவது எழுத்தல்ல; மக்களுக்குப் பிடிக்க வேண்டியதை எழுதுவது தான் எழுத்து. அதனாலேயே எழுத்தாளனை உலகம் மதிக்கிறது.''



''பிழைப்புக்கு என்ன வழி?'' என்று கேட்டான் தணிகாசலம்.

''வருமானத்துக்கு வேறு நல்ல வேலை பார்த்துக் கொண்டு எழுதுங்கள். நீங்கள் எழுதிப் பிழைக்க முடியாது. தமிழ் நாட்டில் துணி வெளுக்கக் கூலியுண்டு; மனம் வெளுக்கக் கூலியில்லை.''

தணிகாசலம் புறப்படுவதற்காக எழுந்தான். ''முதலில் எனக்கு ஒரு நாவல் எழுதிக் கொண்டு வாருங்கள். பிடித்திருந்தால் தங்களுக்குப் பணம் தரச் சொல்கிறேன். அதன் பிறகு ஏதும் வேலை தேடிக்கொள்ளலாம்.''

வீட்டுக்குத் திரும்பி வரும்போது தணிகாசலம் முன்னுக்குப் பின் முரண்பாடுபோல் தோன்றிய கந்தசாமியின் வார்த்தைகளை அலசிப் பார்த்தான். பணமும் எழுத்தும் மாறி மாறி மனத் திரையில் சுழன்றன. 'பணம் வேண்டியதுதான்; எழுத்து அதற்குப் பணிந்து விடக் கூடாது. மற்றவர்களுக்குப் பிடித்ததை எழுதிக் கொண்டிராமல், தனக்குப் பிடித்ததை எழுதி மற்றவர்களைப் படிக்கத் தூண்ட வேண்டும். செப்படி வித்தை செய்கிற தந்திரந்தான் இது!'

மிகவும் தந்திரசாலியான தணிகாசலம் மறு நாள் பசுபதியின் தந்திரத்துக்குப் பலியாகவில்லை.

''வாருங்கள், முதலாளி! வாருங்கள்!'' என்ற கேலிப் பெருமையுடன் அவனை வரவேற்றார் ஆசிரியர் பசுபதி.

''நான் முதலாளியாகப் போவதில்லை! என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். உங்கள் திறமை எனக்கு வரவேவராது.''

சற்று நேரம் அவனைக் கூர்ந்து நோக்கி விட்டு, இனி அவனை மாற்ற முடியாதென்று தெரிந்தவுடன், தம்முடைய திறமையின் பெருமைகளையெல்லாம் அவனிடம் சற்று அவிழ்த்து விட்டார். அன்றைக்கு வந்த தினசரிப் பத்திரிகையில் அவரும் குமாரசாமியும் சேர்ந்து திரைப்படம் எடுப்பதாக விளம்பரம் வந்திருந்தது. ''பாருங்கள் இந்த விளம்பரத்தை! இன்னும் மூன்று மாதத்தில் படம் வரப்போகிறது'' என்றார் பசுபதி.

''கதை உங்களுடையது என்று போட்டிருக்கிறது. உங்கள் கதைதானா?''

''என்ன அப்படிக் கேட்கிறீர்கள்?''

''இல்லை, கேட்டேன். அப்படியானால் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள். கதை திருடுகிறவர்கள், பிற படங்களிலிருந்து காட்சி திருடுகிறவர்கள், நாவல்களிலிருந்து சம்பவங்களைத் திருடுகிறவர்கள் இப்படிச் சில பேர்வழிகள் அங்கே இருப்பதாகக் கேள்விப்பட்டேன்..''

'சுருக்' கென்று தைத்தது பசுபதிக்கு. ''அதுதானே கேட்டேன்?'' என்று மழுப்பிவிடப் பார்த்தார்.

''அதுதான் சொன்னேன், திருடர்களை மட்டும் சொன்னேன். நாணயமான யோக்கியர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களைச் சொல்லவில்லை.''

அவன் 'அதிகப் பிரசங்கித்தனம்' செய்வதாகப் பசுபதிக்குத் தோன்றியது. அது அதிகப் பிரசங்கித்தனம் செய்ய வேண்டிய அவசியமான கட்டம் என்று அவனுக்குத் தோன்றியது.

பசுபதிக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு வெளியில் வந்தான் தணிகாசலம். சிந்தாதிரிப் பேட்டைக் கடை வீதியில் அவன் நடந்து எழும்பூருக்கு வந்தபோது கடைத்தெரு சுறுசுறுப்பாக இருந்தது. உடல் உழைப்பால் பாடுபடும் மக்கள் இருபுறமும் தங்கள் - தங்கள் அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். வண்டி இழுப்போர், சலவை செய்வோர், துணி தைப்போர், சில்லறை வியாபாரி, செருப்புத் தைப்போர் இப்படிப் பலர் நிறைந்த உலகம் அது.

கிழிந்த செருப்பைத் தெருவோரத்துச் சக்கிலியிடம் கொடுத்துத் தைத்துப் போட்டுக் கொண்டு நடந்தான். அந்தச் சக்கிலியிடம் உள்ள தன்னம்பிக்கை தன்னைப்போல் படித்தவனிடம் இல்லை என்று தெரிந்தது. 'உடல் உழைப்புத் தெரியாத முட்டாள்' என்று என்னை நினைத்துக் கொள்ளாமல் படித்த அறிவாளி என்று நினைத்து ஏமாறுகிறேன். படித்த கூட்டமே என்னைப் போல் ஏமார்ந்து கொண்டிருக்கிறது. ஏன், நான்-படித்தவன்-செருப்புத் தைத்தால் என்ன? பாதி நேரம் வருமானத்துக்கு உடல் உழைப்பு; பாதி நேரம் எழுத்து.'

வீட்டில் வேலை போன விவரத்தைச் சொல்லி விட்டுப் புது நாவலுக்காகக் குறிப்புக்களைத் திரட்டி வைத்தான். மாலையில் கல்லூரியிலிருந்து திரும்பிய உமா மேல் மாடிக்கு வந்து சேர்ந்தாள். மூற்டகளில் குழம்பிக் கொண்டிருந்த ஒரு விசித்திரமான எண்ணம் அவனிடமிருந்து வெளிப்பட்டது.

"உமா! நான் இப்பொழுது செருப்புத் தைக்கக் கற்றுக் கொள்ளப் போகிறேன். கற்றுக்கொண்டு ஒரு செருப்புக் கடை வைக்கப் போகிறேன். பாதி நேரம் கடை; பாதி நேரம் எழுத்து."

உமா வெறித்துப் பார்த்தாள்: 'திடீரென்று இவருக்கு என்ன வந்துவிட்டது! காலையில் நன்றாகத்தானே இருந்தார்?'

"டால்ஸ்டாய் என்ன செய்தார் தெரியுமா? கடைசிக் காலத்தில் செருப்புத் தைத்தார். உலகத்தின் தலை சிறந்த நாவலாசிரியர்; செல்வத்தில் புரண்ட சீமான்; உலகம் போற்றும் மகாத்மா காந்திக்கு வழி காட்டியவர்."

குலுங்கிக் குலுங்கிச் சிரிக்க நினைத்த உமாவுக்குச் சிரிப்பு வரவில்லை. 'செருப்புத் தைத்தால் டால்ஸ்டாய் ஆகிவிட முடியாது' என்று சொல்ல நினைத்தாள். சொன்னால் அவனுக்குக் கோபம் வந்து விடும். ஆகவே, மெல்ல அவனிடம் சிரித்துப் பேசி அவனைத் தன்னுடைய வழிக்குக் கொண்டு வந்தாள்.

"உடல் உழைப்பின் மதிப்பைத் தெரிந்த நாடு அது. அங்கேகூட டால்ஸ்டாயின் மனைவி அவர் இப்படி வாழ்ந்ததற்காக அவரை வெறுத்து ஒதுக்கினாள். நீங்கள் இப்படிச் செய்தால் இங்கே உங்களைச் சமூகம் ஒதுக்கி விடும்."

"மனிதனை மனிதன் மதிக்கத் தெரியாத அழுகிப் போன சமூகம் நம்முடையது. உழைப்பில் உயர்வு தாழ்வு எதற்கு? நமக்குள் வீண் சண்டை போட்டுக் கொண்டு சாகிறோம். உலகம் நம்மை ஒதுக்கி விட்டு, மிதித்து விட்டு முன்னேறி வருகிறது."

"மாமா!" என்று ஆத்திரத்தோடு கத்தினாள் உமா. "உங்கள் நினைப்பு செயலாகும் காலம் இன்னும் வரவில்லை. நினைப்பதைச் சொல்லுங்கள். அதன்படி வாழ்வதற்கு முயற்சி செய்தால் உங்கள் எழுத்துக்கு இடைஞ்சல் வரும்."

'அதிகாரி நாகநாதனை விட, கள்ளுக் கடைக் கண்ணுச்சாமியைவிட, கற்பனை இரவல் பசுபதியை விடச் செருப்புத் தொழிலாளி நாணயமானவன்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். 'ஆனால் நாணயத்துக்கும் நாகரிகத்துக்கும் ஒத்து வராது. எழுத்துக்கு இடைஞ்சல் என்றால் வேண்டாம்.'

ஒரு தம்ளர் குளிர்ந்த தண்ணீரை அவனிடம் கொண்டு வந்து கொடுத்தது.



"குடித்து விட்டுப் பேசுங்கள்" என்றாள் உமா. குளிர்ந்த தண்ணீர் உள்ளே போனவுடன் உமாவின் பேச்சு அவனுக்கு நியாயமாகப் பட்டது.

"என்ன சண்டை?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தாள் கௌரி. தளர்நடையுடன் தென்பட்ட அவள் தோற்றத்தில் தாய்மையின் பொலிவு, புன்முறுவல் பூத்தது.

உமாவைக் கண்டவுடன் தணிகாசலத்துக்குக் கதையின் நினைவும், கௌரியைக் கண்டவுடன் குடும்ப நினைவும் வருவது வழக்கம். குடும்பப் பொருளாதாரத்தை அவளிடம் விவரிக்கத் தொடங்கினான். வேலை போய்விட்டதல்லவா?

"இதோ பார், கௌரி! இனிமேல் எனக்கு வேலை இல்லை; பணத்தை இறுக்

கிப் பிடித்துச் செலவு செய்.—நீங்கள் இரண்டு பேரும் தாராளமாய்க் கடைகண்ணிக்குப் போய் வாருங்கள். ஆனால் அங்குள்ள எல்லாச் சாமான்களையும் வீட்டில் இறக்குமதி செய்ய முயல வேண்டாம். இந்த ஊரிலுள்ள துணிக் கடை-நகைக்கடை எல்லாம் நம்முடையதென்று நினைத்துக் கொள்ளுங்கள்.''

''நான் என்ன அப்படிச் செலவு செய்கிறேன்? நீயே சொல் உமா!''

அவளைத் தொடர்ந்து, ''நீயே சொல், உமா!'' என்றான் தணிகாசலமும்.

''பிறக்கப் போகும் குழந்தைக்கு இப்போதே ஐம்பது ரூபாய்க்குப் பொம்மை வந்து சேர்ந்திருக்கிறது! - மாதச் சம்பளம் வாங்குகிறவர்களை பத்தாம் தேதிக்குமேல் பல்லவி பாடுகிற ஊர் இது. முதல் தேதி காப்பி ஓட்டல், மூன்றும் தேதி சினிமா, முப்பதாம் தேதி கடற்கரையில் மணிலாக் கொட்டைக்குக் காசு இருக்காது. எனக்கோ ஆறு மாதம் இடுப்பு ஒடிய, மூளை குழம்ப, கை வலிக்க எழுதி முடித்தால் பணம் உண்டு. அதுவும் எனக்குப் பிடித்தது ஆசிரியருக்கும் பிடித்திருக்க வேண்டும்.''

''ஆசிரியருக்குப் பிடிக்காவிட்டால்?'' என்றாள் உமா.



அவள் வாயைப் பொத்த வேண்டும் போல் கோபம் வந்தது தணிகாசலத்துக்கு. எடுத்த எடுப்பிலேயே இப்படி வெடுக்கென்று சொல்கிறாளே!

''பிடிக்காவிட்டால் குப்பைக்கூடை; அதை எடுத்துக் கௌரி நாலணாவுக்கோ ஆறணாவுக்கோ பழைய காகிதக்காரனிடம் போடுவாள்; நீங்கள் இரண்டு பேரும் கடை வீதிக்குப் போய் நல்ல கலர் ரிப்பன் வாங்குவீர்கள்.''

''பொருளாதார உபதேசம் வீட்டில் நடக்காது; ஊருக்குச் சொல்லுவதற்கு வைத்துக் கொள்ளுங்கள்'' என்றாள் உமா. கௌரியோ 'உர்'ரென்று பார்த்துவிட்டு, தோள் பட்டையில் முகத்தை இடித்துக் கொண்டு, வேகமாக வெளியில் சென்றாள். பொன் வயலில் பாட்டி கொடுத்த பணம் பத்திரமாகப் பெட்டியில் இருந்தது; கடை வீதியில் வண்ண வண்ணச் சாமான்கள் இருந்தன; கௌரிக்கு இவ்வளவுதான் தெரியும். கணக்கு வழக்கு ஒன்றும் தெரியாது.

உமாவிடம் தன்னுடைய நாவலின் கதைச் சுருக்கத்தைக் கூறினான் தணிகாசலம். அவளுடைய முக மாறுதல்கள் ஓரளவு அவனுக்கு உரைகல்லாகப் பயன்பட்டன. அவள் அழுதாள், சிரித்தாள், வெட்கப் பட்டாள், பயந்தாள், அவனைத் திட்டினாள், — கதையில் யாரையோ கொடுமைப் படுத்தியதற்காக.

''நாளையிலிருந்து தொடங்கப் போகிறேன். காலையில் மூன்று மணி நேரம்; மாலையில் மூன்று மணி நேரம்.''

''உங்களுக்கு வேண்டுமானால் ஒரு உதவி செய்கிறேன்'' என்றாள் உமா. ''எனக்கு நேரம் கிடைத்தால் கல்லூரி விட்டு வந்த பிறகு உங்களுக்காக எழுதித் தருகிறேன். நீங்கள் கிடுகிடு வென்று சொல்லிக்கொண்டு வாருங்கள்; நான் மளமளவென்று எழுதுகிறேன்.''

''நீ வளவளவென்று குறுக்கே பேச வாயே!'' என்றான் தணிகாசலம்.

முறைத்துப் பார்த்து விட்டு, ''வேண்டாமென்றால் போங்களேன்!'' என்று கிராக்கி பண்ணிக் கொண்டாள் உமா. பிறகு கொஞ்சம் விட்டுக் கொடுத்து, ''நமக்குள் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்வோம்'' என்றாள். ''நான் எழுதும்போது குறுக்கே பேச மாட்டேன்; நீங்கள் என்னை அதட்டவோ, அதிகாரம் செய்யவோ கூடாது; நான் உங்கள் வேலைக்காரியல்ல.''

அவளுடைய படிப்பின் கர்வமும், கட்டுப்பாடற்ற சுபாவமும் கலை ஆர்வத்துடன் அப்போது போட்டி போடுவதைக் கண்டான். அதுபோன்ற சுதந்திர உணர்ச்சியை மதிக்க வேண்டுமென்று அவனுக்கு ஆவல். இருந்தாலும் வாய்ப்பேச்சில் அவளுக்கு விட்டுக் கொடுப்பதற்கு மனமில்லை.

''அதட்டுவேன், அதிகாரம் செய்வேன்; தயவு தாட்சண்யம் என்னிடம் கிடையாது. கையில் வலுவுள்ளவரை நானே எழுதிக் கொள்வேன்'' என்று தணிகாசலம் வீம்பு பேசினான்.

''போங்களேன்! அவ்வளவு அலட்சியம் உங்களுக்கு..''

''போயேன்! வீண் கர்வம் உனக்கு...''

''நான் போகிறேன்'' என்று படீரென எழுந்தாள் உமா. அற்பக் காரணத்துக்கு அளவற்ற கோபம் அவள் முகத்தில் கனிந்தது. சிரிப்பை அடக்கிக் கொண்டு அவளுடைய கரிய கண்களைக் கவனித்தான். அந்தக் கண்களில் வேதனையைக் கண்டவுடன் அவனுக்குப் பரிதாபமாக இருந்தது. (தொடரும்)

## ஸ்ரீ ஷண்முகானந்தா
## பைன் ஆர்ட்ஸ் & சங்கீத சபா (REGD.)
292, பிளாங்க் ரோடு, பம்பாய் - 22

★

### சங்கீத, நடன விழா - 1958
நிகழ்ச்சி நிரல் (D.V.)

*17-1-58 வெள்ளி இரவு 7 மணிக்கு*
**ஸ்ரீ தியாகராஜ பூஜை**
**சபாவின் சங்கீத வித்யாலய மாணவர்கள் பாட்டு**

*17-1-58 வெள்ளி இரவு 8 மணிக்கு*
**குளிக்கரை பிச்சையப்பா பிள்ளை & பார்ட்டி**
— நாகஸ்வரம்

*18-1-58 சனி மாலை 6 மணிக்கு*
**இசை விழா ஆரம்பம்**

*18-1-58 சனி மாலை 6-30 மணிக்கு*
**செம்மங்குடி, கிருஷ்ணன், பழனி, கோதண்ட ராம அய்யர்**

*19-1-58 ஞாயிறு மாலை 6 மணிக்கு*
**எம். எஸ். சுப்புலக்ஷ்மி & பார்ட்டி**

*20-1-58 திங்கள் இரவு 8 மணிக்கு*
**அரியக்குடி, சௌடய்யா, மணி, சுவாமிநாதபிள்ளை**

*21-1-58 செவ்வாய் இரவு 8 மணிக்கு*
**எம். டி. ராமநாதன், கிருஷ்ணன், பழனி**

*22-1-58 புதன் இரவு 8 மணிக்கு*
**ஆலத்தூர் சகோதரர்கள், சௌடய்யா, மணி சுவாமிநாத பிள்ளை**

*23-1-58 வியாழன் இரவு 8 மணிக்கு*
**மதுரை மணி அய்யர், லால்குடி, மணி கோதண்டராம அய்யர்**

*24-1-58 வெள்ளி இரவு 8 மணிக்கு*
**எம். எல். வசந்தகுமாரி & பார்ட்டி**

*25-1-58 சனி மாலை 6 மணிக்கு*
**எம்பார் விஜயராகவாச்சாரியார்** — ஹரிகதை

*26-1-58 ஞாயிறு மாலை 6 மணிக்கு*
**விலாயத் கான் & பார்ட்டி** — சிதார்

*28-1-58 & 29-1-58 இரவு 8 மணிக்கு*
**சி. வி. எஸ். வசந்தா & பார்ட்டி** — நடனம்

*30-1-58 & 31-1-58 இரவு 8 மணிக்கு*
**கமலா லக்ஷ்மண் & ராதா** — நடனம்

*1-2-58 & 2-2-58 மாலை 6-30 மணிக்கு*
**வைஜயந்திமாலா & பார்ட்டி** — நடனம்

**கிங்ஸ் சர்க்கிள் ரயில்வே ஸ்டேஷன் சமீபமுள்ள சபா கட்டிடத்தில் நடைபெறும்**

**சீஸன் டிக்கட்டுகள்**
**அங்கத்தினர்கள்:** ரூ.100, 70, 30, 15, 10
**விருந்தினர்கள்:** ரூ. 100, 90, 40, 20, 15



தரத்திலும் உபயோகத்திலும்

# இன்னும் முன்னணியிலுள்ள





## 10-ல் 9 நபர்



# பிரபாத்

- ஸ்டவ்ஸ்
- லாண்டர்ன்ஸ்
- மேன்டல்ஸ்
- ப்ளோ லாம்ப்ஸ்

உபயோகிக்கின்றனர்

பிரபாத் (ஸ்டவ் அண்ட் லாம்ப்) பிராடக்ட்ஸ் கம்பெனி
பிரைவேட் லிமிடெட்

*தோபின் சேம்பர்ஸ், பார்ஸி பஜார் வீதி போர்ட், பம்பாய்-1*

# தந்தையின் தியாகம்

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்



பெற்ற மகளை, தெய்வ சன்னிதியில் நரபலியாக இடுவதற்கு, தந்தை ஒருவன் உடன்படுகிறான். இந்தக் கதை பழங்கால கிரேக்க இலக்கியம் ஒன்றிலே இடம் பெறுகிறது.

இப்படியும் தந்தை ஒருவன் செய்வானா? செய்வது கடினந்தான். ஆனால் செய்யவே மாட்டான் என்று சொல்வதற்கில்லை. நம்முடைய நாட்டுக் கதைகளில் வரும் தசரதனும், மனுநீதி கண்ட சோழனும், சிறுத் தொண்டரும் என்ன செய்தார்கள்? வாய்மையின் பெயரால், தசரதன் மூத்த மகனைக் காட்டுக்கு அனுப்பினான்; அறத்தின் பெயரால் சோழன் தன்மகனைத் தேர்க்காலில் கொடுத்தான்; சிறுத் தொண்டரோ அன்பின் பெயரால், அருமை மகனை வெட்டிப் பிள்ளைக்கறி சமைத்தார்.

ஆகவே, இப்படியும் செய்வானா என்று கேட்பதற்குப் பதிலாக, ஏன் அந்தக் கிரேக்கத் தந்தை அவ்வாறு செய்தான் என்று எண்ணுவதிலே பயன் உண்டு. ஏன் அப்படிச் செய்தான்?

அவன் ஓர் அரசன், அகமெம்னன்* அவன் பெயர். அவன் தம்பி மெனலாஸ் என்பவனும் ஓர் அரசன். மெனலாஸின் மனைவி பேரழகியான ஹெலன். அவளை, ட்ராய் நகர அரசகுமாரனை பாரிஸ் காதலிக்கிறான். தன் கணவனைத் துறந்து, பாரிஸோடு ஹெலன் போய் விடுகிறாள்.

கிரேக்க அரசர்கள் அனைவரும் தமது படைகளோடு அகமெம்னன் தலைமையில் கூடுகிறார்கள். கடல் கடந்து சென்று, ட்ராய் நாட்டின்மேல் படையெடுத்து, ஹெலனை மீட்டு வரவேண்டும் என்று முடிவு செய்கிறார்கள். இதனால் விளைந்த பெரும் போரும், ட்ராய் நகர முற்றுகையும், அந் நகரத்தின் அழிவும், ஹோமர் என்ற கிரேக்கக் கவிஞனால் 'இலியது' என்ற பெருங் காவியத்தில் பேசப் படுகின்றன. இந்த நீண்ட கதையின் தொடக்கத்தில் வருகிறது அரசன் அகமெம்னன் தன் மகளைத் தெய்வத்துக்குப் பலியாக அளித்த வரலாறு.

ஆலிஸ் என்ற துறைமுகத்தில், கிரேக்கப் படைகளை ஏற்றி வந்த கப்பல்கள் முடங்கிக் கிடக்கின்றன. அத்தனை கப்பல்களும் பாய்மரக் கப்பல்கள், காற்று அடித்தால் அல்லவா நகர

*Agamemnon, Menelaus Helen, Paris, Troy.

முடியும்? காற்றையே காணோம். நாட்கள் ஓடின, மாதங்கள் ஆயின. காற்று அசையவில்லை, கப்பல்களும் நகரவில்லை. படைவீரர்களுடைய உற்சாகம் குன்றியது. சோர்வு தலை காட்டியது! 'யாருக்கு வேண்டும் கப்பலில் அடைத்துக் கிடக்கும் இந்த நரக வேதனை? போருக்குப் புறப்பட்ட அழகொன்றே போதும். இனி போர் வேறா?' என்ற சலிப்பு அங்கங்கே சலசலத்தது. படைத் தலைவர்கள் கூடிக் கூடி என்ன செய்வது என்று ஆலோசித்தார்கள். ஒன்றும் துலங்கவில்லை.

இந்த நிலையில், கோயிற் பூசாரிகள் 'இது தெய்வக் குற்றமாக இருக்கலாம்' என்று தெய்வத்தின் உள்ளத்தை நேரில் அளந்தவர்கள் போல் தலை அசைத்தார்கள். கால்சாஸ்* என்ற வயதான பூசாரி சொன்னான்: 'ஆம், இது தெய்வ சோதனைதான். படைகளின் தலைவனான அரசன் அகமெம்னன், கன்னித் தெய்வமான அர்தேமிஸின்** கோபத்துக்கு ஆளாகி விட்டான். இல்லாவிட்டால், காற்று அடிக்காமல் இருக்குமா, கப்பல்களும் இப்படி அசைவற்று உறங்குமா? தேவி அர்தெமிஸ் செய்யும் சோதனைதான் இது. அவளே என்னிடம் சொன்னாள்.'

'அப்படியா? பெரியவரே, தேவி என்ன சொன்னாள்?' என்று பரபரப்புடன் கேட்டார்கள் கால்சாஸைச் சூழ்ந்து நின்று கொண்டிருந்த பலர்.

'தேவியின் வாக்கு, என்றாலும் பிடிக்குமா, அரசன் அகமெம்னனுக்குப் பிடிக்குமா?' என்றான் கால்சாஸ், அகமெம்னனைக் கோணலாகப் பார்த்துக் கொண்டு.

அகமெம்னன் கால்சாஸை நிமிர்ந்து நோக்கினான். 'தனக்குப் பிடிக்காத உண்மை உலகிலே இல்லை' என்ற பெருமிதம் அவன் பார்வையில் மிளிர்ந்தது.

'பேசு, கிழவா, பயப்படாதே' என்றான் அவன்.

கால்சாஸ் நகைத்தான். அவன் விழிகளில் குரூரம் நிறைந்த வெறி ஒன்று படர்ந்தது.

'பயமா? எனக்கா? தெய்வங்களின் குரலைக் கேட்டுக் கேட்டு வைரம் பாய்ந்த இந்த நெஞ்சிலும் பயமா? அரசே! அஞ்ச வேண்டியவன் நீ. கேள், அரசே, கேள், என் மூலமாகத் தேவி அர்தெமிஸ் பேசுகிறாள். அர்தெமிஸ், கன்னித் தெய்வம், காட்டுக்கரசி, வேட்டைத் தலைவி. அவள் பேசுகிறாள். நீ அரசன், ஆனாலும் மனிதன். மனிதனே, தெய்வம் பேசுகிறது, கேள்' என்று கம்பீரமான குரலில் பேசினான் கால்சாஸ்.

* Calchas. ** Artemis.

சூழ்ந்து நின்றவர்களுக்குப் புல்லரித்தது. கால்சாஸின் குரலில் தொனித்த மிடுக்கும், கடுமையும், அப்பாலுக்கு அப்பாலின் ஆட்சிப் பெருமிதமும், அரசன் அகமெம்னனையும் கலக்கின. அவன் மௌனமாய்த் தலைவணங்கினான். கால்சாஸ் பேசலானான்:

'அரசே! நீ என் கோயில் வனத்தில் புகுந்து, வேட்டையாடினாய். என் மான்களில் ஒன்றைக் கொன்றாய். ஆம், பேசுவது நான்தான் கன்னி அர்தெமிஸ், காட்டுத் தெய்வம். நாடாளும் வேந்தே, என்ன சொல்கிறாய் இதற்கு? நீ கொன்ற உயிருக்குப் பதிலாக உயிர் ஒன்றைத் தா. இல்லையென்றால் உன் கப்பல்கள் இங்கேயே இருக்க வேண்டி வரும். உன் சேனை சிதறி விடும். உன் தம்பியின் மனைவி துராய் நகரிலே பாரிஸோடு கொஞ்சிக் குலாவி மகிழ்கிறாள். உன் தம்பி அவளை இழந்து இங்கே வாடுகிறான். கிரேக்கர் புகழ் மங்குகிறது, கிரேக்கர் வீரம் பொய்க்கிறது. கிரேக்கர் வலிமை தேய்கிறது.'

அகமெம்னன், தன்னைச்சுற்றி நெருங்கி நின்ற படைத் தலைவர்களைப் பார்த்தான். அவர்கள் முகத்தில் பூசாரியின் ஆவேசச் சொற்கள் உழுத திகைப்பையும், துயரத்தையும் கண்டான். தன்னை—எல்லோருக்கும் தலைவனாக நின்று, வீரத்தை நோக்கி, புகழை நோக்கி, நீதியை நோக்கிப் பாதை வகுக்கும் தன்னை - ஏதோ தீராப் பெருநோய் பிடித்தவனைப் போல அவர்கள் பார்ப்பதை உணர்ந்தான். தெய்வங்கள் வாழும் ஒலிம்பஸ்* மலை எழுந்து வந்து, தன் நெஞ்சின்மேல் விழுந்து, அதை நசுக்குவதுபோல் அவனுக்குத் தோன்றியது. தனக்கே இனம் புரியாத அவ்வளவு மெல்லிய குரலில் அவன் பேசினான்:

'தேவி! கன்னித் தெய்வமே, எங்களைக் காக்கும் அருளே! நான் செய்தது தவறு தான், ஆனால் அறியாமல் செய்தது.'

பூசாரியின் குரல் ஓங்கி அதிர்ந்தது:

'அறியாமல் செய்ததா? இல்லை, அரசனே, அகந்தையால் விளைந்தது. எப்படி நீ செய்தால் என்ன, செய்தாய், அதுதான் எண்ண வேண்டிய பொருள். வினையின் விளைவைத் தடுக்க யாராலும் முடியாது. அந்த விதியின் வலிமைக்கு வலிமையாய் நிற்பவள் நான். என்ன சொல்லுகிறாய்?'

அரசன் ஒன்றும் பேசவில்லை. என்ன பேசுவது? சொற்கள் தொண்டையிலேயே விம்மி அடங்கின. கூட்டத்திலிருந்து குரலொன்று எழுந்தது:

* பண்டைக் கிரேக்கர்கள் தெய்வங்கள் ஒலிம்பஸ் மலையில் வாழ்வதாக நம்பினார்கள்.

'அர்தெமிஸ் தாயே, எங்கள் அரசன் செய்த இந்தப் பாபத்தைக் கழுவு, நாங்கள் செய்ய வேண்டுவது என்ன, அதை மாத்திரம் அருள்வாயா?'

பூசாரி தன் கனல் விழிகளைக் குரல் வந்த திசையை நோக்கித் திருப்பினன். புயல் போன்ற சிரிப்பொன்று குரலை உலுக்கியது. மலையருவி போல் சொற்கள் சிறி விழுந்தன:

'உயிருக்கு உயிர். கொன்ற உயிருக்குப் பதில் மற்றொரு உயிர். துடித்து மடிந்த என்னுடைய மானைப்போல், என் பலி பீடத்தில் அது துடிக்க வேண்டும். அப்போதுதான், என் நெஞ்சம் குளிரும்.''

கூட்டத்திலிருந்து பல குரல்கள் 'அதற்கென்ன? தருகிறோம் தாயே, தருகிறோம், ஒரு மானுக்குப் பதிலாக ஓராயிரம் மான்கள் தருவோம்' என்றெல்லாம் பேசின. அகமெம்னன் மட்டும் வாய் திறக்க வில்லை. உருத் தெரியாத பயங்கரத் தீமை அவனை அணுகுவதாக மட்டும், ஏதோ ஒன்று அவனுள்ளே எச்சரிக்கை செய்தது. பூசாரி பேசினன்:

'மானுக்குப் பதிலாக மானு? ஆம். ஆனல் மனித மான் வேண்டும், கன்னிப் பெண் குருதி என் சன்னிதியில் ஓட வேண்டும். குற்றவாளி அகமெம்னன். இவன் வயிற்றிலே பிறந்த...'

'ஆ' வென்று தன்னையும் அறியாமல் கூவினன் அரசன் அகமெம்னன். பூசாரியின் குரல் இந்த இடைமறிப்பைப் பொருட்படுத்தாமல் புரண்டு சென்றது.

'ஆம், இந்த அகமெம்னன் வயிற்றிலே பிறந்த இபிஜீனியா என்ற கன்னிப் பெண்ணைப் பலியாகத் தந்தால் ஏற்பேன். இல்லாவிட்டால் அழிவு. இது தேவ தெய்வத் தீர்ப்பு.'

பூசாரியின் உடல் நடுங்கியது. அவன் விழிகள் குத்திட்டுக் கோரமாய்ச் செருகின. 'ஓ'வென்று கதறி, பிறகு விம்மிக் குலுங்கிய நீண்ட முனகல்களில் அவன் குரல் ஒடுங்கியது. அவன் நெடுமரம் போலக் கீழே சாய்ந்தான்.

கூட்டத்தில் ஒருவரும் பேசவில்லை. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு, பித்துப் பிடித்தவர் போல் நின்றனர். அரசன் மகள் இளங்கன்னி இபிஜீனியாவைப் பலியிடுவதா, என்ன கொடுமை! ஆனல்...ஆனல்...அர்தெமிஸ் தெய்வத்தின் ஆணை, அதைத் தடுக்க முடியுமா? நாசம், எல்லோரையும் நெருங்கி வரும் நாசம், தெய்வ கோபத்தின் தடுக்க முடியாத ஈட்டி முனை, என்ன செய்வது? திகைப்பும், பயமும் ஒவ்வொரு முகத்திலும் மாறி மாறி ஓடின.

கல்லாய்ச் சமைந்தவன் போல் அகமெம்னன் வீற்றிருந்தான். பிறகு மெல்லத் தலையை நிமிர்த்தித் தன் படைத் தலைவர்களின் முகங்களை வெறித்து நோக்கிய விழிகளால் துழாவினன். வீரர்கள், எத்தனையோ போர்களில் புண்ணும் வெற்றியும் சுமந்த வீரர்கள் தாம், ஆயினும் மனிதர்கள்; காரணம் காண முடியாமல் எங்கிருந்தோ வரும் விதிச் சூறாவளியில் பொடியாகும் பொம்மைகள், அது வருகிறது என்று அறிந்ததும் மனிதத் தன்மையைப் பறி கொடுக்கும் பரிதாபங்கள். இவர்களையே கண்டான் அகமெம்னன். யுக யுகமாகச் சிறைப்பட்டு, வலிமை குன்றிய வை போல், சொற்கள் தேய்ந்து, மெலிந்து நகர்ந்தன. தம்பி மெனலாஸைப் பார்த்துப் பேசினன்:

'இபிஜீனியாவுக்குச் செய்தி அனுப்பு. அவள் இங்கே வரவேண்டும்.'

மெனலாஸ் தலைவணங்கினன். பிறகு மெல்ல வெளியே சென்றான். படைத் தலைவர்கள் ஒவ்வொருவராக, தலை தாழ்த்தி, சத்தம் இன்றி, பேச்சின்றி வெளியே சென்றனர்.

ஒன்றையும் கவனியாமல் அகமெம்னன் மட்டும், சிலைபோல வீற்றிருந்தான். அவன் முன் மயக்கம் தெளியாத கால்சாஸ் என்ற கிழப் பூசாரியின் உடல் கட்டையாகக் கிடந்தது. (தொடரும்)




அவர்:—ஏன் ஸார், போயும் போயும் இந்த ஹேர் ஆயிலை வாங்கி இருக்கீங்களே, இது கறுப்பா இருக்கிற தலையைத் தும்பைப் பூ மாதிரி வெள்ளையாக ஆக்கிடுமே!

நண்பர்:—எல்லாம் தெரிந்து தான் ஸார் வாங்கினேன். இந்தக் கறுப்பு நாயை வெள்ளை நாயாக மாற்ற வேண்டும்: அதுக்குத் தான் இந்த ஹேர் ஆயிலை வாங்கினேன்!

## உங்கள் குடும்பத்தினரை பல்லாண்டுகள்



மாடல் U-717: 5 வால்வுகளும், 3 பாண்டுகளுமுள்ள ஏஸி டிஸி ஸூப்பர் ஹெட் ரேடியோ. எல்லா ஸ்டேஷன்களும் கிடைக்கும். கிராமபோன் மற்றும் எக்ஸ்டென்ஷன் ஸ்பீக்கர் இணைக்க வசதி: மரூன் நிறத்தில் பெரிய பிளாஸ்டிக் காபினெட். விலை ரூ. 250.00



மாடல் 703: மேன்மையான மாடல். A-703 ஏஸி ஸெட்: B-703 டிரை பாட்டரி ஸெட். அழகிய மர காபினெட். 5 வால்வுகள், 3 பாண்டுகள். தனியான டோன் கன்ட்ரோல். விலை ரூ. 325.00

GRA. 6190

# மகிழ்வைக்கும் அன்பளிப்பு

# —ஒரு நேர்த்தியான நேஷனல்-எக்கோ ரேடியோ

**மின்சாரசக்தி கொண்டு இயங்கும் செட்டுகளும், டிரை பாட்டரி செட்டுகளும் உள்ளன**

இதோ உங்கள் குடும்பத்தினரை பல்லாண்டுகள் மகிழ்வைக்கும் ஒரு அன்பளிப்பு! நேஷனல்-எக்கோ ரேடியோ காலநேரமும் மணிக்கணக்கில் உங்கள் குடும்பத்தினரை ஒன்றாகக்கூடி மகிழ்வைக்கும்!

இன்று ரேடியோ உலகில் அன்றாடம் நடைபெறும் நிகழ்ச்சிகளை வீட்டிலிருந்தே தெரிந்துகொள்ள மிகவும் அவசியமான சாதனமாகும். மின்சாரசக்தி அல்லது டிரை பாட்டரி கொண்டு இயங்கும் நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் ஒவ்வொருவர் சக்திக்கேற்ற பல்வேறு விலைகளில் உள்ளன.

**தேர்ந்தெடுக்க பல்வேறு மாடல்கள்**

உங்களுக்குத் தேர்ந்தெடுக்க ரூ. 200.00 மட்டுமே விலையுள்ள மாடல் 241லிருந்து மேன்மையான மாடல் ARG-271 ரேடியோகிராம்வரை பன்னிரண்டு பல்வேறு நேஷனல்-எக்கோ மாடல்கள் உள்ளன! அவைகளை உங்களுக்கு அருகாமையிலுள்ள நேஷனல்-எக்கோ ரேடியோ வியாபாரியிடம் பார்வையிடுங்கள்.

**நேஷனல்-எக்கோ ரேடியோக்கள் சிறந்தவை — அவைகள் மான்ஸூனைஸ்* செய்யப்பட்டவை**

* வழக்கத்தைவிட 16 மடங்கு அதிகமாக 'டிராப்பிக் புரூப்' செய்யப்பட்டவை



மாடல் *A-706*: வால்னட் மெருகும், தங்கவர்ண வேலைப்பாட்டுடனும் கூடிய அழகிய செட். இனிய த்வனி. 6 வால்வுகள், 6 பாண்டுகள். விலை ரூ. **390.00**



மாடல் *A/U-187*: 6 வால்வுகளும், 8 பாண்டுகளுமுள்ள நேர்த்தியான செட். அழகிய மர காபினெட். மாடல் *U-187* ஏஸி/டிஸி செட்; மாடல் *A-187* ஏஸி செட். விலை ரூ. **475.00**



மாடல் *A-317*: 7 வால்வுகள், 8 பாண்டுகள்; வால்னட் மெருகுள்ள அழகிய காபினெட். விலை ரூ. **595.00**

எல்லா விலைகளும் நெட்.
உள்ளூர் வரிகள் தனி.

**ஒவ்வொரு நேஷனல்-எக்கோ செட்டும் ஒரு வருஷம் உத்திரவாதம் கொண்டது**

**ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸெஸ் பிரைவேட் லிமிடெட்**

ஒபெரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்டிரீட், கல்கத்தா 13 • 1/18, மௌண்ட் ரோடு, மதராஸ் • 36/79, சில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பங்களூர் • ஜோக்கியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி



# ராமராஜ்யம்

ஜில்லா நீதிபதி சுபோதராய் தம் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்றுக் கல்கத்தாவில் வசிக்கலானார். கீதையைப் பாராயணம்செய்தல், மனைவியுடன் சினிமாப் படங்களைப் பார்த்தல், நண்பர்களுடன் 'பிரிட்ஜ்' (சீட்டாட்டம்) ஆடுதல், அரசியலைப் பற்றி வாதம் செய்தல் இவை அவருக்குப் பிடித்த விஷயங்கள். மற்றொரு விஷயத்திலும் அவருக்கு ஈடுபாடு உண்டு. ஒவ்வொரு சனிக்கிழமையும் மாலைநேரத்தில் அவர் வீட்டில் ஒரு 'ஸியான்ஸ்' கூடும்; அதாவது மரித்தவர் ஆவிகளை அழைக்கும் அரங்கு ஒன்று கூடும். இந்த ஆவி அழைப்புக் குழுவில் உறுப்பினர் எழுவர்.

1. சுபோதராய், 2. விபாசாதேவி-அவருடைய மனைவி, 3. ஹரிபத கவிரத்ன-பேராசிரியர், 4. காளுபி காங்குலி-முதிய தேச பக்தர், 5. புஜங்க பஞ்ஜ்-இளம் தேசபக்தர், 6. அவதவிஹாரிலால்-வாணிபத்துறையில் வல்ல தேசபக்தர், 7. பூதநாத நந்தி-புகழ்பெற்ற 'மீடியம்'. இவர்மீது தான் ஆவி இறங்கும்.

பூதநாத பாபு நல்ல நிபுணர். மரித்தவர்களின் ஆவிகளை அழைக்கும் 'ஆவாகனம்' தொடங்கிய மூன்றே நிமிடங்களுக்குள் மறுமையில் வாழ்வோரின் ஆத்மா இறங்கி அவரை ஆட்கொள்ளும். அச்சமயம் அவர் வாயிலிருந்து ஆவியின் அதிசயக் குரல்கள் கட்டுக்கு அடங்காமல் வெளிவரும். பூத நாத்துக்கு வயது முப்பதுக்குள் இருக்கும். அவர் ஒரு சமயம் பள்ளிக்கூட ஆசிரியராக இருந்தவராம். பின்னர், பத்திரிகைகளுக்குச் சிறுகதை, நாடகம், கவிதை ஏராளமாக எழுதி யிருக்கிறார். அப்புறம் நாடகக் கம்பெனிகளிலும், சினிமாக்களிலும் நடித்திருக்கிறார். குஸ்தி வித்தை சொல்லித் தர ஒரு பயிற்சிக்கூடம் கூட அவர் நடத்தி விருப்பதாகத் தெரிகிறது. இப்பொழுது அவர் தம்மிடத்தில் அதிசயிக்கத்தக்க ஓர் ஆற்றல் இருப்பதை உணர்ந்து மரித்தவரின் ஆவி இறங்கிப் பேசுவதற்கு ஒரு 'மீடியமாக' விளங்குகிறார். அவரிடத்தில் நம்பிக்கை உடையவர்களில் முக்கியமானவர் சுபோத பாபு.





ஆவிகளை அழைக்கும் முறை இதுவாகும். இருள் கவிந்த அறை யொன்றில் சமூக உறுப்பினர்கள் மேஜையைச் சுற்றி அமருவார்கள். எல்லோரும் ஒருவர் கையை மற்றொருவர் கையுடன் கோத்து மறுமையில் இருப்பவர்களை ஒரே நினைவாக அழைப்பார்கள். சுபோதபாபு எப்போதும் சற்றுச் சந்தேகப் பிறவி. இருட்டில், அந்நிய புருஷன், அதாவது அந்தப் பயல் புஜங்கன், தம் இளம் மனைவியின்-அவள் அவருக்கு இரண்டாம் தாரம்-கையைப் பிடிப்பதுதான் அவருக்குப் பிடிக்கவில்லை. நல்ல காலம் பூதநாத் பக்கத்தில் துணை இருக்கும்போது இந்த வீண் கவலைக்கு அவர் அதிகமாக இடம் தரவில்லை. பூதநாத்துக்கோ மரித்தவர்களின் ஆவிகளை வசீகரிக்கும் ஆற்றல் அபாரமானது. விரைவிலேயே ஆவி அவர்மீது ஆவேசிக்கும். உறுப்பினர், நீண்ட நேரம் கைகளைக் கோத்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. அறையில் வெளிச்சம் இருந்தால்கூட அவர் வாயிலாக ஆவிகள் தாராளமாகப் பேசும். இந்தப் பேச்சுக்கிடையே உறுப்பினர், உல்லாசமாக உரையாடுவதோ, தேநீர் அருந்துவதோ, சிகரெட் புகைப்பதோ இவற்றுக்குத் தடங்கல் எதுவுமே ஏற்படாது.

* * *

அன்று சனிக்கிழமை. மாலைப் பொழுது. கீழ்ப்புறமுள்ள பெரிய அறையில் வழக்கம் போல் ஆவி அழைக்கும் குழுவினர் கூடினர். உறுப்பினர் எவரும் வரத் தவறவில்லை. அறையில் விளக்கு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. ஆனால், கதவு ஜன்னல்கள் எல்லாம் மூடிக் கிடந்தன. சட்டென்று யாராவது வெளி ஆள் உள்ளே வந்துவிட்டால், காரியம் கெட்டு விடுமென்பதற்கு இது முன்னெச்சரிக்கை.

முன்பு நடந்த கூட்டங்களில் சந்திரகுப்தன், ஸிராஜ் - உத் - தௌலா, நெப்போலியன், ஹிட்லர் ஆகிய உலகப் புகழ் பெற்றவர்கள், மற்றும் உறுப்பினரின் இறந்துபோன உறவினர்கள் 'மீடியம்' பூதநாத் மூலம் பேசியதைக் கேட்டனர். அன்றையக் கூட்டத்தில் யாரை அழைப்பதென்ற கேள்வி எழுந்தது.

புஜங்க பஞ்ஜ் சொன்னார்: "என்னுடைய பாட்டனாரை ஒரு முறை அழையுங்கள். அவர் ஏராளமாக விக்டோரியா முத்திரையுள்ள தங்கப் பவுன் காசுகளை வைத்திருந்தார்.

வங்காளிக் கதை:

பரசுராம்

தமிழாக்கம்

த. நா. குமாரசாமி



எங்கே அவற்றைப் பத்திரமாகப் புதைத்து இருக்கிறாரென்பது தெரியவில்லை. அதைப் பற்றித் தகவல் அறியலாம்.

அவத விஹாரிலால் சொன்னார்: இந்தத் தாத்தா, மாமா இவர்களைவிடும்; மகாத்மாஜியைக் கூப்பிடுங்கள். நம் தேசம் பலவிதமாகப் பாழாகிக்கொண்டு வருகிறது. அவர் வந்து ஒரு வழி செய்தால் சட்டென்று ராம ராஜ்யத்தையே காணலாமே.

காளுயி காங்குலி கூறியதாவது: பாவம், அவரை அழைத்து நாம் கஷ்டம் கொடுப்பானேன்? அவர் வேண்டியது நமக்குச் சொல்லி விட்டுப் போயிருக்கிறார். அவரைச் சற்று நிம்மதியாக இருக்க விடுவோம்.

புஜங்க பஜ்ஜு சொன்னார்: மகாத்மாஜியைக் கூப்பிடுவதால் பயனில்லை. அவர் என்ன சொல்லுவாரென்பது நமக்குத்தான் தெரியுமே. சர்க்காவைச் சுற்றுங்கள், சம்பளத்தைக் குறைத்துக் கொள்ளுங்கள், மதுபானத்தை வெறுத்துவிடுங்கள், பிரம்மசரியத்தைப் பயிலுங்கள், இவற்றையெல்லாம் கேட்டு நடந்தால் நாம் இன்று ராஜ்யத்தை நடத்தினாற் போலத்தான்.

விபாசாதேவி வாயைத் திறந்தாள். "சரி, மகாத்மாஜியின் இஷ்ட தெய்வமான அந்த ராமச்சந்திரனை அழைப்போமே!"

அவத விஹாரி: அதுதான் சரி. ராமச்சந்திரனைக் கூப்பிடலாம்.

சுபோத்: எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. அப்போதுதான் ராமராஜ்யத்தைப் பற்றிச் சரியான தகவல் கிடைக்கும்.

புஜங்கன்: அவர் அப்படி வரக்கூடிய ஆளா? அப்படி ஒருவர் இருந்தாரா, இல்லையா என்பதற்குச் சரித்திரபூர்வமான அத்தாட்சி இல்லையே. பூதநாத பாபு, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

பூதநாத்: முயற்சி செய்து பார்ப்போமே!

விபாசாதேவி சொன்ன யோசனையை எல்லோரும் ஏகமனதாக ஏற்றனர். 'ரகுபதி ராகவ ராஜாராம்' என்ற ராம்தூன் மெதுவாக எழுந்தது. இரண்டே நிமிடங்களுக்குள் பூதநாத் பாபுவின் கண்களில் வெளுப்பு விழி மட்டும் தெரிந்தது. அவருடைய மோவாய் திடுமென்று உயர்ந்தது. வீற்றிருந்த சேரில் சாய்ந்தார். 'உர் உர்' என்ற புரிபடாத புதுக் குரல் அவர் தொண்டையில் எழுந்தது.

சுபோதபாபு எச்சரிக்கை செய்தார், "கண்ட்ரோல் வந்துவிட்டது" என்று.

மீடியத்தின்மேல் உடல் இராத ஆவி புகுந்துவிட்டது என்று அதற்குப் பொருள்.

மறுபடியும், அதே 'உர்...உர்...யொக்... யொக்' என்ற சத்தமே எழுந்தது.

கவிரத்னர் கைகளைக் கூப்பியவண்ணம் பக்தி மேலிட்டு, "பிரபோ! ஏதாவது நாங்கள் தவறாக நடந்திருந்தால் மன்னிக்கவும். கிருபை கூர்ந்து தாங்கள் இன்னார் என்பதைத் தெரிவிக்க வேண்டிக் கொள்ளுகிறோம்" என்றார்.

பூதநாதபாபு முகத்தை உயரத் தூக்கி, "நான் மாருதி" என்றார்.

கவிரத்னர்: அப்படியா? ஏ மாருதி! தாங்கள் ஆவிர்பவித்திருப்பதால் நாங்கள் தன்யரானோம்; ஒரு கேள்வி, ஸ்ரீராமச் சந்திரன் ஏன் வரவில்லை?

மகாவீர்: அவர் வருவதென்பது நடக்காத காரியம். அத்தகைய பகவானைக் கண்டு நேரே உரையாடுவதற்கு நீங்கள் என்ன புண்ணியம் செய்து விட்டீர்கள்? அவருடைய கட்டளையின் பேரில்தான் நான் இங்கு வந்துள்ளேன். நீங்கள் என்ன கேட்க விரும்புகிறீர்களோ, அதைச் சட்டுப்புட்டென்று கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

சுபோத் முதல் கேள்வி போட்டார்: மகாவீர்ஜி! தயவுசெய்து செவி சாய்க்கவேண்டும். எங்களுக்குச் சுதந்திரம் கிடைத்துவிட்டது. ஆனால், அதைத் தவிர வேறு எதுவுமே கிடைக்கவில்லையே!

கவிரத்னர்: ஆம், உண்ண உணவில்லை, உடுக்கத் துணியில்லை, வீடில்லை, தர்மம் இல்லை, சத்தியமில்லை, தியாகம் இல்லை, அடக்கம் இல்லை, உறுதியான செயல் இல்லையே.

அவத விஹாரி: திருட்டு, கொள்ளை, கள்ள மார்க்கெட்—முடிச்சு மாறிகள்!

புஜங்கன்: முதலாளிகளின் அட்டூழியங்கள், வறுமையினால் மக்களின் பரிதாபக்குரல், அக்கிரமம், இனவெறி, உற்றார் உறவினருக்குக் கொழுத்த சம்பளத்தில் நல்ல வேலை.

காளுயி: வெளிநாட்டு ராஜதந்திரிகள் தூண்டுதல், தேசத்தைக் காட்டிக் கொடுப்போர், பாரதத்தின் லட்சியச் சிதைவு, தான் முன்னுக்கு வரப் பொய்ப் பிரசாரம், பாட்டாளி, உழவாளி இவர்களை ஆட்டிவைக்கும் விஷமிகள், இளைஞருக்கு விஷத்தைப் புகட்டும் புது இலக்கியங்கள், அணுகுண்டு.

மகாவீர்: நில்...நில்...உனக்கு வேண்டியதைக் கேள்.

அவத விஹாரி: நான் சொல்லுகிறேன், கேளுங்கள் மகாவீரரே! லஞ்சம் தந்து, ஒரேயடியாக லாபம் அடிக்கிறார்கள்! வியாபாரத்தில் எதில் பார்த்தாலும் அது இராமல் இல்லை. பற்களின் இடுக்கில் நாக்கு படும்பாடு. ஒரே குத்தில் இலங்க வாயிலிருக்கிற பல்லையெல்லாம் தட்டிவிட வேண்டும், பிரபு.

கவிரத்னர்: வாயை மூடப்பா நீ. மகாவீர்ஜி! நாங்கள் வேண்டுவதெல்லாம் ராம

ஸ்ரீ

# ஸ்ரீ ஒப்பிலியப்ப பெருமாளுக்கு

# ரத்தினக் கிரீடம்

★

திருநாகேஸ்வரம் சமீபமுள்ள ஒப்பிலியப்பன் கோயிலில் ஸ்ரீ பூமி தேவி ஸமேதராய் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ ஒப்பிலியப்பன் என்கிற ஸ்ரீநிவாஸப் பெருமாளுக்கு நடந்துவரும் லக்ஷார்ச்சனையை முன்னிட்டு பூர்த்தி வைபவத்தன்று (பிப்ரவரி 9உ) ஸ்ரீ மூலவருக்கு 2 அடி உயரம் 1 அடி அகலமுள்ள வைரம், பச்சை, ரத்தினம் முதலிய நவரத்தினங் களால் இழைக்கப்பட்ட ரூ. 50,000 மதிப்புள்ள ரத்தினக் கிரீடம் ஒன்றைச் சாற்றுவதாய் நிச்சயிக்கப்பெற்றுள்ளது.

தென் இந்தியத் திருப்பதிப் பெருமாள் எனப் பிரசித்தமான ஸ்ரீ ஒப்பிலியப்பன் பக்தகோடிகள் தங்களாலான வைரம், பச்சை முதலிய ரத்தினங்களையும் அதற்கான தங்கம் அல்லது பண உதவியையும் லக்ஷார்ச்சனைக் கமிட்டியின் பொக்கிஷதாரரான டாக்டர் எம். கே. சுப்பிரமணியம், பெஸண்ட் ரோடு, கும்பகோணம் அவர்களிடமாவது அல்லது கீழே குறிப்பிட்டுள்ளவர்களிடமாவது கொடுத்து ரசீது பெற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொள்ளுகிறோம்.

இங்ஙனம் :

என். ஸ்ரீநிவாஸகோபாலன்
டி. நாராயண ஐயங்கார் ஸன், திருநாகேச்வரம் போஸ்ட், தஞ்சை ஜில்லா

ஏ. என். முத்துக்குமார முதலியார் அண்டு ஸன்ஸ், அம்பாசமுத்திரம்

கும்பா. ராம. நாகேந்திர அய்யர் ஸன்ஸ், திருபுவனம்

ஏ. சாமிநாத பிள்ளை, என். கிருஷ்ண சாமி, என். ராஜகோபாலன், ஏ. டி. சம்பந்த முதலியார், ஜி. ஸ்ரீநிவாசப் பிள்ளை, டிரஸ்டிகள், ஸ்ரீநிவாசப் பெருமாள் தேவஸ்தானம், ஒப்பிலியப்பன்கோவில்

எம். ஆர். சேதுராம அய்யர்
ஆர்யபவன், கும்பகோணம்

பி. எஸ். நாராயண அய்யர்
அம்பிகா விலாஸ், கும்பகோணம்

என். வைத்தியநாத முதலியார்
ஏஜண்ட், இந்தியன் பாங்க் கும்பகோணம்

பி. சுப்பிரமணியம், ஏஜண்ட், சென்ட்ரல் பாங்க் லிமிடெட், கும்பகோணம்

கே. ராமசாமி ஐயர், ஏஜண்ட், இண்டோ கமர்ஷியல் பாங்க் லிமிடெட்., கும்பகோணம்

என். ரங்கநாத ஐயங்கார், ஏஜண்ட், இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் லிட்., கும்பகோணம்

ஆர். கந்தசாமி மூப்பனார்
ஆயிகுளம் ரோடு, கும்பகோணம்

டி. எஸ். ராஜகோபால ஐயங்கார்
டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

ஆர். ஸ்ரீநிவாச ஐயர், கோனேரிராஜபுரம்

ஜி. வைத்தியநாத ஐயர், திப்பிராஜபுரம்

ஏ. சாரங்கபாணி ஐயர், குடிகொண்டான்

பி. எஸ். நாராயண ஐயர்
ராமன் ராமன், கும்பகோணம்

எஸ். செங்கல்வசாமி
காவேரி கலர் பிரஸ், கும்பகோணம்

என். நாசாஜி
கும்பகோணம் டிரக் ஸ்டோர், கும்பகோணம்

எம். ராஜகோபால ஐயர், டு. திருமஞ்சன வீதி ஸப்ளேட் ஸ்கூல், கும்பகோணம்

கே. ராகவாச்சாரியார், ரமணி ஸ்டோர்ஸ்
பெரிய கடைத் தெரு, கும்பகோணம்

ஆர். எஸ். எஸ். மணி
"ஹிந்து", "கல்கி" ஏஜண்டு, கும்பகோணம்

வி. சாமிநாதன் (சாமா)
இண்டோ கமர்ஷியல் பாங்க், கும்பகோணம்

என். ஆர். ராமாநுஜன்
"ஹிந்து" நிருபர், கும்பகோணம்

லக்ஷார்ச்சனைக் கமிட்டி

ராஜ்யமே. அது வந்துவிட்டால் போதும். நல்லவர் ஓங்கவும், பாபிகள் அழியவும், மக்கள் சுபிட்சமாகச் சச்சரவின்றி வாழவும்- இதைத்தான் நாங்கள் விரும்புகிறோம்.

காஞயி : பண்டிதரே, ஆத்திரப்பட்டால் முடியுமா? நாம் அரசியல் பொறுப்பை ஏற்றுச் சில நாட்கள்தானே ஆகின்றன. மகாவீர்ஜியின் அருளால், தேசத்துக்குத் துரோகம் செய்பவர்களைத் தொலைத்து விட்டோமானால், இலான் மஜ்தூரின் அரசு நிலவும்.

கவிரத்னர் : இவர்களால் செக்ரடேரியட்டில் உட்கார்ந்து நிர்வாகம் செய்ய முடியுமா?

புஜங்கள்: அந்தப் பசப்பு வார்த்தையைக் கேட்டு மயங்காதீர். இதெல்லாம் தேர்தலின் போது வோட்டு சம்பாதிக்கும் சூழ்ச்சிகள்.

காஞயி: இதில் கைதேர்ந்த ஆட்கள் நீங்கள்தானப்பா. நீங்கள் கற்றுக் கொடுத்த பாடத்தைத்தான் நாங்கள் உங்களுக்குப் படித்துக் காட்டுகிறோம்.

கபோத் : நிறுத்துங்கள். எதற்காகச் சண்டை போடுகிறீர்கள்? மகாவீர்ஜி! இந்த நாடு, கட்சிப் பூசல்களால் சூட்டிச்சுவரா கிறது. இதற்குத் தாங்கள் ஒரு வழி செய்ய வேண்டும். எங்களுக்குத் தேவையானது அப்பட்டமான ஜனநாயகம். அதாவது மக்கள் ஆட்சி. ஆனால், பல கட்சிகள் செய்யும் பிரசாரங்களினால் பொது மக்கள் மருண்டு போகின்றனர். அதனால், சரியான ஜனநாயகம் வளர்ச்சி அடையாமல் போகிறது.

மகாவீர்: ஒரு பழைய சரித்திர உண்மையை இங்கே கூறுகிறேன், கேளுங்கள். கோவர்த்த நாட்டின் அரசன் கோவர்த்தனனிடம் ஒரு லட்சம் மாடுகள் இருந்தன. ராஜதானியின் அருகிலுள்ள காட்டில் அவை மனதார மேய்ந்து வாழ்ந்தன. ஆயர் சிலர் அவற்றைக் காத்து வந்தனர். அதென்ன பாபமோ, அகத்தியர் சாபம் கொடுத்ததால், அரசன் இறந்தொழிந்தான். மக்களும் பல்லாயிரக் கணக்கில் மாண்டனர். அரசனிடமிருந்த மாட்டுக் கூட்டம் புரப்போர் இன்றித் திண்டாடின; கொடிய விலங்குகளுக்கும் இரையாகி வந்தன. மாடுகளுக்குத் தலைவனாகிய எருது ஒன்று அறிவுறுத்தியது. 'இந்தமாதிரி ஓர் அராஜக நிலையில் நாம் பிழைத்திருப்பது மிகவும் கடினம். அதோ அந்த மலைக் குகையில் விலங்குகளின் அரசனான சிங்கம் இருக்கிறது. எல்லாரும் அதனிடம் சரண்புகுவோம்.'

மாடுகளின் வேண்டுகோளைக் கேட்டுச் சிங்கம் கூறியது: 'இது நல்ல யோசனையே. நான் உங்களுக்கு அரசனாகையபடியால், என் கடன் உங்களைப் பாதுகாப்பதுவே. ஆனால், என் ஜீவனோபாயத்துக்கு ஏதாவது வழி தேடிக் கொள்ள வேண்டாமா? ஆகவே, அரசனுக்குச் செலுத்தும் கப்பம் போல் அன்றாடம் கொழுத்த சதை போட்ட ஒரு மாட்டை என் உணவுக்காக அனுப்பி விடுங்கள்.'

மாடுகள் இதற்கு இணங்கி, சிங்கத்தின் பசியைத் தீர்க்கத் தினம் ஒரு மாட்டை அனுப்பி வந்தன.

சில நாட்களுக்குப் பிறகு மாட்டின் தலைவனை அழைத்து, 'இதோ பார், உங்களைக் கட்டிக்காக்கும் பொறுப்பு எனக்கோ நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. எனக்கு ஒரு மாடு போதவில்லை. அரசாங்க நிர்வாகம் செய்வதற்கு எத்தனையோ அமைச்சர், செயலாளர்களை நான் போஷிக்க வேண்டியிருக்கிறது. நானும் ஒரு சம்சாரி. என் குடும்பம் பெரிதாகிக் கொண்டு வருகிறது. அவர்கள் வயிற்றுக்கும் நான் போட வேண்டும். ஆகவே எனக்குச் செலுத்தும் கப்பத்தை அதிகப்படுத்துங்கள். தினம் பத்து மாடுகளை அனுப்புங்கள்!' என்று சிங்கம் கூறியது.

மாடுகள் இதைக் கேட்டு, வேதனையுற்று, சிங்கத்தின் கட்டளையை நிறைவேற்றிவந்தன. மீண்டும் சிங்கம், 'வர வர உங்களைக் கட்டிக் காப்பது எனக்கு வீண் தொல்லையாகிவிட்டது. பத்து மாடுகள் போதா. இருபது அனுப்புங்கள்!' என்றது. மாடுகளின் பிரதிநிதி இதற்கும் ஒப்புக் கொண்டு அழமாட்டாத குறையுடன் திரும்பியது.

அச்சமயம் அந்த முது எருது புத்திமதி கூறியது: 'இந்தக் காட்டின் ஒரு பகுதியில் தொண்டு கிழவரான ஒரு ரிஷப தவசி இருக்கிறார். அவர் முக்காலத்தையும் உணர்ந்த பெரியவர். அவரிடம் துயரைத் தெரிவித்துக் கொள்ளுவோம்.'

மாடுகள் அந்தத் தவசியின் ஆசிரமத்தை அடைந்து தங்கள் குறைகளைத் தெரிவித்தன. நிஷ்டையிலிருந்து விழித்த தவசி திருவாய் திறந்து அருளினார். 'உங்களுக்கு ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். அதை விடாமல் ஜபம் செய்யுங்கள். அந்த மந்திரம் இது தான் : கோஹிதாய, கோபி: கவாம் சாஸனம்.'

விபாசா : அப்படி யென்றால்?

கவிரத்னர்: அதாவது மாட்டின் நன்மைக்காக மாடுகளாலேயே மாடுகளை ஆள்வது.

விபாசா : வேடிக்கையாக இருக்கிறது. மக்களுக்காக மக்களாலே ஆளப்படும் மக்கள் ஆட்சி என்பது போலவே இருக்கிறதே!

மகாவீர் : அதற்கு மேல் நடந்ததைக் கேள். ரிஷப தவசி சொன்னார் : 'இந்த மந்திரத்தை எல்லா இடங்களிலும் பரப்புங்கள்; பிரசாரம் செய்யுங்கள். ஒரு மாதம் கழித்து என்னை வந்து பாருங்கள்.'

மாடுகள் மந்திரத்தைப் பெற்று, மகிழ்ச்சியுற்றுத் திரும்பின. ஒரு மாதம் சென்றதும் அந்த ரிஷியிடம் சென்றன. அவர், 'உங்களுடைய எண்ணிக்கை எவ்வளவு?' என்று கேட்டார். 'சுமார் ஒரு லட்சம். சிங்கம் பலரைத் தின்று விட்டது. இராது போனால் இன்னும் அதிகமாகும்' என்றன.

அதற்கு ரிஷி, 'சிங்கம், அதை ஒட்டிய கிப்பந்திகள் எத்தனை பேர் இருப்பார்கள்?' என்று விசாரித்தார். 'நூறு பேருக்கு மேல் இருக்கும்' என்றன மாடுகள். 'மந்திரத்தை ஜபம் செய்ததால் உங்கள் தேக விருத்தியாகியிருக்கிறது. இப்போது ஒரு காரியம் செய்யுங்கள். எல்லோரும் சேர்ந்து, கொம்புகளைத் தூக்கி நாலாபுறத்தி லிருந்தும் இந்தச் சிங்கக் கூட்டத்தாரை முட்டி விரட்டுங்கள்' என்றார். மாடுகள் உடனே சிங்கத்தை ஆக்கிரமித்துக் கொண்



டன. இந்த மோதலில் சில மாடுகள் மரித்தன. சிங்கக் குழுவினர் தொலைந்தனர்.

விபாசா: ஆனால் மறுபடியும் அராஜகம் தலைவிரித்து ஆடுகிறதே!

மகாவீர்: மாடுகள் ஜனநாயகத்தின் மந்திரம் கற்று, அவை தம் இனத்தாரிடமிருந்தே சில சாமர்த்திய சாலக்குப் பேர்வழிகளான மாடுகளைத் தேர்ந்தெடுத்துத் தம்மை ஆளும் பொறுப்பை அவற்றின் மீது போட்டன. சில நாட்களுக்கெல்லாம் அந்த ஆளும் மாடுகளுக்கும் மீசை வளரத் தொடங்கி விட்டது. தலையில் இருந்த கொம்புகள் தேய்ந்து போயின. கால்குளம்புக்குப் பதிலாகக் கூரிய நகங்கள் தோன்றலாயின. அவற்றுள் சில புலிகளாவும், சில நரிகளாகவும், சில கரடிகளாகவும் உருமாறின.

மாட்டு-மக்கள் வியப்புற்றுக் கேட்டன, 'இதென்ன அண்ணன்மீர், விந்தையான மாறுதல்கள் உங்களிடம்?' என்று.

ஆளும் மாடுகள் பதில் கூறின: 'உம், பாபமன்று. நாங்கள் க்ஷத்திரியராகி விட்டோம். புல்லை மேய்ந்து விட்டு அரசாங்க அலுவல்களைக் கவனிப்பது கடினம். இதனால் பொழுது தான் வீணாகிறது. இனிமேல் நாங்கள் புலால் உண்பவர்கள். வீட்டிலும், வெளியிலும், சந்திலும் பொந்திலும் விரோதிகள் தம் காரியத்தைக் கவனித்து வருகின்றனர். உங்களைக் காப்பதற்கு ஏராளமான வேலையாட்களை அமர்த்த வேண்டியிருக்கிறது. எவ்வளவோ பாடு எடுத்துக் கொள்கிறோம். இதனால் பசி அதிகமாகி விடுகிறது. காட்டிலுள்ள மற்ற மிருகங்களையெல்லாம் தின்றாகி விட்டது. ஆகவே, நீங்கள் சற்றுச் சுய நன்மையைக் கருதாமல் எங்களுக்கு வேண்டிய உணவைத் தரவேண்டும், சிங்கத்தின் ஆட்சியில் நீங்கள் நடந்து கொண்டது போல.'

மாடுகள் இதற்கு உடன்பட்டன. ஆனால், இரண்டொரு முரட்டுக் காளைகள் நினைத்தன: 'இவர்களுக்கு என்ன கேடு? மிரட்டித் தின்னப் பார்க்கிறார்கள். புல் மேயக்கூடச் சோம்பேறித்தனம். நம்முடைய மாமிசத்தையும் எலும்பையும் கடித்துத் தின்னச் சூழ்ச்சி செய்கிறார்கள். நாம் ஏமாறக்கூடாது.'

அவை இந்தத் துணிவுக்கு வந்து, கொடிய விலங்குகளாக மாறி ஆளும் மாட்டு வர்க்கத்தைக் கொந்தித் தள்ளிவிட்டுத் தாமே செங்கோலை ஏற்றன. சில காலத்துக்குப் பிறகு இவையும் கொடுமை இழைக்கும் மிருகங்களாயின. மற்ற மாடுகளுக்கும் இந்த ஆளுகை மோகம் பிறந்தது.

இவ்வாறு மாடுகள் அனைத்தும் ஒன்றையொன்று கொந்தியும், கடித்தும் மாண்டன.

காஞ்சி: இந்தக் கதையின் மூலம் ஜனநாயகம் கத்த மோசமானது என்று நீங்கள் சொல்ல விரும்புகிறீர்களா?

மகாவீர்: கொள்கையால் ராஜ்ய பரிபாலனம் ஆவதில்லை. அது எந்தக் கொள்கையாக இருந்தாலும் சரி, அவை சொல் அளவில் தான். மனிதர் அதற்குத் தம் மனம் போனபடி வியாக்கியானம் கூறுகின்றனர்.

கபோத்: சரியாகச் சொன்னீர்கள். பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா எல்லாம் அதனதன் அரசியல் கொள்கைதான் சுத்தமான ஜனநாயகம் என்று பறைசாற்றுகின்றன.

மகாவீர்: ஆளும் முறையின் பெயர் எவ்விதம் இருப்பினும் ஒரு நாட்டின் பொது மக்கள் அரசாங்கத்தை நடத்த வில்லை. அவர்கள், சிலரை நிர்வகிக்க நியமனம் செய்தோ, சிலருடைய பேச்சைக் கேட்டு மயங்கி, ஆளும் பொறுப்பை அவர்களிடம் அளித்தோ விடுகின்றனர். நல்லறிவும், தமக்கென்று வாழாமல் பிறர்க்குரியராயுமிருந்து, இவர்கள் பணி புரிவாரானால், நாட்டு மக்கள் இன்புற்று இருப்பர். ஆனால், அரசாளும் இந்த வர்க்கம் மூடர்களாகவும், தூர்த்தர்களாகவும், தன்னலம் மிக்கவர்களாகவும் செயலாற்றத் தெரியாதவர்களாகவும் இருப்பின் பிரஜைகள் துன்புறுவர். இதனால் இந்தக் கொள்கையாலும் பயனில்லை.

புஜங்கன்: ராமராஜ்யம் எப்படி நடந்தது—ஆடாக்ரஸியா, யதேச்சாதிகாரமா? அங்கு மக்கள் திறமையற்று இருந்தனரா?

மகாவீர்: திறமை இல்லை என்று யார் சொன்னது? கோசல ராஜமாதேவி சீதையின் வனவாசம் யாரால் ஏற்பட்டது? தவசியான சம்பூகனைக் கொன்றது யாருடைய கிளர்ச்சியால்?

விபாசா: ஆனால் ஸ்ரீ ராமசந்திரன் இத்தகைய காரியங்கள் செய்தது சரியா?

மகாவீர்: அது சரியோ தவறோ, ஸ்ரீராமன் மக்கள் குரலுக்கு மதிப்பு தந்தான். அந்தக் காலத்து நன்மை தீமைகளைக் குறித்து ஆராய்வது இக்காலத்தவரால் ஆகாது. உலகத்தவர் அபிப்பிராயம் என்பது அறிவாளிகள், சாதுக்கள் இவர்களாலும் தான் ஏற்படுகிறது. புன்மைமிக்க சமூகர்களாலும்தான் ஏற்படுகிறது. ராமன் தன் மனம் போனபடி செய்யவில்லை. தொன்மை தொட்டு, பெரியவர்கள் வகுத்த செய்யத் தக்கதும், செய்யத் தகாததும் என இரண்டும் கலந்த வழியில் தான் சென்றான்; பிரஜைகளும் அதன்படியே ஒழுகினர். இக்தக் கால நோக்கிலிருந்து பார்த்தால், ரிஷிகள் வகுத்த இந்த ஏற்பாட்டில் எத்தனையோ குற்றங்களைக் கண்டு பிடிக்கலாம். ஆனால் அதை வகுத்தவர் தம் புகழுக்கோ, பதவி உயர்வுக்கோ ஆசைப்பட்டவர்களல்ல.

கபோத்: அப்படியானால், ராமராஜ்யம் ரிஷி தந்திரமா? இப்போது அத்தகைய ரிஷிகளைக் கண்டு பிடிப்பது எப்படி?

மகாவீர்: ரிஷி எதற்கு? எவரிடம் மக்களை ஆளும் பொறுப்பு இருக்கிறதோ அவர்கள் அறிவுள்ளவர்களாகவும் தன்னலமற்ற தியாகிகளாவும் கொள்கையைச் செயல் முறையில் காட்டுபவர்களாயும் இருந்தால் உலகத்தின் அபிப்பிராயம் அவர்கள்பக்கமாகவேவளையும்.

கபோத்: ஆனால், இவர்களைச் சூழ்ந்திருக்கும் விஷமிகளும், சுயவர்களும் மக்களிடம் வோட்டை வஞ்சக வழியில் பறித்து அரசியலில் காலை நன்றாக ஊன்றிக் கொள்வார்களே!

மகாவீர்: இது போல் எத்தனை நாள் நடக்கும்? சுதந்திரம் பெறும் முயற்சியில் எத்தனை பேர் எத்தனை கஷ்டங்கள், எத்தனை தடங்கல்களைக் கண்டனர். தம் உயிரையும் துறந்தனர். அவர்கள் சுதந்திரத்தைக் காணவில்லை. ஆனால் அவர்களுடைய முயற்சி வெற்றியடைந்தது. ராமராஜ்யம், அதாவது நல்லோர் நடத்தும் ஆட்சியும் அவ்வாறே ஆகும். இந்த விரதத்தைப் பூண்டு, எவர் தம்

நடத்தை மூலம் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகின்றனரோ அவர்கள் ஒரு போதும் குறுகிய வழியில் செல்லார். லோபி, பணக்காரன், நேர்மையற்றவன் இத்தகை யோர் அவனுக்குப் பக்கத் துணையாக நின்றாலும் இவர்களுடன் ஒத்துப் போகமாட்டான். எந்தவிதமான ஊழலையும் சகித்துக் கொண்டிருக்க மாட்டான்.

காளுயி: மகாவீர்ஜி! நீங்கள் வகுக்கும் முறை இந்தக் காலத்தில் வேலை செய்யாது. அதனால், ஜனநாயகம் சரிப்பட்டு விடாது.

மகாவீர்: அப்படியானால், அந்த மாடுகள் முட்டிக்கொண்டு செத்ததுபோலச் சாகுங்கள்.

கபோத: பிரிட்டிஷாரிடையே நேர்மை யற்றவர்களும் திறமையற்றவர்களும் இல்லையா? அதனால், அவர்கள் நடத்திய ஜன நாயக முறை சீர்குலைந்து விடவில்லையே.

மகாவீர்: வெளிநாடுகளில் அவர்கள் என்ன அநீதிகள் செய்தாலும், தம் சொந்த நாட்டின் ஆட்சி விஷயத்தில் நேர்மையும் திறமையுடன்தான் நடந்து கொள்கின்றனர்.

காளுயி: நீங்கள் எதை வேண்டுமானாலும் சொல்லுங்கள், மகாவீர்ஜி! இந்தப் பயல் புஜங்கன் கட்சியைச் சற்று மட்டம் தட்ட வேண்டும். தன் இனத்தாரைக் காட்டிக் கொடுக்கும் விபீஷணர்கள். இவர்கள் கொலை பாதகர்கள், கொள்ளைக் கூட்டத்தினர்கள்.

புஜங்க: மகாவீர்ஜி! இந்தக் காளுயின் கட்சியை அழிக்காது போனால் எதுவும் கைகூடாது. இவர்கள் வேஷதாரிகள், கோமுக வரர்களுக்குப் பின்னால் திரியும் நாய்கள்.

காளுயி: வாயை அடக்கிப் பேசு.

புஜங்க: கம்மா இருடா, சைத்தானே! ருத்திராட்சப் பூனை...மக்கள் ரத்தத்தை உறிஞ்சும் வௌவாலே.

காளுயி காங்குலி சினம் பொங்கிக் குதித்து விட எழுந்தான். புஜங்கன் அவன் கையைப் பிடித்துக் கொண்டான். ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு புரண்டு உருண்டனர்.

கபோத பாபு திகிலடைந்து, "அறிவு மழுங்கிவிட்டதா, இப்படி ஒருவரை யொருவர் அடித்துக் கொள்ளுகிறீர்களே? ஓய்! அவத விஹாரி இவர்களைத் தடும் ஐயா!" என்றார்.

அவதவிஹாரி: இன்று எனக்கு ஏகாதசி உபவாசம். உடம்பில் வலிவில்லை.

விபாசா: மகாவீர்ஜி! தாங்கள் இருக்கும் பொழுதே அரக்கர்களைப் போல் இவர்கள் சண்டையிடுகிறார்களே, இதென்ன?

பூதநாத் தடாரென்று ஒரு குதிகுதித்து இமைப் பொழுதில் தம் பின்னால் இருந்த தடியை எடுத்து, காளுயி, புஜங்கன் இரு வரையும் நன்றாகப் புடைத்துத் தரையில் படுக்க வைத்து விட்டார். அதன் பின்பு, தம் சேரில் வந்து அமர்ந்து, கண் விழிகள் மேலே நிற்கச் சமாதி நிலையில் இருந்தார்.

உடம்பில் ஒட்டிய மண்ணைத் தட்டிக் கொண்டு, எழுந்து புஜங்கன், "கபோத பாபு! உங்கள் வீட்டிலேயே இந்த மாதிரி எனக்கு அவமானம் வரலாமா?" என்றார்.

பின்புறத்தைத் தடவிக்கொண்டே காளுயி மெல்ல எழுந்து, "இந்த பூத நந்திப் பயல் என் மீது கை வைக்கத் துணிந்தானே என்ன காரியம்?" என்றான்.

அவத விஹாரி: ஓய் காளுயிபாபு, பூதநாத பாபு அடித்தால் அப்படிப் பிரமாதமாகப்

மனைவி:— என்னுங்க இது, தலைக்கு மேல் போன செலவு என்று போட்டு ரூ 1-50 நயே பைசென்று எழுதி வைத்திருக்கிறீர்களே; அப்படியும் ஒரு செலவு உண்டா?

கணவன்:— ஒரு புதுக் குடை ஒன்று வாங்கினேன் அல்லவா? அதற்காகத் தான் அப்படி எழுதி இருக்கேன்!

---

படாதே. சாக்ஷாத் மகாவீரர் ஹனுமான் அடித்திருக்கிறார் அல்லவா?

விபாசா: அது போகட்டும். மகாவீர்ஜி, நீங்கள் இதையெல்லாம் மனசில் வைத்துக் கொள்ளக் கூடாது.

அவதவிஹாரி: ஏன், மகாவீர்ஜி, ராம ராஜ்யம் ஏற்பட்டால், ஷேர் மார்க்கெட் சுறுசுறுப்பாகுமா? இப்போ ரொம்ப ஜப்பு.

மகாவீர்ஜி இதற்கு மறுமொழி ஒன்றும் தரவில்லை. மெல்ல மெல்லப் பூதநாத பாபு தம் சொந்த மன நிலைக்கு வந்து கொண்டிருந்தார். அதைக் கவனித்து கபோதபாபு "கண்ட்ரோல் போய் விட்டது!" என்றார். அதாவது ஆவியின் ஆவேசம் போய்விட்டது.

சற்றுப் பொறுத்து, பூதநாத பாபு வந்த கொட்டாவியைக் கைச் சிட்டிகை போட்டு அகற்றியதும், "அண்ணு, தேநீர் தயார் செய்யச் சொல்லுங்கள்" என்றார்.

அவதவிஹாரி: பூதநாத், மகாவீர்ஜி என்ன வெல்லாம் பேசினார். எப்படி அவர் தடி கொண்டு அடித்துவிட்டார்!

பூதநாத்: என்ன தடியடியா? யாரை...நம் காளுயி, புஜங்கன் இவர்களையா? அட இழவே, பெரிய தவறு நடந்துவிட்டது. நீங்கள் அதை மனசிலேயே வைக்காதீர்கள். எனக்கு என் நினைவு இருந்தால்தானே...உங்கள் காலைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொள்கிறேன்; மன்னியுங்கள்; என்னை மன்னியுங்கள்!

# படித்துப் பாருங்கள்

## திருக்குறள் (உரை வேற்றுமை)

வள்ளுவர் பெருமான் இயற்றிய திருக்குறள் உலகப் புகழ் பெற்றுவிட்ட உயரிய நூல். அந்நாலுக்கு உரை எழுதியவர்கள் பதின்மர். அந்தப் பத்து உரைகளும் இக்காலத்தில் கிடைக்கப் பெற்றிலவாயினும் சில உரைகள் கிடைத்திருக்கின்றன. உரையாசிரியர்களின் கருத்து வேற்றுமைகளைக் காண இந்நூல் பெரிதும் பயன்படும். அறத்துப் பாலில் பரிமேலழகர் உரைக்கு வேற்றுமையாக உள்ள குறள் பாக்களை மட்டும் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். இந்நூலாசிரியர் புலவர் இரா. சாரங்கபாணி அவர்களின் ஆராய்ச்சித் திறமை போற்றற்குரியது. அரும்பாடுபட்டு இந்நூலைத் தயாரித்திருக்கிறார். இந்நூல் படித்து, சிந்தித்து, பயன்பெறத் தக்க நூல்.

சில உரையாசிரியர்களின் உரைவேற்றுமைகளைப் பிரசுரித்து விட்டு இந்நூலாசிரியர் 'முடிநிலை' என்று தம் உரையாக அரிய கருத்துக்களையெல்லாம் அளித்திருக்கிறார். அது ஆராய்ச்சியாளர்களின் அறிவுக்கு விருந்தாக அமைந்திருக்கிறது.

பிரசுரம்: செல்வி பதிப்பகம், காரைக்குடி; விலை: ரூ. 4—00.

## காந்தி புராணம்

மகாத்மா காந்தி அடிகளைப் பற்றி உலகத்து மொழிகளில் எல்லாம் நூல்கள் வெளிவந்துவிட்டன. உலக எழுத்தாளர்களெல்லாம் காந்தி மகானைப் பற்றி எழுதுவதை ஒரு பெருமையாகக் கருதுகின்றனர்.

தமிழ் மொழியில் நல்ல புலமையும் கவிபாடும் திறமையும் பெற்றிருந்த காலஞ்சென்ற பண்டித அசலாம்பிகை அம்மாள், காந்தி அடிகளின் வாழ்க்கைச் சரித்திரத்தைத் தமிழ் விருத்தப் பாக்களால் ஒரு புராணமாகவே பாடி விட்டார்.

திரு வி. கல்யாணசுந்தரனார் இந்நூலின் எழுத்துப் பிரதியைப் பார்த்துப் பாராட்டி ஒரு முன்னுரை வழங்கியிருக்கிறார். ஆசிரியை அவர்களின் அரிய முயற்சி மிகவும் பாராட்டுக்குரியது.

பிரசுரம்: எஜுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, நுங்கம்பாக்கம், சென்னை—6; விலை: ரூ. 6-00.

## வைத்தீசுவரன்

'கல்வித் தொண்டு புரிவதே கடவுள் தொண்டு' என்னும் அரிய நோக்கம் கொண்ட ராமகிருஷ்ண மடத்தினர் இலங்கை யாழ்ப்பாணத்தில் ஒருகல்லூரி நிறுவியிருக்கிறார்கள். வைத்தீஸ்வர வித்தியாலயம் என்னும் இந்தக் கல்லூரி குழந்தைச் செல்வங்களுக்கு அறிவூட்டும் கலைக் கோவிலாக விளங்கி வருகிறது. இந்தக் கல்லூரியினர் வெளியிட்டுள்ள மலர் கிடைக்கப் பெற்றோம். 'விளையும் பயிர் முளையிலே தெரியும்' என்பது போல் இந்த மலரில் வெளி வந்துள்ள பல மாணவ மாணவிகளின் கதை கட்டுரைகள் இலங்கை மக்களின் தமிழ் ஆர்வத்தையும் எழுத்து வன்மையையும் எடுத்துரைக்கின்றன. மேலும் கலைகொண்ட சோழனைப் பற்றித் திரு ஜே. எம். சோமசுந்தரம் அவர்களின் ஆங்கில ஆராய்ச்சிக் கட்டுரையும், இராமகிருஷ்ணர் காட்டிய சமரச நெறியைப் பற்றித் திரு ச. அம்பிகைபாகன் தமிழில் வழங்கியுள்ள கட்டுரையும் இந்த மலரின் சிறப்புக்கு அணிகலன்களாக விளங்குகின்றன.

பிரசுரம்: ராமகிருஷ்ண மிஷன் வைத்தீஸ்வர வித்தியாலயா, யாழ்ப்பாணம், இலங்கை.

## இதய பீடம்

எழுத்தாளன் ஸ்ரீகண்டன் வறுமைப் பிணியிலே அல்லலுற்று மெய்கண்டார் என்னும் பிரசுரகர்த்தரிடம் குமாஸ்தாவாகச் சரணடைகிறான். வாழ்க்கையில் திடீரென்று அதிர்ஷ்டம் வந்து குதிப்பது போல், பணக்காரப் பெண் ரஞ்சனியின் நட்பு அவனுக்குக் கிட்டுகிறது. ஆனால் துரதிர்ஷ்ட தேவதை நாக்கில் புகுந்து காதலுக்கே வேட்டு வைத்து விடுகிறது. இரு இளம் உள்ளங்களின் உணர்ச்சிப் போராட்டங்களை இந்த நாவலில் சிறப்பாகக் காண்கிறோம்.

வாழ்க்கையில் அன்றாடம் காணும் கதாபாத்திரங்களே இந்தக் கதையில் வந்தாலும் அவர்களது உள்ளப் பாங்கை ஆசிரியர் திறமையாகச் சித்திரித்திருக்கிறார். தெள்ளிய நீரோட்டம் போன்ற தமிழ் நடையும், இயற்கை வர்ணனையும் கதையின் சிறப்பை அழகுபடுத்துகின்றன.

நூலின் ஆசிரியர்: விக்கிரமன்; பிரசுரம்: ஜயந்தி பதிப்பகம், மேற்கு மாம்பலம், சென்னை-17, விலை: ரூ. 1—50

## இந்தியன் மூவி நியூஸ்

அலைகடலுக்கப்பால், தொலை தூரத்திலிருந்து தமிழிலும் ஆங்கிலத்திலும் குரல் கொடுக்கும் சினிமாப் பத்திரிகை "இந்தியன் மூவி நியூஸ்." இயல், இசை, நாடகம், சினிமா முதலிய லலித கலைகளின் வளர்ச்சிக்காகச் சிங்கப்பூரில் சேவை செய்யும் இவ்வரிய மாதப் பத்திரிகையின் தீபாவளி இதழ் வண்ணமலர்க் குவியலின் வனப்புடன் வந்திருக்கிறது. படிப்பதற்கும் பார்ப்பதற்கும் இந்த வெளியீட்டில் நிறைய அம்சங்கள் இருக்கின்றன. இப்பத்திரிகைக்கு ஐந்து ஆண்டுகள் பூர்த்தியாகி ஆறாவது ஆண்டு துவங்கியிருக்கிறது. இம்மலர் ஆறாவது தீபாவளி மலர். இப்பத்திரிகையின் தென்னிந்தியப் பிரதிநிதி ஸ்ரீ டி. எஸ். இரத்தினசாமி கலை ஆர்வத்துடனும், தமிழ் கூறும் நல்லுலகமெல்லாம் தமிழோசை கேட்க வேண்டும் என்ற ஆவலுடனும் நற்றொண்டு புரிந்து வருகிறார்.

ஆசிரியர் குழு: எம். கே. மேனன்—எஸ். சப்தகிரி சர்மா, காரியாலயம் 116, ராபின்சன் ரோடு, சிங்கப்பூர்—1.

# கலாக்ஷேத்திரத்தில் கலை விழா





வழக்கம் போல் அடையாறு கலா க்ஷேத்திரத்தில் கலை விழா சிறப்பாக நடந்தேறியது. கலை நிகழ்ச்சிகளை லோக் சபை சபாநாயகர் திரு அனந்தசயனம் அய்யங்கார் ஆரம்பித்து வைத்தார். இந்தக் கலைவிழாக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம்

1. ருக்மிணிதேவி வரவேற்புரை நிகழ்த்துகிறார். 2. பிரார்த்தனை. 3 முதல்நாளன்று மிக நன்றாகப் பாடி அனைவரது பாராட்டுதலையும் பெற்ற திரு பசுபதி 4. எண்பத்து இரண்டு வயது நிரம்பிய சாந்த பணிக்கர் துர்வாஸராகக் கதகளி நடனத்தில் தோன்றி அபாரமாக நடித்து அனைவரையும் மகிழ்வித்தார். ★ ★





ஜனவரி 1-ம் தேதி கூடிய சங்கீத வித்வத்சபையின் சதஸுக்கு முதுபெரும் வித்வான் மைசூர் கே. வாசுதேவாச்சார் தலைமை வகித்தார். ஸ்ரீ சௌடய்யா அவர்களுக்குச் சங்கீத கலாநிதி என்ற கௌரவப் பட்டமும், மற்றும் ஐந்து முதுபெரும் சங்கீத வித்வான்களாகிய ஆர். அனந்தகிருஷ்ண சர்மா, கல்லிடைக் குறிச்சி ராமலிங்க பாகவதர், சாக்கோட்டை ரங்கு அய்யங்கார், பி. என். அங்கப்ப பிள்ளை, ஸ்ரீமதி ஷண்முக வடிவு ஆகியவர்களுக்குக் கௌரவப் பாராட்டுப் பட்டமும் வழங்கப் பெற்றன. ஸ்ரீமதி ஷண்முக வடிவு நேரில் வர இயலாததால் அவருடைய அருமைப் புதல்வி ஸ்ரீமதி எம். எஸ். அந்தப் பட்டத்தைப் பெற்றுக் கொண்டார். சங்கீதப் போட்டியில் கல்கி ஞாபகார்த்த தம்புராப்பரிசுபெற்றவரையும், அமோகமாக மிருதங்கம் வாசித்து, சபையோரைக் குதூகலப்படுத்தி விசேஷ தங்கப் பதக்கங்களைப் பெற்ற ஸ்ரீ ராகவன், ஸ்ரீ வேணுகோபால் ஆகியவர்களையும் காணலாம்.

கொழும்பு சைவ மங்கையர் கழகத்தைச் சேர்ந்த மங்கையர்கள் இசை விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்னைக்கு வந்திருந்தனர். அவர்களுடைய வாத்திய சங்கீதம் சென்னையில் நடைபெற்ற இசை விழாக்களில் ரஸிகர்களின் உற்சாக ஆரவாரத்துடன் நடைபெற்றது. சென்னை ரஸிகர்களைத் தங்கள் வாத்திய சங்கீதத்தினால் மகிழ்வித்த மங்கையர்களை மேலே காணலாம்.

★ ★ ★

தமிழிசைச் சங்கத்தார் ஆண்டுதோறும் நடத்தும் கோபாலகிருஷ்ண பாரதியார் பாடல் போட்டியில் இந்த வருஷம் ராஜாஜியின் தம்புராப் பரிசை திருமதி சுந்தரவல்லி சீனிவாசன் விழாத் தலைவர் திரு மாணிக்கவேலரிடமிருந்து பெற்றுக்கொள்வதைக் கீழே படத்தில் காணலாம்.



# கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கம்



டிசம்பர் 22-ந் தேதி கல்கத்தா தமிழ் எழுத்தாளர் சங்கத் துவக்க விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்கு ஸ்ரீ டி. எஸ். சீதாபதி தலைமை வகித்தார். ஸ்ரீ ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் சங்கத்தைத் துவக்கிவைத்தார். ''வளரும் தமிழில் சிறுகதை இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ ரா. வி. ரங்கராஜன், ஸ்ரீ கோமதி சுவாமிநாதன், ஸ்ரீ கன்னிக் கண்ணன் ஆகியோரும், ''வளரும் தமிழில் நாவல் இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ ஜடாகரன், ஸ்ரீ ரஸவாதி, ஸ்ரீமதி எம். எஸ். கமலா ஆகியோரும் பங்கு கொண்டனர். பொதுச் செயலாளர் ஆங்கரை நா. ஜயராமன் நன்றி கூறக் காலை நிகழ்ச்சிகள் முடிவடைந்தன. மாலை நிகழ்ச்சிகள் ஸ்ரீ எஸ். டீ. ஸ்ரீநிவாஸன் தலைமையில் ஆரம்பமாயின. ''வளரும் தமிழில் விமர்சன இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ கொடுமுடி ராஜகோபாலன், ஸ்ரீ மகரம், ஸ்ரீ முன்ஷி ஆகியோரும், ''வளரும் தமிழில் கவிதை இலக்கியம்'' என்ற பொருள் பற்றி ஸ்ரீ ந. சஞ்சீவி, ஸ்ரீ புத்தனேரி சுப்பிரமணியம், ஸ்ரீ அழ. வள்ளியப்பா, ஸ்ரீ ம. பொ. சிவஞான கிராமணியார் ஆகியோரும் பங்கு கொண்டனர். பின்னர் ஸ்ரீமதி மங்களம் மணி கோஷ்டியாரின் இன்னிசை நடைபெற்றது. முடிவில் பொதுச் செயலாளர் ஸ்ரீ ப. ந. தியாகராஜன் நன்றி கூற விழா இனிது முடிந்தது.



# விசித்திரச் சலங்கை

4

...கதை...
வாண்டுமாமா
...படம்...
பாபு













இது தான் என்
குடிசை அந்தக்


இந்தப் பெண் யார், தேவதத்தா? எங்கிருந்து வருகிறாள்?
பசியால் களைத்துப் போய்க் காட்டிலே மயங்கிக் கிடந்தாள். மஞ்சுளா என்று பெயராம். அனாதை.


சங்கோசப் படாமல் சாப்பிடு மஞ்சுளா. பசியோடு படுத்துக் கொண்டால் தூக்கம் வராது தெரியுமா?


மிகவும் களைத்துக் காணப் படும் நீ இங்கு நிம்மதியாகத் தூங்கலாம்.


இரவு தன்னை மறந்து தூங்கிய மல்லிகா காலை...
நான் எங்கிருக்கிறேன்? எப்படி இங்கு வந்தேன்? ஓ.. நேற்றிரவு வாலிபன்


தந்தையும் மகனும் வருவதற்குள் இந்த வீட்டை ஒழுங்கு படுத்தி வைக்கிறேன்.... வேலை செய்வது இன்பமாக இருக்கிறது!
தொடரும்

## 41. மால்கோஷும் கலாவும்

மால்கோஷ் தன் மகன் ஜிலேந்திரனுக்குச் செய்த பேருபகாரத்தைக் கேட்ட அரசன் திகைத்துப் போனான்.

பிறகு ஜிலேந்திரன் மால்கோஷிடம், "எவ்வளவு அழகாக இருந்த உன் உருவம் இப்படி மாறிப் போய் விட்டதே! உன் முகத்தை நான் உற்று நோக்கியிராவிட்டால் உன்னை நான் எளிதில் கண்டுபிடித்திருக்கவே முடியாது. உனக்கு என்ன நேர்ந்தது? சொல், நீ முதலில் உட்கார்" என்று சொன்னான்,

உடனே அரசனும் "அப்பா, மால்கோஷ்! உட்கார். உன்னைச் சந்திக்கவேண்டும் என்று மிகவும் ஆவல் கொண்டிருந்தேன். கடவுளின் அருளால் இன்றுதான் என் ஆசை பூர்த்தி ஆயிற்று" என்றான்.

மால்கோஷ் அரசனுக்கு எதிரில் இருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். பிறகு அவன், கலாவும் தானும் மகாராண பட்டணத்திலிருந்து புறப்பட்டது, வழியில் நேர்ந்த பல கஷ்டங்கள், கடைசியில் கலாவும் தானும் பிரிய நேர்ந்தது எல்லாவற்றையும் விவரமாகச் சொன்னான்.

மால்கோஷ் ஜிலேந்திரனிடம் மிகவும் மன வருத்தத்துடன், "நீ எப்படியாவது என் தங்கை கலாவைத் தேடிக் கண்டு பிடிக்க உதவி செய்ய வேண்டும். அதை உன்னுடைய கடமையாக எண்ண வேண்டும்" என்று கண்களில் நீர் மல்கக் கூறினான்.

மால்கோஷ் சொல்லியதைக் கேட்டவுடன் ஜிலேந்திரன் அரசனைப் பார்த்துச் சிரித்தான். அரசனும் பொருள் பொதிந்த புன்னகை புரிந்தான். மால்கோஷ் அவர்கள் எதற்காகச் சிரிக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளாமல் விழித்தான்.

உடனே ஜிலேந்திரன் "மால்கோஷ்! இந்தச் சங்கீத மகாநாடே நீயும் கலாவும் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளத் தான் ஏற்பாடாயிற்று. நீ இப்பொழுது எதிர்பாராமல் அடையப் போகும் ஒரு சந்தோஷச் சந்திப்புக்குத் தயாராயிரு" என்று சொல்லிக் கொண்டே ஒரு சிப்பந்திக்குச் சைகை காட்டினான். அப்பொழுது கலா திடீரென்று அங்கே வந்தாள். எதிர்பாராத விதமாகக் கலாவைப் பார்த்ததும் மால்கோஷுக்கு ஒரு அதிர்ச்சி ஏற்பட்டதுபோல் இருந்தது. தனது நாற்காலியை விட்டு எழுந்திருந்தான். "கலா, கலா!" என்று அழைத்துக்கொண்டே அவள் கரங்களைப் பற்றிக் கொண்டான்.

அவர்கள் இருவருக்கும் துக்கத்தினால் நெஞ்சை யடைத்தது. இருவருடைய



கண்களிலிருந்தும் நீர் தாரை தாரையாகப் பெருகிற்றே தவிர, அவர்கள் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை.

பிறகு அரசனும் ராணியும் மால்கோஷையும் கலாவையும் மிகவும் அன்புடன் உபசரித்தார்கள். சில காலம் அரண்மனையிலேயே தங்கிப் போகும்படி அவர்களைக் கேட்டுக் கொண்டார்கள்.

மால்கோஷ் மறுநாள் நன்றாக வாரிய கிராப் தலையுடனும் பளபளவென்ற முகத்துடனும் வழக்கமாக அணிந்து கொள்ளும் நீண்ட சட்டையுடனும் நல்ல வெள்ளைப் பைஜாமாவுடனும் தோன்றினான். அரசனுக்கும் ராணிக்கும், ஜிலேந்திரனுக்கும் தாங்கள் அடைந்த அனுபவங்களைப் பற்றி மால்கோஷும் கலாவும் விவரமாகச் சொன்னார்கள். இரண்டு நாட்கள் அவர்கள் மிகவும் சந்தோஷமாகக் காலங் கழித்தார்கள். மூன்றாவது நாள் அவர்கள் இருவருக்கும் தங்கள் தகப்பனார் மால்மாவின் நினைவு அடிக்கடி வர ஆரம்பித்தது. சந்தோஷமாக இருந்த அவர்கள் முகம் சஞ்சலத்துடன் காணப்பட்டது.

"அண்ணா! எனக்கு அப்பாவைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது" என்றாள் கலா மிகுந்த ஆசையுடன்.

"ஆமாம். உன்மாதிரி எனக்கும் ஆசைதான். நாம் எதிர்பாராத விதமாக ஒருவரையொருவர் சந்தித்ததே பெரிய ஆச்சரியகரமான விஷயம். ஆனால் அதைப் பற்றிச் சந்தோஷப்பட முடியாத நிலையில் அல்லவா இருக்கிறோம்! மாயப் பந்து காணாமற் போய்விட்டது. அது இல்லாமல் அப்பாவிடம் எப்படிப் போக முடியும்?"

"மாயப் பந்து காணாமல் போய் விட்டதா? எப்படிப் போயிற்று?"

"நான் சரியான நிலையில் இல்லாமலிருக்கும்பொழுது ஒரு நாய் என்னைப் பார்த்துக் குரைத்தது. அதை அடித்துத் துரத்தக் கற்களைக் காணாததால் பந்தையே அதன்மீது விட்டெறிந்தேன். அது நாயின்மேல் விழாமல் நேரே ஓடுகிற ஆற்றில் விழுந்து வெள்ளத்தோடு போய் விட்டது! நான் உடனே ஓடிப்போய்த் தேடிப் பார்த்தேன். பந்து அகப்படவில்லை."

"அடாடா! இரண்டாவது முறையாகத் தண்ணீரில் விழுந்து விட்டதா? அப்படியானால் அதன் சக்தியை அல்லவா அது இழந்திருக்கும்!"



''அது சக்தியை இழந்தால் என்ன? அதை வேறு ஒருவரும் உபயோகிக்க முடியாவிட்டால் நமக்கு நல்லதுதானே! ஆனல் பந்து இல்லாமல் அப்பாவிடம் போகக் கூடாதே!'' என்றுகூறி மால்கோஷ் வருந்தினன். கலாவும் அதைக் கேட்டுக் கண் கலங்கினள்.

சங்கித மகாநாட்டில் பாட்டுப் போட்டி ஆரம்பிப்பதற்கு முன்னல் மால்கோஷ் அரண்மனைக்குள்ளே அழைக்கப்பட்டான் அல்லவா? அந்தச் செய்தி சங்கித மகா நாட்டில் கூடியிருந்த ஜனங்கள் அனைவருக்கும் தெரிந்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக மால்கோஷைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள்.

சங்கித மகாநாட்டில் நடந்த பாட்டுப் போட்டியில் முதன்மை ஸ்தானம் பெற்ற சங்கித வித்வானுக்குத் தங்கப் பதக்கத்தை அரசனின் முன்னிலையில் அளிப்பதற்குப் பிரமாதமான ஏற்பாடுகள் நடந்தன. அரசன் தங்கப் பதக்கத்தைப் பரிசளித்து விட்டு மால்கோஷையும், கலாவையும் அங்கு கூடியிருந்த சங்கித வித்வான்களுக்கும் மற்றவர்களுக்கும் அறிமுகப்படுத்தினன். அவர்கள் யார் என்பதையும் சங்கித மகா நாட்டை ஏற்படுத்தியதற்கே அவர்கள்தான் முக்கிய காரணம் என்பதைம் அவர்களைப்பற்றிய விவரம் யாவற்றையும் உருக்கமாகவும், சுருக்கமாகவும் சொன்னன். அரசனுடைய விருப்பப்படி தகுந்த பக்க வாத்தியங்களுடன் மால்கோஷ் அப்பொழுது பாடப் போகிறன் என்றும், அவனுடைய பாட்டுக்குத் தகுந்தபடி கலா ஆடப்போகிறள் என்றும் அறிவிக்கப்பட்டது. உடனே சபையில் இருந்தவர்கள் அனைவரும் கரகோஷம் செய்தார்கள். மால்கோஷ் ராகத்தையே எல்லா வித்வான்களும் பிரமிக்கும்படி மால்கோஷ் பாட, கலா யாவரும் வியக்கும் படி ஆடினள்.

சங்கித மகாநாட்டுக்குப் பல தேசத்தில் உள்ள சங்கித வித்வான்களும் மற்றவர்களும் வந்திருந்தார்கள் அல்லவா! அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தேசத்துக்குத் திரும்பிச் சென்றதும், சங்கித மகாநாட்டில் மால்கோஷும் கலாவும் எதிர் பாராதவிதமாகச் சேர்ந்ததைப் பற்றியும் அவர்களைப் பற்றிய விவரங்களையும் தங்கள் உறவினர்களுக்கும் சிநேகிதர்களுக்கும் சொன்னர்கள்.

அந்தச் செய்தியைக் கேட்ட மந்திரக் கிழவி மிகவும் சந்தோஷமடைந்தாள். தான் கையாண்ட யுக்தியின்படி பவுன் நாணயங்களை உபயோகித்ததினல்தான் மால்கோஷ் மீண்டும் தன் சுய புத்தியை அடைந்திருக்கிறன் என்று நிச்சயப்படுத்திக் கொண்டாள். மால்கோஷிடம் அவன் தகப்பனர் கொடுத்த மாயப்பந்து இல்லை என்று அவள் ஏற்கனவே அறிந்திருக்கிறள் அல்லவா? அதைப் பற்றித்தான் அவள் கவலைப்பட்டாள். அது விஷயமாகத் தன்னிடம் கட்டாயம் அவர்கள் வருவார்கள் என்றும், தன்னல் ஆன உதவியை அவர்களுக்குச் செய்ய வேண்டும் என்றும் தீர் மானித்தாள். மால்கோஷும் கலாவும் மாஞ்சிநாட்டு மன்னனுடன் சந்தோஷமாக இருக்கிறர்கள் என்ற செய்தியை அறிந்ததும், ஏழு சித்திரக் குள்ளர்கள் அடைந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை.

மகாராணு பட்டணத்து அரசன் தினந்தோறும் மால்கோஷைப் பற்றிய நல்ல செய்தியை எதிர்பார்த்த வண்ணமாகவே இருந்தான். சங்கித மகாநாட்டுக்குப் போய் வந்த அரண்மனை சங்கித வித்வான் மூலம் எல்லா விஷயங்களையும் அறிந்து கொண்டான். மால்கோஷ் மந்திரவாதியிடமிருந்து ராஜகுமாரி 'ரூபிகா'வைக் காப்பாற்றினனல்லவா? அரசகுமாரியை மால்கோஷுக்கு மணம் முடித்து வைக்க வேண்டும் என்று நிச்சயித்து மந்திரவாதி மால்மானவைச் சந்திக்க ஏற்பாடு செய்தான்.

யாவருக்கும் சந்தோஷத்தை அளித்த அதே செய்தி கார்குருவுக்குச் சந்தோஷம் உண்டாக்கவில்லை. மால்கோஷ் சுய நினைவுடன் இருக்கும் செய்தி அவனைத் தூக்கி வாரிப் போட்டது. (தொடரும்)

ஜனவரி 10 வெளியீடு

அசோகா பிக்சர்ஸ்....

# பூலோக ரம்பை

(தமிழ் & தெலுங்கு)

டைரக்ஷன்

**D.யோகானந்த்**

BHARAT STUDIO

# கால்கேட் குளோரோபில்* ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



**ஈறுகளைப் பலப்படுத்துகிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப்பலப்படுத்துகிறது.

**வாய்நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!**

வேறு சாதாரண பற்பசையை விட மிக மிகத்தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!**

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற் பசையிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை!**




* நீரில் கரையும் குளோரோபிலின்ஸ் சேர்ந்தது.

**இதோ!** பெரிய எக்கானமி அளவில் கிடைக்கிறது





ஆறும் அத்தியாயம்

## பாட்டுப் புலியும் போலீஸ் புலியும்

இரவு நெடுநேரமாகியும் தன் கணவன் வீடு திரும்பாததைக் கண்டு கண்ணம்மாள் கலவரமடைந்து போனாள். பத்து மணி வரையில் எங்கேயாவது ஊர் சுற்றிக் கொண்டிருப்பார், வந்து விடுவார், வந்ததும் சண்டை பிடிக்க வேண்டும் என்றுதான் கறுவிக் கொண்டிருந்தாள். ஆனால் அதன்பின்னும் அவர் வராமற் போகவே அவளுக்கு அச்சம் தோன்றத் தொடங்கியது. சிங்காரியின் மனநிலை விவரிக்க வொண்ணாததாக இருந்தது. தந்தையைக் காணவில்லையென்ற கவலை ஒருபுறம் உள்ளத்தை வதைத்துக் கொண்டிருக்க, முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டிருந்த சிற்றன்னையிடம் அவர் எங்கே என்று கேட்கவும் பயமாக இருந்தது. மெல்லவும் மாட்டாமல் விழுங்கவும் மாட்டாமல் தவித்துக் கொண்டிருந்தாள் அவள். கடைசியாகக் கண்ணம்மாள் அவளை அதட்டிக் கேட்டாள்.

''எங்கேயடி போனார் உன் அப்பா? உன்கிட்ட ஏதாச்சும் சொன்னாரா?''

''இல்லையே, சின்னம்மா! நீங்க அவரை சினிமாக் கொட்டகை வாசலில் பார்க்கவில்லையா?'' என்றாள்.

''பார்த்திருந்தால் உன்னைக் கேட்களைக்கென்ன கொழுப்பா பிடிச்சிருக்குது?...உங்கிட்ட சொல்லாமலா போயிருப்பார்! இருட்டிலே அவர் எங்கே

# கான்ஸ்டபிள் கந்தசாமி

ஏ. கே. பட்டுசாமி

போனாரோ? என்ன செய்கிறாரோ? எங்கேயாவது கண் தெரியாமல் கிழவர் கீழே விழுந்து வைச்சிருப்பாரோ?'' என்று அவரைப் பற்றிச் சிறிதளவு கவலையுடனேயே கேட்டாள் கண்ணம்மாள்.

சிங்காரிக்குப் பகீரென்றது. அவள் பேசாமல் தகப்பனாரின் அறையில் போய் உட்கார்ந்து கொண்டாள். சாப்பிடக் கூடப் போகவில்லை. 'எங்கேயாவது கீழே விழுந்து வைச்சால்!......' என்று அவளது சிற்றன்னை கூறிய நாராசச் சொல் காதுகளில் ரீங்காரம் செய்து கொண்டேயிருந்தது. திகிலோடு உறக்கம் பிடிக்காமல் உட்கார்ந்து கொண்டிருந்தாள். இரவு மணி பன்னிரண்டு, ஒன்று என்று வேகமாகச் சென்றுகொண்டேயிருந்தது.

தூரத்தில் ரிப்பன் கட்டடக் கடிகாரம் மணி இரண்டு என்பதைப் பாட்டுப் பாடி ஒலித்துக் காட்டியது. நாடகக் கொட்டகையிலிருந்து புறப்பட்ட கந்தசாமிக்கு இந்த அகால நேரத்தில் வீட்டுக்குப் போகப் பிடிக்கவில்லை. எங்கேயாவது பார்க்கில் போய்ப் படுத்துவிட்டால் என்ன என்று சிந்தித்தான்; அவனது வீட்டுக்குப் போகும் வழியில் 'டைமண்ட் பார்க்' என்ற ஒரு பெரிய உபவனம் இருந்தது. ஒழுங்காக வைத்து வளர்க்கப்பட்டிருந்த புஷ்பச் செடி வரிசைகளுக்கிடையே விசாலமான சிமெண்ட் பெஞ்சுகள் போடப்பட்டிருந்தன. இரவின் மிச்சப் பகுதியை அங்கே கழித்து விடலாம். காலையில் எழுந்து வீட்டுக்குப் போய் உடுப்பை மாட்டிக் கொண்டு உத்தியோகத்துக்குக் கிளம்பி விடலாம் என்று அவன் முடிவு செய்தான்.

கடுமையான பனி கொட்டிக் கொண்டிருந்தது. சிலீர் சிலீரென்று வீசிய குளிர் காற்று உடம்பில் பட்டதும் தேள் கொட்டுவது போலிருந்தது. தூரத்திலே தெரிந்த பூங்காவின் ஓரத்தில் அடர்ந்து வளர்ந்திருந்த மரங்களின் உச்சியில் மின்மினிப் பூச்சிகள் 'மினுக் மினுக்' என்று சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அவனது மனம் ராவண கான சபாவில் நடந்த ஆச்சரியமான சம்பவங்களைப் பற்றி எண்ணமிட்டுக் கொண்டிருந்தது.

திருடனைப் பிடித்துத் தண்டிக்கச் செய்யவேண்டிய அவனே, திருடன் தப்பியோடுவதற்கு ஒத்தாசை செய்து விட்டான்! மூச்சுப் பிடித்துக் கொண்டு மோட்டார் 'ஹாண்டிலை'ச் சுழற்றியதை நினைத்ததும் அவனுக்குத் தன்மீதே எரிச்சல் வந்தது. தான் செய்த தவறை வேறு யாராவது பார்த்துவிட்டிருந்தால் என்ன கதி!......பார்த்திருந்தால் உத்தியோகம் போவது மாத்திரமல்ல, திருடனுக்குத் துணைபோனவன் என்று அவனை ஒருவேளை வசமாக மாட்டிவைத்து விடுவார்கள். இந்த முட்டாள்தனத்துக்குப் பிராயச்சித்தமாக எப்படியாவது அந்த மாதவி வேஷக்காரனை மாத்திரம் அவன் கண்டு பிடித்துவிட்டால்!.....

பூங்காவின் மத்தியிலே சென்ற அகலமான பாதை, அதை இரு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டிருந்தது. மவுண்ட் ரோடையும் மந்தாரப் பேட்டையையும் இணைத்துக் கொண்டிருந்த அந்தப் பாதையில் மட்டும் இங்கொன்றும் அங்கொன்றுமாக மங்கலான விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. தோட்டத்தின் மற்றப் பகுதிகளில் இருள் சூழ்ந்திருந்தது. வலப் பக்கத்தில் தோட்டத்துக்கு அப்பால் கூவம் நதி சந்தடியின்றி ஆமை போல் நகர்ந்து கொண்டிருந்தது. கந்தசாமி படுப்பதற்கு வசதியாக ஒரு பெஞ்சைத் தெரிந்தெடுத்து அதைக்



கைக்குட்டையால் தட்டினான். இதே சமயம் கரடியின் உறுமலைப் போல் ஒரு மெல்லிய சத்தம் கேட்டது.

அவன் திடுக்கிட்டான். இருந்த இடத்தில் அசையாமல் நின்று கவனித்தான். மெல்லிய குரலில் யாரோ பேசுவது போல் இருந்தது. கண நேரத்தில் அவன் மனம் பலப்பல எண்ணியது. இத்தனை பெரிய நகரத்தில் தினந்தோறும் எத்தனையோ திருட்டும் புரட்டும் கொலையும் களவும் நடக்கின்றன. சந்தேகமின்றி இங்கும் அத்தகைய செயலுக்காக யாரோ சதி நடத்திக் கொண்டிருக்கிறார்கள் போலும்! இல்லா விட்டால் இந்த நேரத்தில் இந்த ஏகாந்தமான இடத்தில் வந்து ரகசியம் பேசவேண்டிய அவசியம் என்ன? சின்ன வயதில் அவன் கதைகள் கேட்டிருக்கிறான், திருடர்கள் கொள்ளையடித்த பொருள்களைக் காடுகளில் மரத்தடியில் பங்கு போட்டுக் கொள்வார்கள் என்று. அதைப் போல் ஏதாவது இருந்தாலும் இருக்கலாம்!

மீண்டும் அதே முனகல் தொடர்ந்து கேட்டது. சத்தம் வந்த திசையை நோக்கி ஓசைப் படாமல் அடிமேல் அடிவைத்து நடந்தான் கந்தசாமி. ஒரு பெரிய குரோடன்ஸ் செடிக்கு அப்பாலிருந்த ஆசனத்தில் யாரோ உட்கார்ந்திருப்பது தெரிந்தது. உற்றுக் கவனித்தான். ஆனால் அவன் சந்தேகித்தது போல் சதிப்பேச்சு அல்ல; கரகரப்பான தொண்டையில் யாரோ ஒப்பாரிக்கண்ணி பாடுவது போலிருந்தது.

'' கன்னங்கரியவனே
கருஞ்சாந்து மேனியனே
உன்னைச் சரணடைந்தேன்
ஓட்டிடுவாய் துன்பமெல்லாம்...''

கந்தசாமிக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்த நேரத்தில் இங்கே வந்து உட்கார்ந்து பாடுகிறவன் யாராக இருக்கும்! ஒருகால் பைத்தியக்காரனோ?

'' யாரது!'' என்று அதட்டல் போட்டான் அவன்.

பாட்டுக் குரல் 'டபக்' கென்று நின்றது. அவன் தைரியமாக அருகில் சென்றான். தன்னந்தனியாக ஒருவன் சிமெண்ட் பெஞ்சின் மீது உட்கார்ந்திருப்பது தெரிந்தது. சட்டைப் பையிலிருந்து நெருப்புப் பெட்டியை எடுத்து ஒரு குச்சியைக் கிழித்தான். எதிரேயிருந்த ஆசாமியைப் பார்த்ததும் அவனது ஆச்சரியம் பன்மடங்காகப் பெருகியது.

தீக்குச்சியின் வெளிச்சத்தில் கண்ணைக் கொட்டிக் கொட்டி



விழித்துக் கொண்டிருந்தது. இந்திரா டாக்கீஸுக்கருகில் அன்று மாலை பர்ஸைத் தொலைத்து விட்டுச் சிக்கித் தவித்த அப்பாவிக் கிழவர்தான் என்பதை அவன் புரிந்துகொண்டான்.

அந்தப் பிரகிருதியைப் பார்த்ததும் அவர்மீது அவனுக்கு ஒருவிதமான இரக்கம் உண்டாகியது. எனினும் அதை வெளிக்குக் காட்டாமல், "ஏய், யாரையா நீ? என்ன பண்ணிக்கிட்டிருக்கே இங்கே?" என்று கேட்டான்.

"இயற்கையின் அழகைப் பாடிக் கொண்டிருக்கிறேன் அப்பா!"

"அழகா? இந்த இருட்டிலே என்ன அழகு தெரியுது உனக்கு?"

"புலவர்களின் கண்ணுக்கு இருள் ஒளி எல்லாம் ஒன்றுதான். இருண்ட இரவின் எழிலை......!"

"நீங்க புலவருங்களா?......சரிதான், பகல் நேரத்திலே பாடக் கூடாதா? வீட்டிலே படுத்துத் தூங்க வேண்டிய நேரத்திலே உடம்பைக் கெடுத்துக்கிறீங்களே! அதுவும் இந்த வயசிலே!..." என்று சற்றுஅநுதாபமான குரலில் அவன் கூறியதும் முத்துப் புலவரின்உள்ளம்நெகிழ்ந்து விட்டது. தம்மெதிரே சாதாரண உடையிலிருந்த அந்த ஆசாமிதான் தம்மை அன்று மாலை படாதபாடு படுத்திய போலீஸ்காரன் என்பதை அவரால் கண்டு கொள்ள முடியவில்லை. அதற்கு அநுகூலமாக அங்கு சூழ்ந்திருந்த இருள் வேறு அவரது மங்கிய பார்வைக்குத் திரை போட்டுக் கொண்டிருந்தது.



கந்தசாமி அவர் அருகே இருந்த இடத்தில் உட்கார்ந்து கொண்டான்.

"சிலருக்கு வீடு வாசல் இருந்தும்கூட அங்கே நிம்மதி கிடைப்பதில்லை!" என்று அவனது கேள்விக்குப் பதிலளிக்கும் தோரணையில் கூறினார் புலவர்.

'சரி! சரி! இவரும் நமது கட்சிதான் போலிருக்கிறது' என்று எண்ணிய கந்தசாமி, "வாஸ்தவமான பேச்சுங்க!" என்று பளிச்சென்று ஆமோதித்தான்.

மணியோ இரண்டரைக்கு மேலாகி விட்டது. இன்னும் இரண்டு மூன்று மணி நேரம் இவரோடு பராக்காக உட்கார்ந்து பேசிக் காலம் கழித்து விட்டால் பொழுது விடிந்து விடும் என்று நினைத்தவனாக அவரது வாயைக் கிளறினான்.

மனிதரிலே இரண்டு வகை. ஒருசாரார் அன்னியர்களை அவர்கள் எத்தனை தான் ஒளிவு மறைவின்றி நடந்து கொண்டாலும் இலேசில் நம்பிவிட மாட்டார்கள். அவர்கள் பேசும் ஒவ்வொரு பேச்சையும் எடைபோட்டுத்தான் பேசுவார்கள். அப்பேர்ப்பட்டவர்களிடம் எந்தவிதமான ரகசியத்தையும் கிரகிக்க முடியாது. மற்றொரு சாரார் இதற்கு நேர் மாறான சுபாவமுடையவர்கள். குழந்தை போன்ற உள்ளம் படைத்தவர்கள். யாராவது ஒரு வார்த்தை அநுதாபமாகக் கூறிவிட்டால் போதும், எதிராளி எப்படிப்பட்டவர் என்பதைச் சற்றும் ஆலோசித்துப் பார்க்கவேமாட்டார்கள். மனத்திலுள்ள அந்தரங்கங்கள் அத்தனையையும் அப்படியே எடுத்து வெளியில் வைத்து விடுவார்கள்.

முத்துப் புலவர் இந்த இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவர். சிங்காரியைத் தவிர தம்மிடம் அநுதாபம் காட்டுகிறவர்களே இல்லையே என்ற பெருங்குறை அவருக்கு நெடுநாளாக உண்டு. அவரைப் பரிவாக விசாரித்து அவரது அபிப்பிராயத்தை அப்படியே ஒப்புக்கொள்ளுகிற ஆசாமியும் இவ்வுலகத்தில் இருக்கிறான் என்று கண்டதும் அவருக்கு மகிழ்ச்சி எல்லையை மீறியது. மளமளவென்று அவர் பர்மாவிலிருந்து முதல் பட்டணத்துக்கு வந்து பரிபவப்படுவது வரையிலுள்ள செய்திகளை ஒன்று விடாமல் கூறிவிட்டார். தமது முதல் தாரத்தின் நகைகளைக் கண்ணம்மாள் விற்றுப் பணமாக்கிவிட்டாள் என்ற விஷயத்தை மட்டும்தான் கூற மறந்தார்.

"இதோ பார் தம்பி, இப்போது சொல்லு! இந்த நிலையில் நான் எப்படி வீட்டுக்குப் போக முடியும்? பணம் எங்கே, டிக்கட்டு வாங்காமல் எங்கே போயிருந்தாய் என்று அவள் கேட்டாள் என்றால் நான் என்ன சொல்லுவது?"

கந்தசாமிக்கு அவர்மீது அளவற்ற இரக்கம் தோன்றியது. சாயந்திரம் அவரைப் படுத்திய பாட்டுக்குப் பிராயச்சித்தமாக ஏதாவது செய்ய வேண்டும் போலிருந்தது. சட்டைப் பையைத் துழாவிப் பார்த்தான். அதில் ஒரு ரூபாய் சில்லறைதானிருந்தது.

"இந்தாங்க. இதை வச்சுக்கிடுங்க, ஒரு ரூபாய்தான் இருக்குது!" என்றான் அவன்.

புலவருக்குத் தமது நன்றியைத் தெரிவிக்க வார்த்தைகளே கிடைக்கவில்லை. அவர் கஷ்டப்பட்டு எழுதி அச்சிட்டுக்

கொடுத்த புஸ்தகங்களை ஈடாக வைத்துக் கொண்டு அத்தனை கெஞ்சியும் காலணாக் கூடக் கொடுக்காத பரோபகாரம் பின்னை எங்கே! கருணையே வடிவான இந்த மனிதன் எங்கே!

''வேண்டாமப்பா! நீ அன்போடு சொன்னதே போதும்!'' என்று நாத் தழுதழுக்கக் கூறினார்.

சிறிது நேரம் இருவருமே மௌனமாக யோசித்தனர். பிறகு கிழவர் பேசினார்:

''தம்பி! நீ அடிக்கடி என்னை வந்து பாரப்பா! உனக்குக் கவிதைகள் இயற்றக் கற்றுக் கொடுத்து உன்னைப் புலவனாக்கி விடுகிறேன்.''

''என்னையா!''

''ஏன்?''

''ஒண்ணுமில்லீங்க, சும்மாத்தான் கேட்டேன். அது கிடக்கட்டும், முதலில்வீட்டிலே என்ன பதில் சொல்லுவதுன்னு யோசனை பண்ணுங்க!''

புலவருடைய மனம் மீண்டும் படுத்து விட்டது. இது பெரிய பிரச்னையாயிற்றே!...

கந்தசாமி ஒரு யோசனை கூறினான்:

''பேசாமல் நான் சொல்லுகிறபடி செய்யுங்க. 'பணத்தை எவனோ 'பிக்பாக்கெட்'அடிச்சுட்டான், போலீஸ்காரன் துரத்திக் கொண்டு போய் அவனைப் பிடித்துக்கொண்டான்' என்று சொல்லுங்க.''

அவன் யோசனை கூறிக் கொண்டே போகையில் முத்துப் புலவர் குறுக்கிட்டுப் பேசினார்:

''போலீஸ்காரன் என்னையல்லவா பிடித்தான்!'' என்றார் சந்தேகத்துடன்.

''இருக்கட்டும், கேளுங்க. 'அப்புறம் என்னையும் ஸ்டேஷனுக்கு அழைத்துப் போனாங்க. ராத்திரி விசாரணை செய்து கேஸ் எழுதி முடிப்பதற்கு ரொம்ப நேரம் ஆகிப் போச்சு, அப்புறம் தெரிஞ்சவங்க வீட்டிலே படுத்திருந்தேன்' என்று சொல்லி வையுங்க.''

''அவன் நம்ப மாட்டாளே அப்பா!''

''நான் வந்து உங்களுக்குச் சாட்சி சொன்னால்?''

''சொன்னால் அத்தாட்சி என்ன என்று கேட்பாளே!''

''அத்தாட்சி என்னவா? போலீஸ்காரன் பேச்சைக் கூடவா அவங்க நம்ப மாட்டாங்க?'' என்றான் கந்தசாமி.

''போலீஸ்காரனா?''

''ஆமாங்க. நானும் ஒரு போலீஸ்காரன் தான்.''

''நீ போலீஸ்காரனா?....எத்தனை நல்லவனப்பா நீ! சாயந்திரம் ஒருவன் சினிமாக் கொட்டகையருகில் என்ன இம்சை பண்ணி விட்டான் தெரியுமா? உம், உன் பெயர் என்ன?''.

''கந்தசாமிங்க!''

பொழுது விடியப் போகிறது என்பதைக் கீழ்வானத்தில் தோன்றிய மங்கிய ஒளி அறிவித்தது. மரங்களின் மீதிருந்த பறவைகள் உறக்கம் கலைந்தெழுந்து விதம்விதமான குரலொலிகளை எழுப்பி உதய கன்னியை வரவேற்றன.



''பொழுது விடியப் போகுது. தைரியமாகப் போலீஸ்காரனையே வந்து சொல்லச் சொல்லுகிறேன் என்று அடிச்சுப் பேசுங்க. நான் அப்புறமா வந்து பார்க்கிறேன்'' என்று கூறிக் கிளம்பினான் அவன்.

முத்துப் புலவர் உற்சாகத்தோடு எழுந்து கொண்டே, ''தம்பி! எனக்கு ஒண்ணு தோணுது. உன்கிட்ட சில ரொம்ப முக்கியமான விஷயமெல்லாம் பேசவேணும். நீ தவறாமல்ஒருநாளைக்கு வா!'' என்றார்.

''ஆகட்டும்'' என்று தலையை ஆட்டிக் கொண்டே சென்றான் கந்தசாமி.

தந்தையை எதிர்பார்த்துக் கொண்டு இரவு வெகு நேரம் வரையில் விழித்திருந்த சிங்காரி அதிகாலையில் கண்ணயர்ந்து விட்டாள். திடீரென்று கண்ணம்மாளின் இரைச்சலைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தாள்.

''எங்கேயடி அந்தக் கிழம்? இன்னும் வந்ததா இல்லையா?''

''காணோமே, சின்னம்மா..''

''காணோமென்னு இங்கேயே இடிச்ச புளிமாதிரி உட்கார்ந்திருந்தால்?''

''போய்த் தேடிப் பார்க்கிறேன்'' என்று புறப்பட்டாள் அவள்.

கலைந்திருந்த தலையைக் கோதிச் சரிப்படுத்திக் கொண்டு, புடவைத் தலைப்பால் முகத்தை நன்றாகத் துடைத்த வண்ணம் முன்புறத் தோட்டத்தில் வந்து நின்று கொண்டு யோசித்தாள். மனம் சலிப்புற்ற நேரங்களில் புலவர் அடிக்கடி 'டைமண்ட்' பூங்காவில்

போய் உட்கார்ந்திருப்பது வழக்கம் என்பதை அவள் அறிவாள். முதலில் அங்கே போய்த் தேடிப் பார்த்து விட லாம் என்ற எண்ணத்துடன் தோட்டக் கதவைத் திறந்து கொண்டு நடந்தாள்.

முத்துப் புலவரை வழியனுப்பி விட்டுத் தன் வீட்டை நோக்கி நடந்த கந்தசாமி, அக்காளிடம் பேசுவதா வேண்டாமா? அவள் ஏதாவது கேட்டால் எப்படிப் பதிலளிக்க வேண்டும் என்றெல்லாம் மனத்தினுள் சிந்தித்தவண்ணம் நடை போட்டான். தெரு முனையை யடைந்ததும் அவளது வீட்டு வாசலில் ஒரு ஜட்கா வண்டி நிற்பதைக் கண்டான். வண்டியிலிருந்து மாமன் தருமலிங்கமும் அவரது மகள் முனியம்மாவும் இறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. பேசாமல் வந்த வழியே திரும்பிப் போய் விடலாமா என்றுகூட எண்ணினான். ஆனால் அவனது போலீஸ் உடை வீட்டிலல்லவா இருந்தது?

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தான். மாமன் வந்திருந்த மகிழ்ச்சியில் முத்தம்மாள் அவன் வந்ததைக் கவனிக்கவில்லை. முக மலர்ச்சியோடு அவரைக் குசலம் விசாரித்து வரவேற்பதில் ஈடுபட்டிருந்தாள். ஆனால் முனியம்மாளின் கழுகுப் பார்வைக்கு அவன் தப்பவில்லை. கூடத்தில் உட்கார்ந்திருந்த அவள் அவனைக் கண்டதும் எழுந்திருந்து நாணிக் கோணிக் கொண்டு அடுக்களைக்கு ஓடினாள்.

"எங்கே தம்பியைக் காணும்?" என்று கேட்டார் தருமலிங்கம்.

"இதோ இருக்கிறேன், மாமா! எப்போது வந்தீங்க?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் கந்தசாமி.

"சௌக்கியம்தான், அப்பா. எப்படி இருக்குது உன் உத்தியோகமெல்லாம்?"

"அதை ஏன் கேட்கிறீங்க. ஊரிலே திருட்டுப் பசங்க தொந்தரவெல்லாம் அதிகரித்துப் போச்சு!"

"நம்ப கிராமத்திலேகூட அதே நிலைதான் கந்தசாமி! போன வாரம் தொழுவத்திலே கட்டியிருந்த உழவு மாட்டை எவனோ அவுத்துக்கிட்டுப் போய் விட்டான். தலையாரியும் எவ்வளவோ முயற்சி பண்ணிப் பார்க்கிறான். ஆனால் ஒரு தடையமும் கிடைக்கல்லே!"

கந்தசாமிக்கு மாமனின் அறியாமையைக் கண்டு சிரிப்புத்தான் வந்தது.

"என்ன மாமா, உங்க தலையாரியை என்ன பட்டணத்துப் போலீஸ்கார ஜவான் என்று நினைச்சீங்களா?"

தம்பி மாமனுடன் சௌஜன்யமாகப் பேசுவதைக் கண்டு பூரித்துப் போன முத்தம்மாள் அவர்களது பேச்சில் மகிழ்ச்சியுடன் கலந்து கொண்டாள்.

"நம்ப தம்பி மாத்திரம் ஒரு வாரத்துக்குக் கிராமத்திலே வந்து இருந்திச்சின்னால் அப்புறம் அங்கே திருட்டுப் பயமே இருக்காது!"

"ஹூம், ஒருவாரம் எதற்காம்; ஒரு மணி நேரம் இருந்தால் போதாதா? பசங்களை ஒழிச்சுக் கட்டிட மாட்டேனா!"

அத்தானுடைய வீரப் பிரதாபங்களை அவன் வாயாலேயே கேட்ட முனியம்மாளுக்குச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. புடவைத் தலைப்பினால் வாயை மறைத்துக் கொண்டு இடி இடி யென்று சிரித்த அவளை வெறுப்போடு பார்த்தான் கந்தசாமி.

"என்ன முனியம்மா வயசுப்பொண்ணு இப்படியா சிரிக்கிறது!" என்று அன்போடு கடிந்தாள் முத்தம்மாள்.

கந்தசாமி பல்லைத் தேய்த்துப் பலகாரம் அருந்தினான். உடை மாட்டிக் கொண்டிருக்கையில் தருமலிங்கம் எதிரே வந்து நின்று கொண்டார்.

"என்னமோ கந்தசாமி, நீ 'முனியம்மாளைப் பார்க்கணும், கொண்டு வந்து விடச் சொல்லு'ன்னு சொன்னியாம். நானும் அழைத்து வந்து விட்டேன். அடுத்த மாசமேகூட முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம்."

கந்தசாமி கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டு முத்தம்மாளை ஒரு தடவை முறைத்துப் பார்த்தான்.

"இப்படி வாங்க மாமா, இப்ப தம்பி அவசரமாக உத்தியோகத்துக்குப் போவுது. அப்புறம் சாவகாசமாகப் பேசலாம்" என்று நிலைமையைச் சமாளித்தாள் முத்தம்மாள்.

"இருக்கட்டும் பார்க்கிறேன்!" என்று மனத்துக்குள் கருவிக்கொண்டே வெளிக் கிளம்பினான் அவன்.

டைமண்ட் பூங்காவைத் தாண்டித்தான் அவன் ஸ்டேஷனுக்குச் செல்ல வேண்டும். மரங்களின் சின்னஞ்சிறு கிளைகளில் உட்கார்ந்து உல்லாசமாக ஊஞ்சலாடிக் கொண்டிருந்த மைனாக் குருவிகள் இன்னிசையாகப் பாடிக் கொண்டிருந்தன. ஆனால் கந்தசாமியின் மனம் அந்தப் பட்டிக்காட்டு முனியம்மாளின் தோற்றத்தை நினைத்து நினைத்துப் படாதபாடு பட்டுக்கொண்டிருந்ததால் எதிரே நின்றுகொண்டிருந்த சிங்காரியை அவன் கவனிக்கவில்லை.

"ஏய்! மனுஷங்க நிற்கிறது கூடக் கண்ணுக்குத் தெரியல்லே?"

கந்தசாமி திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான். எதிரே மரத்தின்கீழ் அழகி ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். (தொடரும்)

# கோலாட்டம்

நா. பார்த்தசாரதி

ஐப்பசி மாதக் கடைசிப் பருவம். மழை தூறிக் கொண்டிருந்தது. அறையினுள் அமர்ந்து எழுதிக் கொண்டிருந்தேன். எழுதுவதற்கு இதமான சூழ்நிலை. எழுதிக் குவித்த தாள்கள் மேஜையின்மேல் குவிந்து கிடந்தன. தடங்கலில்லாமல் எழுத்து வளர்ந்து கொண்டிருந்தது. இந்த மழைக் காலத்தைப்போல், எழுத்தாளனுக்கு வசதியான காலம் வேறு இருக்க முடியாது. வெளியிலிருந்து தேடி வருகிறவர்கள் இருக்க மாட்டார்கள். வெளியில் புறப்பட்டுச் செல்லவும் தோன்றாது.

இவ்வளவு அருமையான வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்த மழையை வாழ்த்திக் கொண்டே இலக்கியப் படைப்பை நடத்திக் கொண்டிருந்தேன். பத்திரிகை ஆசிரியர் 'கெடு' வைத்துவிட்டார். இன்னும் பதினைந்து நாட்களில் அந்த நாவலை முழுமையாக முடித்துக் கொடுக்க வேண்டும். இதோ அவருடைய அவசரக் கடிதம்கூட மேஜைமேல் கிடக்கிறது. எந்தக் காரியத்தையுமே சொந்தமாக நன்கு உணர்ந்து செய்வதைக் காட்டிலும் இன்னொருவர் பின்னிருந்து தூண்டிக் கொண்டிருந்தால் வேகம் ஏற்படத்தான் செய்யும்! அந்த வேகத்தில் எதையும் மறந்து, எதற்கும் துணிந்து, செயல்படும் ஒருவித முனைப்பு உண்டு. அத்தகைய முனைப்போடு குனிந்த தலை நிமிராமல் வெள்ளைக் காகிதத்தில் கற்பனையை வளர்த்து, உருவாக்கிக்கொண்டிருந்தேன். ஆற்று வெள்ளம் போல் கதை போய்க் கொண்டிருந்தது. மழையோடு மழையாக நனைந்து கொண்டே தெருவில் என் வீட்டு வாசலில் பத்துப்



பன்னிரண்டு பெண்கள் கோலாட்டம் போட வந்து சேர்ந்தார்கள். நான் உட்கார்ந்து எழுதிக்கொண்டிருந்த அறையின் ஜன்னல் தெருவை ஒட்டி அமைந்திருந்தது.

குனிந்து எழுதிக் கொண்டிருந்தவன், பட்டுப் பாவாடைகளின் சலசலப்பு, வளையல்களின் ஒலி, மல்லிகைப் பூவின் நறுமணம்—இவற்றால் கவரப்பட்டுத் தலை நிமிர்ந்தேன். ஜன்னலுக்கு வெளியே தெருவோரமாக அப்பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஏறக்குறைய அத்தனை பேருமே பெதும்பைப் பருவத்துப் பெண்கள்தாம். அவர்களுடைய வளை குலுங்கும் இளம் கரங்களில், பச்சை, சிவப்பு, நீலம், மஞ்சள் என்று பல நிறக்



கோலாட்டக் குச்சிகள் காட்சியளித்தன. வட்டமாக ஒரு ஒழுங்கில் நின்று கோலாட்டம்போடத் தயாராகி விட்டார்கள். மழை அவ்வளவாக வலுத்துப் பெய்யவில்லை. தெருவில் அது ஒரு மையமான இடம். கழைக் கூத்தாடி முதல், புடவை ஏலம் போட வருகிற துணி வியாபாரி வரையில் தொழிலைத் தொடங்குவது அந்த இடம்தான். கோலாட்டம் போட வந்த பெண்களும் தெருவுக்கு மையமான அந்த இடத்தைத் தேடிக்கொண்டு வந்துவிட்டார்கள். இனி நான் எழுதி உருப்பட்டாற் போலத்தான்.

இதோ அவர்களுடைய கோலாட்டமும் தொடங்கி விட்டது. குச்சிகள் அடிபடும் ஓசை; கும்பலாகச் சேர்ந்து பாடும் பாட்டின் ஒலி; இரண்டும் செவிகளில் புகுந்து கவனத்தைக் கவர்ந்தன.

கால்மணி யாயிற்று, அரை மணி யாயிற்று; கோலாட்டம் நிற்கிற வழியாகக் காணோம். மழையும் நின்று விட்டதால் அந்தப் பெண்கள் உற்சாகம் அடைந்து விட்டனர். ஆளுக்கு ஒரு பாட்டு பாடிக் கொண்டு சிரிப்பும், கேலிப் பேச்சுமாகக் கும்மாளமிடத் தொடங்கி விட்டனர். எழுத்து துப்புரவாக ஓடவில்லை. பேனாவை மூடி மேஜைமேல் வைத்தேன். எழுதியும் எழுதாமலும் தாறுமாறாகக் கிடந்த காகிதங்களை அடுக்கி வைத்துவிட்டு மறுபடியும் ஜன்னலுக்கு வெளியே பார்த்தேன். ஆத்திரம் பற்றிக்கொண்டு வந்தது. முன்பு பத்துப் பன்னிரண்டு பெண்கள் நின்ற இடத்தில் இப்போது ஏறக்குறைய இருபது பெண்களுக்கும் மேலாக நின்று கொண்டிருந்தனர். கோலாட்ட ஒலியும், பாட்டொலியும் அவர்களின் தொகைக்கேற்ப அதிகரித்திருந்தன.

பலத்த ஓசை உண்டாகும்படியாக உட்கார்ந்திருந்த நாற்காலியைப் பின்னுக்கு நகர்த்திவிட்டு எழுந்திருந்தேன். வேகமாக நடந்து தெருவில் இறங்கினேன். "இந்த இடம்தான் உங்களுக்கு அகப்பட்டதோ? எதற்காக என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ளுகிறீர்கள்? நீங்கள் கோலாட்டம்



"இந்த சினிமாவை வடிகட்டின முட்டாள் தான் பார்க்கணும்........."

"அது உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"நான் நேற்று பார்த்து விட்டு வந்து தானே சொல்கிறேன்!........."

---

போடவில்லை என்று இங்கே யார் ஏங்கி அழுதார்கள்? பேசாமல் இப்போதே இங்கிருந்து போகிறீர்களா? தண்ணீரைக் கொண்டு வந்து கொட்டட்டுமா?"

தெருவில் போய் நின்றுகொண்டு அதட்டிக் கூப்பாடு போட்டேன். என் சத்தம் அவர்களிடையே அசாதாரணமானதொரு அமைதியை உண்டாக்கியது. கோலாட்டக் குச்சி ஒன்றோடொன்று அடிபடும் ஓசை நின்றது. பாடிக்கொண்டிருந்த வாய்கள் அடைத்துப் போயின. அந்தப் பெண்கள் மிரண்டுபோய் என்ன செய்வதென்று தெரியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

"நீங்கள் போடுகிற சத்தத்தில் உள்ளே உட்கார்ந்து ஒரு வரிகூட எழுத முடியவில்லை. இந்த இடம்தான் உங்களுக்கு அகப்பட்டதா? வேறெங்கேயாவது போகக்கூடாதோ?"

தங்களுக்குள் கசமுசவென்று மெல்லிய குரலில் ஏதோ பேசிக் கொண்டார்கள் அந்தப் பெண்கள். இரண்டொரு சொற்கள் என் செவிகளிலும் அரைகுறையாக விழுந்தன.

"அடியே! மாமா கதை எழுதுகிறார் போல் இருக்கிறதடி."

"நாம் இங்கிருந்து வேறே எங்கேயாவது போய்விடலாமடி."

"வழக்கமாகக் கோலாட்டம் போடுகிற இடத்தைவிட்டுவிட்டால் கூட்டம்கூடாதே?" —இப்படி இன்னும் பல குரல்கள் என்னென்னவோ தங்களுக்குள் பேசிக்கொண்டன.

அந்தக் கூட்டத்தில் உயரமாக நீலச் சிற்றுடை அணிந்து கொண்டிருந்த ஒரு பெண் தயங்கித் தயங்கி நடந்து செருக்கும் பார்வையோடு முன்னால் வந்து நின்றாள். அவள் தான் அங்கிருந்த சிறுமிகளுக்குள் பெரியவள். கோலாட்டத்துக்கு வந்திருந்த பெண்களுக்கெல்லாம் தலைவியைப்போலத் தோன்றினாள்.

"மாமா! கோபித்துக் கொள்ள மாட்டீர்களே? இன்றைக்குத்தான் நல்ல நாள்பார்த்து முதல் முதலாகக் கோலாட்டம் தொடங்குகிறோம். காலையிலே பகவனுக்கு மண் எடுத்தாயிற்று. வந்து......வந்து......வருஷா வருஷம் வழக்கமாக இந்த இடம்தான்......"

"இதோ பார்! நீங்கள் மண் எடுத்தால் என்ன? கல்லெடுத்தால் என்ன? அதனால் எனக்கொன்றும் ஆகப் போவதில்லை. இந்தக் கெஞ்சுதலுக்கெல்லாம் மசிகிற பேர்வழி நான் இல்லை. மூச்சு விடாமல் இங்கிருந்து போய் விடவேண்டும்! இல்லாவிட்டால்......?"

அந்தப் பெண் தலையை நிமிர்த்தி இமைக்காமல் என் முகத்தை உற்றுப் பார்த்தாள். பளிங்கு வட்டத்தில் பதித்த கருநாவற் கனிகளைப் போன்ற அவள் விழிகள் என்னை ஊடுருவின.

"என்ன, முறைத்துப் பார்க்கிறாய்.?] தலையைக் கிள்ளி விடுவாயோ?"

"இங்கிருந்து நாங்கள் போகாவிட்டால் என்ன செய்வீர்களோ?"—அந்தப் பெண் திடமான குரலில் என்னைக் கேட்டாள். பின்னாலிருந்து வேறு சில குரல்களும் அவளுடன் ஒத்துப் பாடின: "அப்படிக் கேளடி. சொல்கிறேன். இந்த மாமா என்னவோ நம்மை ரொம்பத்தான் மிரட்டுகிறார்!"

"நாம் இங்கேயே கோலாட்டம் போடுவோம். இவர் என்னதான் செய்ய முடியுமென்று பார்த்து விடுவோமே!"

"வருஷத்துக்கு ஒரு தடவை வருகிற நல்ல காரியம்? இதற்குக் கூட இப்படியெல்லாம் வம்பு செய்கிறாரே!"

இடையில் அந்தக் கூட்டத்திலேயே வயதில் சிறியவளும் மழலை மாறாத பேச்சையுடையவளுமான ஒரு சிறுமி முகத்தை அழகு காட்டும் பாவனையில் வைத்துக் கொண்டு எனக்கு எதிரே வந்தாள். "ஐயே! நாங்க கோலாட்டம் போடுகிறதனாலேதானே மழை பெய்யறதாம்! இல்லாவிட்டால் மழை பெய்யுமோ? மழை பெய்யாட்டா வயலெல்லாம் விளையாதே..." என்று மழலைச் சொற்களைக் குவிந்த சிறு உதடுகளிலிருந்து குத்திக் காட்டும் தோரணையில் வெளியிட்டாள்.

உடனே கொல்லென்ற சிரிப்பொலி எழுந்தது? அத்தனை பெண்களும் ஏதோ பெரிய வேடிக்கையைக் கண்டுவிட்டவர்கள் போலச் சிரித்தனர். அந்தச் சிரிப்பொலி என் உடலின் ஒவ்வோர் அணுவிலும் நெருப்பைப் பாய்ச்சினாற் போலிருந்தது.

வீட்டுக்குள் வருவோர் கால் கழுவிக் கொண்டு தூய்மையாக வருவதற்காக என் மனைவி வழக்கமாக வாசற்படிக்கு அருகில் ஒரு பெரிய வாளிநிறையத் தண்ணீர் கொட்டி வைத்திருப்பாள். தெருவில் இறங்கி நின்று கொண்டிருந்தவன் ஆத்திரத்தோடு வாசற்படிக்குப் பக்கத்தில் திரும்பிப் பார்த்தேன். கொஞ்சம் கூடக் குறையாமல் வழிய வழியத் தண்ணீரோடு வாளி அங்கே வைக்கப்பட்டிருந்தது. குபீரென்று பாய்ந்து அந்த வாளியைக் கையில் எடுத்தேன். அவர்கள் சிரித்த ஒலி இன்னும் அடங்கக்கூட இல்லை.

# போர்ஹான்ஸ்

## டூத்பேஸ்ட்டை

## எண்ணற்ற ஜனங்கள் ஏன்

## விரும்புகிறார்கள் என்பதற்கான சில

# முக்கிய காரணங்கள்

**1 ஈறுகளின் ஆரோக்கியம்:** ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாகத் தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப்படுத்திய பல் நோய்களிலிருந்து விசேஷ பாதுகாப்பு அளிக்கும் துவர்ப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து, சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

**2 ஆரோக்கியமான பற்கள்:** விசேஷ துவர்ப்புப் பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்குக் காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், முற்றிலும் திடமாயும், ஆரோக்கியமாயும் பற்களுள்ள 15-லிருந்து 93-வயதிற்குட்பட்டவர்களும் கலந்து கொண்டனர். தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உபயோகித்து வருவதே காரணமென அவர்கள் யாவரும் கூறினர்.

**3 வாய்க்கு நறுமணம்:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி, உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய் நாற்றத்தை அகற்ற உங்கள் நாக்கும், மேல் வாயும்கூட சுத்தமாக இருக்கவேண்டுமென்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின்மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட்டை வைத்து, ஒரு டூத்பிரஷ் அல்லது விரலினால் மிருதுவாய் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத் துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.

**4 ஒளிவீசும் புன்னகை:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் பற்களின் எனாமல் சிதைவடையாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பது போல், சுத்திகரிக்கும் குணம்வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்டாகும். பற்களின் ஆரோக்கியத்தைத் தவறாமல் பேணிவருவதன்மூலம், உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட்டை தவறாமல் உபயோகியுங்கள்.

ஒரு பல் வைத்தியரால்
தயாரிக்கப்பட்டது



GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD

H-114

"என்ன செய்வேனு? இதோ தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்லிக்கொண்டே ஒரு வாளித் தண்ணீரையும் எதிரே நின்று கொண்டிருந்த அந்தப் பெண்ணின் தலையில் வீசிக் கவிழ்த்தேன்.

"ஓடுங்கள்! இன்னும் ஒரு விநாடி இங்கு நின்றீர்களோ, உங்கள் எல்லோர் தலைக்கும் இந்த மாதிரி அபிஷேகம்தான் கிடைக்கும்."

என் எச்சரிக்கையைக் கேட்டும் ஒரு பெண்ணாவது நகரவில்லை. அப்படியேதான் நின்று கொண்டிருந்தார்கள்! அந்தத் துணிச்சல்காரி சொட்டச் சொட்ட நனைந்து போய் அப்போதுதான் குளத்தில் மூழ்கி எழுந்திருந்தவள் மாதிரி நின்றாள்! அதே வெட்டுப் பார்வை! அதே அழுத்தம்! குளிர்ந்த தண்ணீர் பட்ட உடல் வெடவெடவென்று நடுங்கியது. கையில் பிடித்துக் கொண்டிருந்த சிவப்பு நிறக் கோலாட்டக் குச்சிகள் நடுக்கத்தினால் தாமாகவே ஒன்றோடொன்று மெதுவாக அடித்துக் கொண்டன. அவள் பார்வை என் முகத்தை விட்டு விலகவே இல்லை. விருட்டென்று பின்னால் திரும்பினாள். "அடியே! ஒருத்தியாவது நகராதீர்கள். எல்லோரும் இப்படி வரிசையாக வந்து முன்னால் நின்று கொள்ளுங்கள். இந்த மாமாவால் எத்தனை வாளி தண்ணீர் தூக்கிக் கொண்டு வந்து கொட்ட முடியுமோ கொட்டட்டும். பார்த்து விடலாம். நமக்கும் பிடிவாதம் பிடிக்கத் தெரியும்." — ரோஷம் நிறைந்த குரலில் அவள் இப்படிக் கட்டளை விட்ட போது மளமள வென்று அத்தனை பெண்களும் முன்னால் வந்து நின்றனர்.

எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு ஓர் அளவேயில்லை! 'இந்த ஒரு பெண்ணின் வார்த்தைக்கு இவர்களிடையே இவ்வளவு சக்தியா? என்ன பிடிவாதம்! எவ்வளவு நெஞ்சழுத்தம்? கேவலம், பேதைப் பருவத்து அறியாமை மாறாத இந்தப் பிஞ்சு மனங்களில் கூட இப்படி ஒரு வைராக்கியமா?'

அந்தப் பெண்களிடம் சமாதானமாகப் பணிந்து போகவும் ஆண்மையும் கௌரவமும் இடம் அளிக்கவில்லை. "இதோ பார்! இந்தச் சண்டித்தனத்துக்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன். பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சாது. மறு பேச்சுப் பேசாமல் இங்கிருந்து போகிறீர்களா? அல்லது உங்களுக்கு அடி உதை வேண்டுமா?" என்று அதட்டினேன்.

"முடிந்தால் அடியுங்கள்; உதையுங்கள்; இன்றைக்கு மட்டுமில்லை; இனிமேலும் பத்தாவது நாள் பசலைக் குளத்தில் போட்டு ஜோத்திரை முடிகிறவரையில் இந்த இடத்தில்தான் நாங்கள் கோலாட்டம் போடப் போகிறோம்!"—அந்தப் பெண்தான் திமிராகப் பேசினாள். பேசினதோடு நிற்கவில்லை. உடன் நின்றவர்களை மறுபடியும் முன் போலவே வட்ட வியூகத்தில் நிறுத்திக் கொண்டு பிழியப்பிழிய நனைந்த உடம்புடனே கோலாட்டம் போடத் தொடங்கி விட்டாள். அந்தப் பெண் கோலாட்டக் குச்சிகளை அடிப்பதாகத் தோன்றவில்லை. என் நெஞ்சையே அடித்து நொறுக்குவதுபோல் தோன்றியது.

"ஊரோடு இவ்வளவு கூப்பாடு போட்டுக் கொண்டிருக்கிறீர்கள், வாசலில்?—எழுதுவதையும் விட்டுவிட்டுச் சண்டை போடுகிறீர்களா?" என்று கேட்டுக்கொண்டே என் மனைவி உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்தாள்.

"நீயே வந்து பார் இந்த அநியாயத்தை! உள்ளே உட்கார்ந்து நிம்மதியாக ஒரு வரிகூட எழுத முடியவில்லை. அந்த நாவலை இன்னும் நாலு நாட்களில் அனுப்பியாக வேண்டும். கோலாட்டம் போடுகிறோம் என்று இந்தப் பெண்கள் அப்போதிருந்து கூச்சல் போட்டு எழுத முடியாமல் சதி செய்கிறார்கள். இங்கேதான் வழக்கமாம். அதனால் இங்கேதான் போடுவார்களாம். நீயாவது கொஞ்சம் வந்து சொல்லேன். உன் வார்த்தையையாவது கேட்கிறார்களா, பார்ப்போம்!"— நான் அவளைச் சமாதானத்துக்கு அழைத்தேன். பெண்ணுக்குப் பெண் சொன்னால் சமாதானமாகக் கேட்டுக் கொண்டு வேறு இடத்துக்குப் போய் விடுவார்கள் என்பது என் நினைப்பு. ஆனால் அவள் வாசலுக்கு வந்ததும் வராததுமாக அந்தப் பெண்கள் ஓடி வந்து அவளைச் சூழ்ந்து கொண்டு என்னைப் பற்றி முறையிடத் தொடங்கி விட்டார்கள்.

"மாமீ! மாமீ! உங்கள் வீட்டு மாமா என் மேலே ஒரு வாளி நிறையத் தண்ணீரை அப்படியே கொட்டி விட்டார்" என்று நனைந்து போயிருந்த தன் உடம்பையும் காலியாயிருந்த வாளியையும் சுட்டிக் காட்டினாள் அந்தத் துடுக்குக்காரப் பெண்.

"மாமீ! மாமீ! நீங்க சொல்லுங்க...... நாங்கள் கோலாட்டம் போடுகிறதுனாலே தானே மழை பெய்கிறது?" என்று விரியாத மாதுளை மொட்டுக்களைப் போன்ற உதடுகள் குவிய மழலை மிழற்றியது அந்தக் குழந்தை.

"வழக்கமாக இங்கேதானே கோலாட்டம் போடுவோம்? உங்களுக்குத் தெரியாதா, மாமீ?" என்று அனுபவ பாத்தியதை கொண்டாடினாள் மற்றொரு சிறுமி. அவ்வளவையும் கேட்டு விட்டு என் மனைவி என்னையே திருப்பிக் கொண்டாள்:

"இதென்ன கூத்து? உங்களுக்கே நன்றாயிருக்கிறதா இது? இந்தப் பெண் தலையிலே ஒரு வாளி பச்சைத் தண்ணீரைக் கவிழ்த்திருக்கிறீர்களே? கோபம் வந்தாலும் மனிதனுக்கு இப்படியும் நிதானம் தெரியாமல் வருமா?"

"என் எழுத்து வேலையைக் குட்டிச்சுவராக்கி விட்டார்களே! அதில் இந்தப் பெண் தான் ரொம்பப் பொல்லாதவள். மற்றவர்களையெல்லாம் தூண்டிவிடுகிறவளும் இவள் தான். எனக்கு என்ன கோபம் வருகிறது தெரியுமா?" என்றேன்.

"போதுமே சமர்த்து! இவளுடைய அப்பா அம்மா தேடிக் கொண்டு வந்து, 'ஏனய்யா நீ ஒரு மனுஷன்தானா? இப்படிச் செய்திருக்கிறாயே?' என்று கேட்டால் தெரியும். வழியை விடுங்கள்; உள்ளே போய் அவளுடைய தலையைத் துவட்டி வருகிறேன்!" என்றாள்.

அவளைத் தொடர்ந்து தெருவில் நின்று கொண்டிருந்த அத்தனை சிறுமிகளும் உள்ளே நுழைந்து விட்டனர்.

'சரி! இனிமேல் அவள் பாடு! எப்படியாவது சமாதானமாகச் சொல்லி அந்தப் பெண்களை வேறு இடத்தில் போய்க் கோலாட்டம் போடச் செய்து விடுவாள்' என்றெண்ணிக் கொண்டு அறைக்குள் நுழைந்தேன். எழுதுவதற்காகப் பேனாவைக் கையில் எடுத்தேன்.

ஆனால், அதற்குள் வீட்டின் கூடத்தி லிருந்தே கோலாட்டச் சத்தம் கிளம்பியது. "கோலே; நல்ல கோலே" என்று பாட்டொலியும் எழுந்தது. கணீர் கணீர் என்று குச்சிகள் அடிபடும் ஓசையோடு என் மனைவியின் குரல் பாடியது காதில் விழுந்தது.

எனக்கு இப்போது வந்த ஆத்திரம் சொல்லி மாளாது. பேனாவை மூடி மேஜைமேல் எறிந்து விட்டு உள்ளே போனேன். உள்ளே கூடத்தில் கண்ட காட்சி என் கோபத்தைப் பன் மடங்கு வளர்த்தது. தெருவில் எந்த வியூகத்தில் நின்றார்களோ, அதே வியூகத்தில் நின்று அந்தப் பெண்கள் கூடத்தில் கோலாட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஆட்டத்துக்குப் பதம் பாடுகிறவள் போல் என் மனைவி தனியே நாற்காலியில் உட்கார்ந்து பாடிக் கொண்டிருந்தாள்.

"இதென்ன? வீடா? சத்திரமா? நான் இந்த நாவலை எழுதவிடக் கூடாதென்ற எண்ணமா? இவர்கள் வீதியில் கோலாட்டம் போட்டாலே எழுதுவதற்கு இடையூறாக இருக்கிறது. நீ என்னடாவென்றால் வீட்டுக்குள்ளேயே...?"

"நிறுத்துங்கள்! உங்களுக்கு வருஷம் முந்நூற்றறுபது நாளும்தான் ஏதாவது எழுதிக் கொண்டே இருக்க வேண்டும். அதற்காக ஊர், உலகத்தில் ஒரு நல்லது நடக்காமல் போய் விடுமா? இன்னும் பத்து நாட்களுக்கு இவர்கள் தெருவில் நம் வீட்டுக்கு அருகே தான் கோலாட்டம் போடப் போகிறார்கள். உங்களுக்காக ஊர் வழக்கம் நின்று விடாது. நீங்கள் வேண்டுமானால் எங்காவது கண் காணாமல் தோப்பு, துரவு என்று ஊருக்கு வெளியே போய் எழுதிக் கொண்டிருங்கள்."

"ஓகோ! உரிமையைவிட வழக்கத்துக்கு அவ்வளவு உறவா?"

"உங்கள் தத்துவப் பேச்செல்லாம் எனக்குப் புரியாது. இந்த இடத்தில் நீங்கள் விட்டுக் கொடுத்துத்தான் ஆக வேண்டும்!"

பேசாமல் அறைக்குத் திரும்பி வந்தேன். உள்ளே மறுபடியும் கோலாட்ட ஓசை கிளம்பியது. ஒரு தபால் கார்டை எடுத்தேன்:

"அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம். கடுமையான நிமோனியாக் காய்ச்சலால் வேதனைப்பட்டுக் கொண்டிருப்பதால் உங்களிடம் ஒப்புக் கொண்டபடி நாவலை முடித்து அனுப்ப இயலாமற் போய் விட்டது. இன்னும் பதினைந்து நாட்கள் அவகாசமளித்தால் ஒரு வேளை முடித்து அனுப்பி விடலாமென்று எண்ணுகிறேன். சிரமத்துக்கு மன்னிக்கவும்."

முகவரி எழுதிய பின்பு கடிதத்தை நாலு வீடு தள்ளித் தெருவில் ஒரு வேப்பமரத்தடியில் இருந்த தபால் பெட்டியில் கொண்டு போய்ப் போட்டு விட்டு வந்தேன். மனைவி உள்ளே இருந்து வந்தாள்.

"உங்களைத்தானே?......"

"என்ன?"

"ஒரு ஐந்து ரூபாய் பணம் வேண்டும்!"

"எதற்காக?"

"பத்து நாட்களும் இந்தப் பெண்கள் நம் வீட்டு வாசலில்தானே கோலாட்டம் போடப் போகிறார்கள். கன்னிப் பெண்களை வெறுங் கையோடு அனுப்பலாகாது. தினம் கொஞ்சம் கல்கண்டும் வெற்றிலை பாக்கு, மஞ்சளும் வைத்துக் கொடுக்கலாமென்றிருக்கிறேன்."

"சரி! இந்தா ரூபாய்......" மறு பேச்சுப் பேசாமல் டிராயரைத் திறந்து ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினேன். அவள் வாங்கிக் கொண்டாள்.

"கோபமா உங்களுக்கு?"

"இல்லை!" என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி முடித்தேன். அவள் உள்ளே சென்று விட்டாள்.

காரியத்தைச் சாதிக்கும் திறன், முரண்டு, பிடிவாதம், இதெல்லாம் வயதும், அநுபவமுள்ள பெரியவர்களால்தான் முடியுமென்று நீண்ட நாட்களாக ஒரு எண்ணம் எனக்கு இருந்தது. இப்போது அந்த எண்ணம் உள்ளே பன்னிரண்டு பெண்கள் இருபத்து நான்கு கோலாட்டக் குச்சிகளில் எழுப்பிய ஒலியில் சிறிது சிறிதாக உடைந்து கொண்டிருந்தது!

## தெய்வத் திருப்பணி

"தெண்ணீர் வயல் தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து" என்று ஆன்றோரால் சிறப்பிக்கப்பட்ட நம் நாட்டில் பல சமயப் பெரியார்களும், கவிஞர்களும் தோன்றி அழியாப் புகழ் பெற்றுள்ளனர். அவ்வரிசையில் சிறந்து விளங்குபவர் அடையபலம் என்ற ஊரில் அவதரித்த ஸ்ரீ அப்பைய தீட்சிதர் அவர்கள் ஆவர். அவரது பிறப்பின் சிறப்பை "சிவ ரகஸ்ய மஹோநிகாசம்" என்ற உயர்ந்த நூலில் காணலாம். சைவ சமய சிகாமணிகளால் போற்றப் படும் சிவார்க்கமணி தீபிகை, சதுர்மத சாரசங்கிரகம், பரிமளம் முதலிய நாற்று நாலு சிறந்த நூல்களுக்கு ஆசிரியரான அப்பைய தீட்சிதர் வழிபட்டு வந்த அடையபல ஆலயம் நாளுக்கு நாள் சிதிலமடைந்து வருகிறது. அந்தத் திருக் கோயிலைப் புதுப்பித்து, கும்பாபிஷேகம் செய்யும் திருப்பணியை மேற்கொள்வதற்காக, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியுடன் அடையபலம் ஸ்ரீ பார்வதி அம்பாள், கால கண்டேசுவர ஆலய ஜீரணோத்தாரண கமிட்டி ஒன்று அமைக்கப் பட்டிருக்கிறது. கோவில் ஜீரணோத்தாரணக் கமிட்டியார், தீட்சிதரின் ஜெயந்தியைக் கொண்டாடுவதுடன், அவரது நூல்கள் அடங்கிய புத்தகசாலை அமைத்தல் முதலிய புனித பணிகளுக்காகப் பத்தாயிரம் ரூபாய் செலவாகும் என்று திட்டமிட்டிருக்கிறார்கள். அத்திருப்பணிகளுக்குப் பொருள் உதவி செய்ய விரும்பும் ஆஸ்திகப் பெருமக்கள் எம். எஸ். சாம்பமூர்த்தி சாஸ்திரிகள், அட்வொகேட், ஆரணி, வட ஆற்காடு ஜில்லா என்ற விலாசத்துக்குத் தங்கள் நன்கொடைகளை அனுப்பி வைக்கலாம்.



**2 வழிகளால் நரையை**



**ஒழிக்கலாம்...**

'சிரசாஸனம்' ஒழுங்காகச் செய்துவந்தால், நரைமயிர் நாளடைவில் கருப்பாக மாறும் எனச் சொல்லப் படுகிறது. ஆனால் அதைப் பழக, ஓய்வு நேரமும், மன நிம்மதியும் அவசியம்.

தற்காலத்தில் "லோமா"வைத் தவருமல் உபயோகிப்பதுவே, நரையை ஒழிக்க நிச்சயமானதும், பத்திரமானதும், சுலபமானதுமான வழியாகும்.



"லோமா" இப்பொழுது திருட இயலாத மூடியுள்ள பிரத்தியேகமாகத் தயாரித்த பாட்டிலில் வழங்கப்படுகிறது.






லோகல் ஏஜெண்டுகள் : எம். எம், கம்பாட்வாலா, ஆமதாபாத்-1

ஏஜெண்டுகள் : வி. நரோட்டம் அண்ட் கோ., பம்பாய்-2 போன் : 30575

சென்னை ஏஜண்டுகள் : ஜே பாலபாய் அண்டு கம்பெனி 260, எஸ்பிளனேட், மதராஸ்-1

இலங்கை ஏஜண்டுகள் : சிர்குல் கதிர் & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

# சத்தியத்தில் முடிந்தது

தூக்கம் கலைந்த பிறகும் எழுந்திருக்க மனமில்லாமல் படுக்கையிலேயே புரண்டு கொண்டிருந்தாள் பூங்கோதை. கடிகாரத்தில் மணி ஆறு அடித்ததும் ஒருவித பரபரப்புடன் எழுந்து உட்கார்ந்தாள். அப்பொழுதும் கண்களைத் திறக்கவில்லை. எதிர்ச் சுவரில் மாட்டியிருந்த முருகன் படத்தைப் பார்த்துக் கைகளைக் கூப்பி அஞ்சலி செய்தவாறு தன் அழகிய நீண்ட இமைகளை மெள்ள விரித்தாள். சரிந்திருந்த மேலாடையைச் சரி செய்து கொண்டு, படுக்கையைச் சுருட்டி வைத்து விட்டு நிலைக் கண்ணாடியின் முன்பு வந்து நின்றாள். தாறுமாறாகக் கலைந்து நெற்றியிலே புரண்டு விளையாடிய தன் சுருண்ட கேசக் குஞ்சுகளைக் கையினாலேயே கோதி விட்டுக் கொண்டாள். பிறகு பல்பொடியை எடுத்துக் கொண்டு பின் பக்கம் வேகமாகச் சென்றாள்.

அவள் மனம் ஒரு நிலையில் இல்லாமல் பறந்தது. மேலோங்கி நின்றது இன்பமா, பயமா என்பதை அவளாலேயே சரியாக நிச்சயிப்பதற்கு முடியவில்லை.

தன்னுடைய வெகு நாளைய ஆசை அன்று பூர்த்தியாகப் போகிறதென்ற சந்தோஷம்.

ஆனால், அதை அடையும் வழியோ?......

அதுதான் அவளுக்குத் திருப்தியளிக்கவில்லை. குழாய்க்குப் பக்கத்திலிருந்த துணி துவைக்கும் கல்லில் உட்கார்ந்து பல்லைத் தேய்த்தவாறு பலவிதமாக எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள்.

இப்பொழுதும் ஒன்றும் மோசமில்லை. எண்ணத்தைக் கைவிட்டு விடலாமா என்று யோசித்தாள். ஆனால் அவ்வளவு எளிதில் ஆசை விட்டுக் கொடுக்கிறதா?......

'முன் வைத்த காலைப் பின் வைப்பதா?' என்று தைரியம் அளித்தது சபல சித்தம்;

பூங்கோதை பதினைந்தாவது பிராயத்தை நெருங்கிக்கொண்டிருந்தாள். பாண்டி யாடும் சிறுமிகளின் கோஷ்டியிலும் சேர்க்க முடியாது; பருவப் பெண்களின் வரிசையிலும் அவளை நிறுத்த முடியாது. செவ் விதழ்களைக் குவித்து அவள் பேசும்பொழுது, மழலை மொழியும் ஒரு குழந்தையின் நினைவு தான் வரும். ஆனால் வாக்குச்

ஸ்ரீரங்கம் நரசிம்மன்



சாதுரியமோ!...பெரியவர்களையே திகைக்க வைக்கும் புத்திசாலித்தனம் நிறைந்திருக்கும் அவள் பேச்சில்!

முகத்தைக் கழுவிக் கொண்டு தாவணியால் நன்ருய்த் துடைத்தபடி உள்ளே வந்தாள்.

அடுப்படியில் ஏதோ காரியமாயிருந்தாள் அவள் தாயார் சங்கரி. சங்கரிக்கு முப்பத்தாறு அல்லது முப்பத்தேழு வயதுதானிருக்கும். அதுவும் நாலைந்து வயதைக் குறைத்தே காண்பிக்கும் அவள் தோற்றம். அமைதி கலந்த ஒரு தெய்விக அழகு அவள் முகத்தில் குடிகொண்டிருக்கும். எப்பொழுது பார்த்தாலும் அப்பொழுதுதான் குளித்து விட்டு நெற்றிக்கு வைத்துக் கொண்டாற் போல முகம் பளிச்சென்றிருக்கும். ஐந்து வருஷங்களுக்கு முன்பே தலை பின்னிக் கொள்ளும் வழக்கத்தை விட்டு விட்டாள். நன்ருக வாரி முடிந்து கொள்வதுடன் சரி. நெற்றியில் இலேசாகத் திருநீறும் மத்தியில் குங்குமமும் அவளை சாக்ஷாத் சங்கரியாகவே தோற்றுவிக்கும். பார்ப்பவர் யாருக்குமே சட்டென்று ஒரு மரியாதை தோன்ருமல் இராது.

தாய்க்கு அருகில் வந்து சுவரில் சாய்ந்தபடி உட்கார்ந்தாள் பூங்கோதை. "எழுந்திருக்கவே ஏழு மணியாயிருக்கு..." என்று முணுமுணுத்தவாறே, ஒரு சிறு தட்டில் இரண்டு இடியாப்பத்தை வைத்துப் பூங்கோதையின் பக்கம் நகர்த்தினுள் சங்கரி. ஒரு தம்ளரில் காப்பியையும் எடுத்து வைத்தாள்.

"இன்று பௌர்ணமி தானேம்மா?"

"இருந்தால்...!"

"இன்று பள்ளிக்கூடம் ஏது அம்மா!"

இலங்கையில் பௌர்ணமி யன்று பள்ளிக்கூடங்களெல்லாம் விடுமுறை நாட்கள். பௌத்த மதத்தின் விசேஷ தினம். சிங்களவர்களின் பிரார்த்தனை நாள்.

"விடுமுறை நாளாயிருந்தால் நேரம் கழித்து எழுந்திருக்க வேண்டுமா?" என்று கேட்டாள் சங்கரி.

"ராத்திரி வெகு நேரம் படிச்சேனம்மா..."

"சரி, சரி; போய்க் குளி, போ!" என்று அசுவாரஸ்யமாகக் கூறி விட்டுத் தன் காரியத்தைக் கவனிக்கலாளுள் சங்கரி.

பூங்கோதை எழுந்திருக்காமல் தாயாரையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதைக் கவனித்த சங்கரி, "ஏன், இன்னுமென்ன?" என்ருள். பூங்கோதைக்கு விஷயத்தை எப்படி ஆரம்பிப்பதென்று புரியவில்லை.

"அம்மா..." என்ருள். மேற்கொண்டு பேச்சு வெளி வராமல் ஏதோ ஒன்று அடைத்தது. சங்கரியின் பார்வை மட்டும் அவள் பக்கம் திரும்பியது.

"ஒன்னுமில்லேம்மா; வந்து...பாவாடை மேலாக்கு எது வென்று......"

"எதையாவது கட்டிக் கொள்ளேன்... என்னவோ எதையும் அம்மாவைக் கேட்டுச் செய்வதைப் போலத்தான்..." என்று அலுத்துக் கொண்டாள் சங்கரி. பூங்கோதையின் முகம் சட்டென்று இறங்கி விட்டது.

"உன்னைக் கேட்காமல் எதையம்மா செய்தேன்?" என்ருள் பூங்கோதை, கோபித்துக் கொண்டாற் போல் முகத்தை வைத்துக் கொண்டு. அப்படிச் சொன்னுளே தவிர, உண்மையில் அப்பொழுது அவள் உள்ளத்தில் ஏதோ ஒன்று உறுத்தியது. குற்றமுள்ள நெஞ்சு இலேசாக அடித்துக் கொள்ளத் தொடங்கியது.

முதல் நாள் இரவு அவளும் சிவானந்தமும் பேசிக் கொண்டிருந்ததை அரைகுறையாகக்



கேட்டு விட்டுத்தான் அம்மா இப்படிச் சொல்லியிருக்கிறளோ...?

கண நேரத்துக்குள் பூங்கோதையின் சிந்தனை எங்கெல்லாமோ சென்று விட்டுத் திரும்பியது. 'சீ! எதார்த்தமாகச் சொன்னதுதான். இல்லாவிட்டால் இப்படியா சொல்லுவாள்? எப்பொழுதோ கண்டித்திருக்க மாட்டாளா?' என்று தன்னைத்தானே சமாதானம் செய்து கொண்டாள். முகத்தில் தோன்றிய கலவரத்தை மறைத்துக் கொண்டு மீண்டும் ''சொல்லம்மா......!'' என்றுள்.

'' என்ன கேட்கிறுய்?''

''பாவாடை மேலாக்கு எதுவென்று...''

''என்னவோ டஜன் கணக்கில் இருக்கிறுற் போலத்தான் எண்ணம்! இருக்கிறதோ மூன்று; அதுவும் இரப்பிலே ஒண்ணு. வேறு எதைத்தான் கட்டிக் கொள்வாய்?'' என்றவாறு புருவத்தை நெறித்தாள் சங்கரி.

'' அதில்லே, அம்மா! பட்டுப் பாவாடை கட்டிக் கொள்ளட்டுமா என்று...'' என்றுள் தயக்கத்துடன். பாவாடை என்றதுமே இதைத்தான் கட்டிக் கொள்ளச் சொல்லுவாளென்று அவள் எதிர் பார்த்தாள்.

சங்கரி, ஒன்றும் புரியாதவளையில் அவளைப் பார்த்து விட்டு, '' ஏன், இன்று என்ன விசேஷம்?'' என்றுள்.

பூங்கோதையின் உற்சாகம் இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. முகத்தை என்னவோ போல் வைத்துக் கொண்டு தாயாரை வெறித்துப் பார்த்தாள். சங்கரி சாவதானமாக, '' ஏன், நீ எங்கேயாவது போக வேணுமா?'' என்று பூங்கோதையைக் கேட்டாள்.

'' என்னம்மா இது?......ராத்திரி சொன்னேனே!''

'' ராத்திரி என்ன சொன்னே?'' எவ்வித உணர்ச்சியுமின்றிக் கேட்டாள் சங்கரி. சங்கரியின் சுபாவமே அதுதான். தனக்கு அவ்வளவாகத் திருப்தியளிக்காத விஷயத்தைச் சற்று மறந்தாற்போலவே இருப்பாள். எதிராளி அதைக் கொண்டே புரிந்து கொள்ள வேண்டும். பூங்கோதைக்கும் அது நன்றுய்த் தெரியும். எனவே விஷயத்தை எப்படித் திரும்பவும் ஆரம்பிப்பதென்று தெரியாமல் மௌனமாக உட்கார்ந்து கொண்டிருந்தாள். சங்கரி மீண்டும் கேட்டாள்.

''ராத்திரி என்ன சொன்னுய்?'' என்றுள்.

'' யசோதாவின் வீட்டுக்குப் போகணுமென்றேனே...?''

சங்கரி ஒரு கணம் பேசாமல் இருந்தாள். பிறகு '' பர்தேனியாவுக்கா போகப் போகிறுய்?'' என்று கேட்டாள்.

'' ம்................ ''

மேற்கொண்டு சங்கரி ஒன்றும் பேசவில்லை. வேறு பக்கம் திரும்பிக் கொண்டு தன் காரியத்தைக் கவனிக்கலானுள்.

குரலில் நிராசை தொனிக்க, ''ஏனம்மா, போக வேண்டாமா?'' என்றுள் பூங்கோதை. வேண்டாமென்று சொல்லத்தான் நினைத்தாள் சங்கரி. ஆனல் பூங்கோதை கேட்டவிதம் அவள் உள்ளத்தை அசைத்து விட்டது. 'பாவம்,

போய்விட்டுத்தான் வரட்டுமே!' என்று தீர்மானித்தவளாய், "சரி, இந்தத் தடவை போய் விட்டு வா. ஆனால், இதையே வழக்கமாக வைத்துக் கொள்ளாதே. சிநேகமெல்லாம் ஓரளவோடுதான் இருக்க வேண்டும். அதுவும் அப்பா ஊரில் இல்லாத சமயம், அவருக்குத் தெரியாமல் ஒரு இடத்துக்குப் போவது வருவதென்பது ரொம்பத் தப்பு..." என்றாள்.

அம்மாவின் அனுமதி என்னவோ கிடைத்து விட்டது. ஆனால் அந்த ஆனந்தத்தைப் பரிபூரணமாக அனுபவிக்கும் நிலையில் இல்லை பூங்கோதை. உள்ளம் ஒரு நிலையில் இல்லாமல் அடித்துக் கொண்டது. 'ஒரு வேளை அம்மாவுக்குத் தெரிந்து விட்டால்?' என்ற கேள்வி திரும்பத் திரும்ப அவள் இதயத்தின் அடித்தளத்திலே ஒலித்துக் கொண்டேயிருந்தது. ஒரு மங்கிய பய பீதியும் இனம் தெரியாத இன்ப உணர்ச்சியும் அவளைத் தலை நிலை இழக்கச் செய்தன. பூமியில் பாதம் பரவாமலேயே நடமாடினாள். தொட்டதிலெல்லாம் ஒரு அவசரமும படபடப்பும் ஏற்பட்டன.

குளித்து விட்டு வந்ததும் பெட்டியைத் திறந்து பாவாடை மேலாக்கை எடுத்தாள். கையகலம் ஜரிகை போட்ட நீலப் பட்டுப் பாவாடையும், ஆரஞ்சு நிற சில்க் தாவணியும் அவள் அழகை இன்னும் சோபிக்கச் செய்தன. என்றாலும் முகத்தில் சந்தோஷத்தின் உண்மையான தென்பு இல்லை. ஏதோ ஒரு கலவரமே குடிகொண்டிருந்தது. கண்ணாடி முன் வந்து நின்றுகொண்டு நெற்றிக்கு வைத்துக் கொண்டாள். கண்ணாடியில் அவள் முகத்துக்குப் பின்னால் இன்னொரு முகம் தெரிந்தது. — சிவானந்தம்! சட்டென்று திரும்பிப் பார்த்தாள். கண்களில் ஆச்சர்யம் படர அவளை விழுங்கி விடுபவன் போல் அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

சிவானந்தமும் பூங்கோதையைப் போல் இரண்டுங்கெட்டான். அதாவது புத்தி விசாலத்தில் சொல்லவில்லை, வயது விஷயத்தில் தான். வாலிபனென்றும் சொல்ல முடியாது; பாலகனென்றும் சொல்ல முடியாது. பதினாறு முடிந்து பதினேழாவது பிராயம் நடந்து கொண்டிருந்தது. அநேகமாக இந்தப் பிராயத்திலேயே சில பையன்களுக்கு முகத்தில் ஆண்மை தோன்றி விடுகிறது. கொஞ்ச காலத்துக்கு முன்பாக இருந்தால் இந்த வயதுக்குக் கல்யாணம்கூட ஆகியிருக்கும். ஆனால் நம் சிவானந்தத்தின் முகத்தில் இன்னும் அரும்பு மீசைகூட முளைக்கவில்லை. ஐந்தடி வளர்ந்திருந்தான். நல்ல புஷ்டியான தேகம். மாநிறம்தான். என்றாலும் முகத்தில் களை சொட்டும். சில சமயம் ஒன்றும் தெரியாத ஒரு குழந்தையைப் போலப் பேசுவான். சில சமயம் சகலமும் தெரிந்த பண்டிதனைப் போலப் பேசுவான். அவனிடம் ஒரு குணம்; நினைத்ததை அப்பொழுதே சாதித்துவிட வேண்டும். சாதிக்க வேண்டிய காரியத்தின் தரத்தைப் பற்றிய சிந்தனையெல்லாம் பிறகு தான் இப்பொழுதும் அப்படித்தான் ஒரு காரியத்தைச் செய்ய அவன் வந்திருக்கிறான்!

பூங்கோதையின் வீட்டுக்கு நாலைந்து வீடு தள்ளி இருக்கிறது அவன் வீடு. வீட்டுக்குச் செல்லப் பிள்ளை. குடும்பமும் நல்ல செல்வ நிலையில் இருந்தது.

பூங்கோதையின் வீட்டுக்கும் சிவானந்தத்தின் வீட்டுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. உறவு ஒன்றுமில்லை. ஆனால் உறவினர்களுக்கு மேலாகவே பழகி வந்தார்கள். சிவானந்தம் பெரும்பாலும் பூங்கோதையின் வீட்டிலேயே பொழுதைக் கழிப்பது வழக்கம். பூங்கோதையின் தாயார் சங்கரிக்கு அவனிடத்தில் எல்லையற்ற பாசம். அவனிடம் நல்ல மதிப்பும் வைத்திருந்தாள். கொஞ்சம் அவசரப் புத்திக்காரன் என்பதைத் தவிர அவனிடம் வேறு எந்தக் குறையும் காண முடியாது. தினமும் மாலை வேளைகளில் பூங்கோதைக்குச் சிவானந்தம் பாடம் சொல்லித் தருவது வழக்கம். பூங்கோதை பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தாள். சிவானந்தம் பி. ஏ. வகுப்பில் இரண்டாம் ஆண்டு படித்துக் கொண்டிருந்தான்.

வழக்கம்போல் இரண்டு நாட்களுக்கு முன்பு பூங்கோதைக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான் சிவானந்தம். சற்றுத் தள்ளி அமர்ந்து கம்பராமாயணத்தில் மூழ்கியிருந்தாள் சங்கரி.

படிப்பதற்காக அன்றைக்கு அவர்கள் எடுத்துக் கொண்ட பாடம் சரித்திரம். அதுவும் தேச சரித்திரம். இலங்கையைப் பற்றிய பழம் பெரும் வரலாறுகளைப் படித்துக்கொண்டு வந்தாள் பூங்கோதை.

தஷ்டகாமுனுவின் பிறப்பு வளர்ப்பு முதல் எல்லாளனை வென்றது வரையில் படித்தாள். எல்லாளனுக்குச் சமாதி கட்டிச் சிறிது மரியாதை செய்யும் வரையில்தான் அந்த அத்தியாயம். அடுத்தது வட்டகாமினியைப் பற்றியும், தம்புலா குகைக் கோவிலைப் பற்றியும் சுருக்கமாக விவரித்திருந்தது.

"தம்புலா குகைக் கோவிலைப் பார்த்திருக்கிறாயா சிவானந்தம்?" என்றாள் பூங்கோதை.

"ஓ! தம்புலா, சிக்கிரியா எல்லாவற்றையுமே பார்த்திருக்கிறேன்......"

"அங்கே என்ன இருக்கிறது?"

"அழியா வண்ணச் சித்திரங்களும், அற்புதமான சிற்பங்களும் போகிறவர்களுக்கு எவ்வளவோ கதைகள் சொல்லுகின்றன."

"அழியா வண்ணச் சித்திரமா?......எவ்வளவு வருஷங்களுக்கு முன்னால் எழுதப்பட்டவை?"-பூங்கோதை வியப்புடன் கேட்டாள்.

"ஏசு கிறிஸ்து பிறப்பதற்கு முன்பு! அதாவது சுமார் இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு. இன்றும் வர்ணங்கள் பளிச்சென்று இருக்கின்றன."

பூங்கோதை ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

"ஏன், நீ பார்த்ததேயில்லையா?" என்றான் சிவானந்தம்.

"என்னை அழைத்துப் போக யார் இருக்கிறார்கள்?" என்றாள் நிராசையுடன். அவளை ஒரு கணம் பரிதாபமாகப் பார்த்தான் சிவானந்தம். பிறகு, "நான் அழைத்துப் போகிறேன். வாயேன்..." என்றான்.

"அவ்வளவு தூரம் என்னை உன்னுடன் அம்மா அனுப்புவாளா?..."

"அன்றொரு நாள் சங்கீதக் கச்சேரிக்கு என்னை அழைத்துப் போகச் சொன்னாளே?"

"உன்னூரில் ஒரு இடத்துக்குப் போவதற்கும் அசலூருக்குப் போவதற்கும் வித்தியாசம் இல்லையா?'' என்றாள் பூங்கோதை.

சிவானந்தம் ஒரு கணம் யோசித்தான். பூங்கோதையைப் பார்க்கும் போது யாருமில்லாத ஒரு அனாதை போலவும், அவளுக்குத் தன்னை விட்டால் வேறு கதியே கிடையாது போலவும் ஒரு உணர்வு உண்டாயிற்று. உடனே ஒரு நிர்மானத்துக்கு வந்தான். அதை அவளிடம் அரும்பாடுபட்டுச் சொல்லவும் சொல்லி விட்டான்.

"பூங்கோதை!'' என்றான் மெதுவாக.

"ம்......''

"ஒன்று செய். அம்மாவிடம் சொல்லாமலே புறப்படு. எல்லாவற்றையும் காண்பித்து அழைத்து வருகிறேன்...' என்றான்.

"அம்மாவுக்குத் தெரியாமலா?'' என்று ஒரு கணம் விழித்தாள். பிறகு, "எங்கே போவதாகச் சொல்லுவது?'' என்றாள்.

"பார்தேனியாவில் உன் சிநேகிதி யாரோ இருக்கிறாள் என்றாயே...''

"யசோதாவா?''

"ம்...அவள் வீட்டுக்குப் போவதாகவும், மாலையில்தான் திரும்பி வர முடியுமென்றும் சொல்லி அனுமதி வாங்கு...''

"அம்மாவுக்குத் தெரிந்து விட்டால்?...'' என்றாள் கண்களில் பீதி படர.

"எப்படித் தெரியும்? பயப்படாமல் புறப்படு!'' என்று அவன் தைரியம் அளித்தான்.

"பணம்!'' என்றாள்.

"எல்லாவற்றையும் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்...நாளை மறு நாள் பௌர்ணமியல்லவா? காலை எட்டு மணிக்கெல்லாம் தயாராயிரு. நான் வந்து அழைத்துப் போகிறேன்'' என்று கூறி விட்டுப் போய்விட்டான். முதல் நாள் மாலை ஒரு தரம் வந்து நினைவு படுத்தினான். அன்று இரவுதான் தாயாரிடம் யசோதாவின் வீட்டுக்குப் போய் வர அனுமதி பெற்றாள் பூங்கோதை.

கண்ணாடியிலிருந்து சிவானந்தத்தின் பக்கம் திரும்பினாள் பூங்கோதை. அப்பொழுது வாசலிலிருந்து "பூங்கோதை!'' என்றொரு குரல் கேட்டது. மெள்ள நடந்து கூடத்திலிருந்தே வாசற் பக்கம் பார்த்தான். அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவள் கட்டியிருந்த கோட்டையிலே அணுகுண்டு விழுந்தாற் போலிருந்தது. வாசலில் யசோதா நின்று கொண்டிருந்தாள்! எவள் வீட்டுக்குப் போவதாகத் தாயாரிடம் சொல்லி யிருந்தாளோ அவளே வந்து நின்றாள்.

★

வாசலிலிருந்து யாரோ "பூங்கோதை!'' என்று கூப்பிட்ட குரலையும், வாசற் பக்கம் பார்த்த பூங்கோதை அப்படியே திகைத்து நின்றதையும் கவனித்தான் சிவானந்தம். சட்டென்று அவனும் வந்து பூங்கோதைக்குப் பக்கத்தில் நின்று கொண்டு வாசற் பக்கம் பார்த்து விட்டு யாரென்று கேட்கும் பாவனையில் பூங்கோதையைப் பார்த்தான். அதுவரையில் அவன் யசோதாவைப் பார்த்ததில்லை. அவன் பார்த்த விதத்தைப் புரிந்து கொண்ட பூங்கோதை. "யசோதா!......இவள் வீட்டுக்குப் போவதாகத்தான் அம்மாவிடம் சொல்லி யிருக்கிறேன்!'' என்றாள்.

"அட, கரடி!'' என்று முணுமுணுத்தவாறு, சிவானந்தம் ஒரு கணம் யோசித்தான். பிறகு உள் பக்கம் திரும்பிப் பார்த்து விட்டு, "சரி, நீ அவளை வாசலோடு அனுப்பி விடு. நான் அம்மாவைக் கவனித்துக் கொள்ளுகிறேன்'' என்றான் ரகசியக் குரலில்.

"வீடு தேடி வந்தவளை வாசலோடு எப்படி அனுப்புவது?'' என்று கெஞ்சாத தோஷமாகக் கேட்டாள் பூங்கோதை.

"ஆபத்துக்குத்தோஷமில்லை. ம், சீக்கிரம்'' என்று கூறி விட்டு அடுக்களைப் பக்கம் வந்தான் சிவானந்தம். இவ்வளவும் கண் சிமிட்டும் நேரத்துக்குள் நடந்து விட்டன.

சமையலறை நிலைப்படியில் வந்து வழியை மறைத்தவாறு உட்கார்ந்து கொண்டு, "அத்தை!'' என்றான். "யாரு? சிவானந்தமா?'' என்றாள் சங்கரி. "ஆமாம் அத்தை! என்ன செய்கிறீர்கள்?'' என்று பேச்சக் கொடுத்தான்.

"வேறு என்னப்பா செய்வேன்? சமையல் செய்கிறேன்!'' என்றாள் முகத்தில் புன்னகை



தவழ. சிவானந்தத்தைப் பார்த்தாலே சங்கரியின் முகம் மலர்ந்து விடும். "சிவானந்தம்! கொஞ்சம் பலகாரம் சாப்பிடுகிறாயா?'' என்றாள் வாஞ்சையுடன்.

"வேண்டாம், அத்தை! இப்பொழுது தான் சாப்பிட்டு விட்டு வருகிறேன்'' என்று சிவானந்தம் கூறி முடிப்பதற்குள் "நீ ஏம்மா? வீணுக்கு உபசாரம் செய்கிறாய்? சிவானந்தம் நம்ம வீட்டிலெல்லாம் சாப்பிடுவாரா?'' என்று கேட்டபடி பூங்கோதை வந்தாள். வந்தவளை ஏற இறங்க ஒரு முறை பார்த்தான் சிவானந்தம். பிறகு சங்கரியைப் பார்த்து, "அத்தை! பூங்கோதை எங்கேயாவது போகப் போகிறாளா என்ன? அலங்காரம் பலமாயிருக்கே!'' என்று கேட்டு விட்டுப் பூங்கோதையின் பக்கம் திரும்பினான். 'அட திருடா!' என்கிற பாவனையில் அவனைப் பார்த்தாள் பூங்கோதை.

"ம்... யாரோ சிநேகிதியைப் பார்ப்பதற்காகப் பார்தேனியா போகிறாளாம்'' என்றாள் சங்கரி.

"நன்றாயிருக்கிறதே! சிநேகிதியைப் பார்க்க இங்கிருந்து நாலு மைல் போகிறாளா? ஏன், அவள்தான் இங்கு வந்து இவளைப் பார்க்கட்

ருமே! அவள் ஒரு பெரிய ராங்கிக்காரி போல் இருக்கிறது!'' என்று கூறிவிட்டுக் குறும்பாகப் பூங்கோதையைப் பார்த்தான். 'இவ்வளவுதான் தெரியுமா? இன்னும் ஏதாவது தெரியுமா?' என்று கேட்கும் வகையில் அவனைப் பார்த்தாள் பூங்கோதை.

''நீ எங்கேயாவது போகிறாயா, சிவானந்தம்?'' என்று கேட்டாள் சங்கரி.

''ஆமாம், அத்தை! மாத்தளை வரைக்கும் போகிறேன். இன்று அங்கு ஒரு கால்பந்து விளையாட்டுப் போட்டி...''

''நீயும் விளையாடுகிறாயா?''

''இல்லை; சும்மா பார்த்து விட்டு வரப் போகிறேன்......''

''பஸ்ஸிலா?''

''இல்லை. காரில்தான். நானே டிரைவ் செய்து கொண்டு போகப் போகிறேன்.''

''ஜாக்கிரதை, அப்பா. அப்படியே இவளையும் பார்தெனியா பஸ்ஸில் ஏற்றி விட்டுச் செல்கிறாயா?'' என்றாள் சங்கரி.

''ஆகட்டும், அத்தை! நான் போய்க் காரை எடுத்துக் கொண்டு வருகிறேன். அதற்குள் தயாராயிருக்கச் சொல்லுங்கள்'' என்று கூறிவிட்டு எழுந்து சென்றான். சங்கரி எழுந்து காமிரா அறைக்குள் சென்று பெட்டியைத் திறந்து இரண்டு ரூபாய் பணத்தைக் கொண்டு வந்து பூங்கோதையிடம் கொடுத்து விட்டு, ''எப்பொழுது திருப்புவாய்?'' என்றாள்.

''சாயங்காலம் நாலு மணிக்குள் வந்து விடுவேனம்மா...'' என்றாள் பூங்கோதை. அவளையும் மீறிக் குரலில் ஒரு நடுக்கம் கண்டது. ''சாப்பாடு?'' என்றாள் சங்கரி. ''யசோதாவின் வீட்டிலேயே சாப்பிடச் சொல்லியிருக்கிறாள், அம்மா...'' என்றாள். அதற்குள் வாசலிலிருந்து மோட்டாரின் ஹாரன் சத்தம் அலறியது. ''நான் வருகிறேன், அம்மா!'' என்று கூறிவிட்டு எதிரில் மாட்டியிருந்த சுவாமி படத்தைப் பார்த்து மானசீகமாக வணக்கம் தெரிவித்து விட்டுக் கிளம்பினாள்.

மோட்டாரின் பின்பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே அமர்ந்தாள். சிவானந்தம் எழுந்து வந்து கதவை நன்றாக அறைந்து சாத்தி விட்டுத் தன் இடத்தில் போய் உட்கார்ந்து கொண்டு வண்டியை எடுத்தான். சுமார் அரை மணி நேரம் இருவரும் மௌனமாகவே உட்கார்ந்திருந்தனர். அதற்குள் அவர்கள் ஊர் எல்லையைத் தாண்டி வந்து விட்டார்கள். ஒரு இடத்தில் வண்டியை நிறுத்திப் பூங்கோதையை முன் சீட்டில் வந்து உட்காரச் சொன்னான். திரும்பவும் வண்டி கிளம்பி நிதானமாகவே சென்றது. இருவருக்கும் பேச்சை எப்படி ஆரம்பிப்பதென்றே தெரியவில்லை. கடைசியில் சிவானந்தம்தான் மௌனத்தைக் கலைத்தான். ''யசோதா எங்கே வந்தாள்?'' என்றான்.

''இன்று நிஜமாகவே அவள் வீட்டுக்கு வருவதாக நாலைந்து நாட்களுக்கு முன்பு சொல்லியிருந்தேன்...''

''உன்னை அழைத்துப் போக வந்தாளா?''

''இல்லை; திடீரென்று அவர்கள் வீட்டில் எல்லோரும் கொழும்புக்குப் போகிறார்களாம். அவள் இல்லாத சமயத்தில் நான் வந்து திண்டாடப் போகிறேனே என்று சொல்லி விட்டுப் போக அவசரம் அவசரமாக வந்து விட்டு ஓடுகிறாள். பாவம், வந்தவளை 'வா'வென்று உபசாரத்துக்காகக்கூட நான் சொல்லவில்லை'' என்று உண்மையான வருத்தத்துடன் சொன்ன பூங்கோதை மீண்டும் பெரும் மௌனம் சாதித்து விட்டாள்.

''பூங்கோதை!''

''ம்...''

''ஏன் என்னவோ போலிருக்கிறாய்!''

''எப்படி இருக்கிறேன்?''

''இன்று பௌர்ணமிதானே?''

''ஆமாம்!''

''இது பகல்தானே?''

''அதில் என்ன சந்தேகம்?''

''இரவு உதிக்க வேண்டிய சந்திரன் இப்பொழுதே உதித்து விட்டதோ என்று சந்தேகமாயிருக்கிறது.''

''ஏன், பகலில் நீங்கள் சந்திரனைப் பார்த்ததில்லையா?''

''பார்த்திருக்கிறேன். உன் முகமும் இப்பொழுது அப்படித்தான் இருக்கிறது. நினைத்ததைவிட இன்று எவ்வளவோ அழகாயிருக்கிறாய். ஆனால் பகல் நிலவைப் போல் பிரகாசமின்றி இருக்கிறது! அது ஏன்?''

''பகல் நிலவு பிரகாசமின்றி இருப்பதற்குக் காரணமென்ன?''

''கதிரோனின் பிரசன்னம்தான்!''

''பின்னென்ன? சூரியனுக்கு முன்னால் சந்திரனுக்குப் பிரகாசம் ஏது?'' என்று கூறியவாறு ஓரக் கண்களால் சிவானந்தத்தைப் பார்த்தாள். நாணம் கலந்த புன்னகையொன்று அவள் செவ்விதழ்களிலே தவழ்ந்து மறைந்தது. சிவானந்தம் இந்த உலகத்திலேயே இல்லை. இன்ப வெள்ளத்தில் மூழ்கியவனாய்ச் சுய உணர்வின்றிக் காரைச் செலுத்திக் கொண்டிருந்தான். அவன் உள்ளத்துக்கு ஈடாக வண்டியும் பறக்கத் தொடங்கியது.

பூங்கோதையும் சிவானந்தமும் உயிருக்கு உயிராய்ப் பழகியவர்கள்தான். இருவரையும் பிணைத்து விடுவதென்று பெரியவர்களால் ஏற்கனவேயே நிச்சயிக்கப்பட்ட விஷயம் தான். என்றாலும் இது நாள் வரையில் வெறும் குழந்தைகளாகவே பழகி வந்தார்கள். பேச்சுக்களும் அதற்கேற்றாற் போலத்தான் இருக்கும். இப்பொழுதுதான் ஒரு படி உயர்ந்திருக்கிறது. தன்னைச் சூரியனென்று பூங்கோதை ஜாடையாகத் தெரிவித்த பிறகு சிவானந்தத்துக்கு ஏற்பட்ட ஆனந்தத்துக்கு ஓர் எல்லையில்லை.

சுமார் பத்தரை மணிக்குத் தம்புள்ளையை அடைந்தார்கள். வண்டியை ஒரு ஓரத்தில் நிறுத்தி விட்டுக் கொஞ்சம் மலர்களையும் இரண்டு மூன்று மெழுகுவத்திகளையும் வாங்கிக் கொண்டு சரிவான பாறை மீது ஏறத் தொடங்கினார்கள். அரை மணி நேரத்துக்குள் குகைக் கோயிலை அடைந்து விட்டார்கள். உள்ளே ஒரே இருட்டு. மெழுகுவத்திகளைக் கொளுத்தி ஆளுக்கு ஒன்றாகப் பிடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தார்கள். எங்கே பார்த்தாலும் புத்தர் பெருமானின் பல தோற்றங்கள். பூங்கோதைக்குச் சிறிது பயமாகவே இருந்தது. ஒரு கையால் சிவானந்தத்தின் கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தாள். சிவானந்தம் ஒவ்வொன்றாக அவளுக்கு விளக்கிச்

சொல்லிக் கொண்டே வந்தான். பிறகு வத்தியை மேலே தூக்கிப் பிடித்து, "அது என்ன தெரிகிறதா?" என்றான்.

"வண்ணச் சித்திரம் தீட்டிய திரைச் சீலை" என்றாள்.

"அதுதான் இல்லை. அங்கு திரைச் சீலையே இல்லை. வெறும் பாறையில்தான் அப்படி வர்ணம் தீட்டியிருக்கிறார்கள்" என்றான் சிவானந்தம். பூங்கோதை ஆச்சரியத்துடன் திரும்பவும் அண்ணாந்து பார்த்தாள்.

"சரி நேரமாகிறது. அப்புறம் சிகிரியா போய் வர நேரமாகி விடும்" என்று துரிதப் படுத்தினான். இருவரும் பறக்கப் பறக்கக் கீழே இறங்கி வந்தார்கள்.

★

தம்புலாவிலிருந்து புறப்பட்டதும் காரின் வேகம் சிறிது அதிகமாகவே யிருந்தது. எல்லாவற்றையும் பார்த்து விட்டு எப்படி யாவது சீக்கிரம் வீட்டை அடைந்தால் போது மென் றிருந்ததால் பூங்கோதையும் ஆட்சேபனை ஒன்றும் சொல்ல வில்லை. தன்னுடைய இந்தப் பிரயாணம் அம்மாவுக்குத் தெரிந்தால் என்ன செய்வது என்பதைப் பற்றியே எண்ணமிட்டுக் கொண்டிருந்தாள்.

"பூங்கோதை!" என்று அவள் சிந்தனையைக் கலைத்தான் சிவானந்தம்:

"இந்தக் குகைக் கோயில் எப்பொழுது நிர்மாணிக்கப்பட்டது, தெரியுமா? இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு. அப்பொழுது அந்த இடம் மிகப் பெரிய காடா யிருந்தது. வட்ட காமினி என்ற அரசன் இப்பொழுது குகைக் கோயிலிருக்கும் இடத்தில்தான் பல வருஷங்கள் ஒளிந்து கொண்டிருந்தான். அவனுடைய பெரு முயற்சியினால்தான் பின்னால் இந்தக் குகைக் கோயில் கட்டப்பட்டது. நாற்பத்தேழு அடி நீளப் பாறையைக் குடைந்து இந்த அற்புத வேலையைச் செய்திருக்கிறார்கள். துஷ்ட கமுனுவுக்கும் எல்லாள மகாராஜாவுக்கும் நடந்த யுத்தம் முதலிய சரித்திர நிகழ்ச்சிகளைத்தான் குகையின் கூரை மீதும் சித்திரமாகத் தீட்டியிருக்கிறார்கள்."

பூங்கோதை மௌனமாக எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு வந்தாள். முகத்தில் எவ்வித உணர்ச்சியையும் காட்டாமல் வருவதைக் கவனித்த சிவானந்தம், "கேட்டுக் கொண்டுதான் வருகிறாயா?" என்றான்.

அதற்குள் சிகிரியா மலையடிவாரத்துக்குக் கார் வந்து விட்டது. ஒரு மரத்தடியில் கொண்டு போய்க் காரை நிறுத்திவிட்டு, இருவரும் மலையின்மேல் ஏறத் தொடங்கினார்கள். சற்றைக் கெல்லாம் சிங்கப் பாதத்துக்கு வந்து விட்டார்கள் இருவரும். படிக்கட்டுக்கு இரண்டு பக்கங்களிலும் இரண்டு பெரிய பாதங்கள் தூண் போல் அலங்கரித்தன.

"இது என்ன, சிவானந்தம்!" என்று கேட்டாள் பூங்கோதை.

"முன்பு இங்கு ஒரு வழி இருந்ததாம். இதன் வழியாக உள் பக்கம் சென்று பிறகு உள் வழியாகவே மேலே ஏறுவதற்கு முடியுமாம். இப்பொழுது இந்த வழியை அடைத்து விட்டார்கள்...இனிமேல் தான் நீ ஜாக்கிரதையாக ஏற வேண்டும். சரியான படிகள் கிடையாது..." என்று கூறி விட்டு மேலும் ஏறத் தொடங்கினான். பூங்கோதையும் அவனைப் பின்தொடர்ந்தாள்.

ஒரு வழியாக உச்சியை அடைந்தார்கள். "அம்மா...டி..." என்று கூறியவாறு முழங்கால்களைப் பிடித்துக் கொண்டு ஒரு இடத்தில் உட்கார்ந்து விட்டாள் பூங்கோதை. சிவானந்தமும் அவள் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டு ஆகாரப் பையை அவிழ்த்தான். முதலில் கொஞ்சம் திராட்சைப் பழங்களை எடுத்து இருவரும் சாப்பிட்டார்கள். கொஞ்சம் உயிர் வந்தாற் போலிருந்தது. பிறகு இன்னொரு காகிதப் பொட்டலத்தை எடுத்துப் பிரித்தான்—இட்டிலி!

"இது ஏது?" என்றாள் சிறிது வியப்புடன்.

"ஹோட்டலில் வாங்கினேன்!"

சில நிமிஷங்களில் அவைகளும் மறைந்தன.

"இப்பொழுது மணி என்ன?" என்றாள் பூங்கோதை. சிவானந்தம் கடிகாரத்தைப் பார்த்தான். மணி இரண்டரை.



"திரும்புவோமா?" என்றாள்.

"சிறிது நேரம் உட்கார்ந்து விட்டுப் போவோமே..." என்று கூறியவாறு ஒரு இடத்தில் உட்கார்ந்தான் சிவானந்தம். வேறு வழியின்றி அவளும் அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள். அவள் முகத்தைப் பார்த்ததுமே அவள் சிந்தனை இங்கில்லை யென்று யாரும் புரிந்து கொள்ளும்படி இருந்தது. சிறிது நேரம் இருவரும் மௌனமாகவே உட்கார்ந்திருந்தார்கள். பிறகு சிவானந்தம்தான் பேச்சைத் துவக்கினான்.

"பூங்கோதை!" என்றான் மெதுவாக.

"ம்..." என்றவாறு விழிகளை அவன் பக்கம் திருப்பினாள். ரோஜா நிறம் போன்ற அவள் முகம் வெய்யிலினால் இரத்தச் சிவப்பாக மாறியிருந்தது. களைப்பின் வாட்டம் முகத்தில் பளிச்சென்று தெரிந்தது. ஆனால் அவள் அழகு என்னவோ இன்னும் கொஞ்சம் அதிகமாகவே சோபித்தது. மெய்ம் மறந்து அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்



கணவன்:— இங்கே பார். உன் செல்லக் குழந்தை நான் எழுதின தொடர் கதையைக் கிழித்து விட்டது!

மனைவி:—அட என் ராஜா! உனக்கு எப்படியடா படிக்கத் தெரிந்தது!

தான் சிவானந்தம். சிறிது நேரம் அவளும் அவனை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு "என்ன?" என்று சாவதானமாகக் கேட்டாள்.

"எனக்குத்தான் உன்னைக் கொடுப்பேன் என்று உன்னுடைய அம்மா என் அம்மாவிடம் அடிக்கடி சொல்லி வருகிறாளாமே, அது உண்மைதானா?"

"வீட்டுக்குப் போனதும் அம்மாவைக் கேட்டுச் சொல்கிறேனே!"

"அம்மாவைக் கேட்டுச் சொல்கிறாயா? நல்ல காரியம் செய்தே போ!"

"ஏன் என் அப்பாவைத்தான் கேட்டுச் சொல்லணுமோ?"

"அது இன்னும் விசேஷம்!"

"பின்னே யாரைக்கேட்டுச் சொல்லணும்?"

"நீ யாரையும் எதுவும் கேட்க வேண்டாம். உனக்குத் தெரிந்தால் சொல்லு போதும்!"

"என் காதில் அப்படி ஒன்றும் இது வரையில் விழவில்லையே!"

"உண்மையாகவா?" என்று கேட்டு விட்டு அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான் சிவானந்தம். பூங்கோதையின் முகத்தில் இலேசாக நாணம் படர்ந்தது. மெள்ளத் தலையைக் குனிந்துகொண்டாள். "பூங்கோதை!" என்றான் அன்பு கனிய. விழிகளை மட்டும் சிறிது மேலே உயர்த்தினாள்.

"பிடி கொடுக்காமலேயே பேசுகிறாயே!" என்று கூறி விட்டு ஒரு விரலால் அவள் முகத்தை நிமிர்த்தினான். அகன்ற விழிகளால் அவனை அன்பு கனியப் பார்த்தாள் பூங்கோதை. அவள் பார்த்த விதம், 'இதோ என் விழிகளைப் பார். உன்னை என் இரண்டு கண்களிலும் வைத்துப் போற்றுகிறேனே, என் அபிப்பிராயம் வேறு எப்படி இருக்க முடியும்?' என்று சொல்லுவது போலிருந்தது. இருந்தாலும் வாயாலும் ஒரு வார்த்தை சொன்னாள். "சிவானந்தம்! உண்மையில் அப்படி நடந்தால் நான் ஒரு பெரிய அதிர்ஷ்டசாலிதான்! நாழியாகிறது. நாம் புறப்படுவோமா?" என்றாள்.

ஒரு கணம் உணர்ச்சி வசப்பட்டவனைச் சிலைபோல் உட்கார்ந்திருந்தான் சிவானந்தம். பூங்கோதை திரும்பவும் கேட்டாள்: "புறப்படலாமா?" என்றாள்.

"புறப்படுவோம். முதலில் பிளாஸ்கையும் காலி செய்து விட்டுக் கிளம்புவோமே!" என்று கூறியவாறு பிளாஸ்கை எடுத்தான். நாசூக்காக அதைத் தன் கையில் வாங்கிக் கொண்டாள் பூங்கோதை. பிளாஸ்கின் மூடியில் கொட்டி இரண்டு முறை சிவானந்தத்துக்குக் கொடுத்தாள். மீதியைத் தானும் குடித்து விட்டு, "நாலு மணிக்குள் வீட்டுக்குப் போய்விட முடியுமா?" என்று கேட்டவாறு எழுந்தாள்.

"ஐந்து மணிக்குள் போய் விடலாம்..." என்றான் சிவானந்தம்.

"நாலு மணிக்குள் திரும்பி விடுவதாக அம்மாவிடம் சொல்லியிருக்கிறேன்..." என்றாள் அவள் சிறிது கவலையுடன்.

"அதனால் என்ன? ஒரு மணி வித்தியாசத்தில் என்ன வந்துவிடப் போகிறது? பயப்படாமல் வா" என்று தைரியம் சொன்னான் சிவானந்தம். அங்கேயே நின்றபடி சுற்றிலும் ஒருமுறை பார்வையிட்டாள் பூங்கோதை.

"இந்தப் பிரயாணம் எப்பொழுதும் நமக்கு ஞாபகம் இருக்குமல்லவா?"

"எதனால்?" என்று கேட்டாள் பூங்கோதை எங்கோ பார்த்தவாறு.

"இந்த இடத்தில்தானே நாம் மனம் விட்டுப் பேசினோம்?"

"மற்ற நாட்களில்?"

"மற்ற நாட்களிலும் மனம் விட்டுத்தான் பேசினோம். இருந்தாலும் இன்று நாம் பேசிய விஷயம் மிகவும் முக்கியமானதில்லையா?"

"அதை இங்கேதான் பேச வேண்டுமா?"

"பின்னே இல்லையா? நாம் பேசியது எவ்வளவு உயர்ந்த விஷயம்! அதை இவ்வளவு உயரத்தில் பேசினால்தான் அழகு" என்றான் சிவானந்தம்சிரித்துக்கொண்டே. பூங்கோதையும் வெட்கத்துடன் புன்னகை செய்தாள்.

அவர்கள் பாதி தூரம் இறங்கி வந்திருப்பார்கள். விவரிக்க முடியாதவாறு ஒரு விசித்திரச் சத்தம் காற்றிலே மிதந்து வந்தது.

"எங்கோ ஆகாய விமானம் பறக்கிறாற் போலிருக்கிறது" என்றான் சிவானந்தம்.

"இல்லை. எங்கோ வெகு தூரத்தில் அபாயச் சங்கு ஊதுகிறாற் போலிருக்கு..." என்றாள் பூங்கோதை.

அவர்கள் கீழே வரவரச் சத்தம் அதிகமாகிக்கொண்டே வந்தது. அவர்கள் சிங்கப் பாதம் வந்த பிறகுதான் விஷயம் என்னவென்று தெரிய வந்தது.

வண்டுகள் பறக்கத் தொடங்கி விட்டன. நூறு, ஆயிரம், பதினாயிரம் என்று எங்கே பார்த்தாலும் வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டு திரிந்தன. அவைகள் பறக்கத் தொடங்கி விட்டால் ஆனந்தம்தான். அகப்பட்டுக் கொண்டவர்களைப் பதினாயிரம் இடத்தில் துளைத்துச் சென்று விடும். சமீபத்தில்கூட இரண்டு மாணவிகள் வண்டுக் கூட்டத்துக்குப் பலியானார்களென்பதைச்

சிவானந்தம் பத்திரிகையில் படித்திருந்தான். ஏன், பூங்கோதையும் அதைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாள். "ஐயோ, பூங்கோதை! எக்கச்சக்கமாக மாட்டிக் கொண்டு விட்டோமே?" என்று அலறினான் சிவானந்தம்.

"என்ன?" என்று கேட்டாள் பூங்கோதை ஒன்றும் புரியாதவளாக.

"அதோ பார்!" என்று முன் பக்கம் சுட்டிக் காட்டினான். கண்டைக்காய் அளவிலிருந்து எலுமிச்சம் பழம் அளவுக்குச் சின்னதும் பெரியதுமாக ஏராளமான வண்டுகள், 'வாருங்கள், சொல்லுகிறேன்' என்று பயமுறுத்துவதைப் போல் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. அவைகளைப் பார்த்ததுமே பூங்கோதைக்குப் பாதிப் பிராணன் போனது போலாகிவிட்டது.

"இப்பொழுது என்ன செய்வது? திரும்பவும் மேலே ஏறி விடுவோமா?" என்று கேட்டாள் குரல் நடுங்க.

"மேலே ஏறினாலும் தப்ப முடியாது, பூங்கோதை! நம்மை அவை பார்த்து விட்டால் எங்கே போனாலும் விடாது துரத்தும்!" என்றான் சிவானந்தம்.

"அப்படியானால் வேறு வழி?" என்று கத்தினாள் பூங்கோதை.

"என் பின்னால் ஓடி வா, சொல்லுகிறேன். அங்கே ஒரு கூண்டு இருக்கிறது பார். அதற்குள் போய் விடலாம்!" என்று கூறிவிட்டு ஓட ஆரம்பித்தான் சிவானந்தம். பூங்கோதையும் ஓட ஆரம்பித்தாள். ஆனால் பாவாடை தடுக்கிக் கீழே விழுந்து விட்டாள். சிவானந்தம் திரும்பவும் ஓடி வந்து அவளைத் தூக்கி நிறுத்தி அவளை முன்னால் தள்ளிக் கொண்டு பின்னால் சென்றான். அதற்குள் வண்டுகள் இருவரையும் இரண்டு மூன்று இடங்களில் கொட்டி விட்டன.

கூண்டுக்குள் புகுந்து கொண்டு கதவை அடைத்துக் கொண்டனர். ஐந்தாறு பேர்கள் நிற்கக் கூடிய அந்தக் கூண்டு சல்லடைத் துணி போன்ற கம்பிகளால் ஆனது. வண்டுகள் பறக்கத் தொடங்கி விட்டால் அவைகளிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவே அது அங்கே இருக்கிறது. அந்தக் கூண்டைச் சுற்றியே வண்டுகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. வண்டுகள் கொட்டின இடங்களில் கடுப்பு தாங்காமல் தவித்துக் கொண்டிருந்தாள் பூங்கோதை. சிவானந்தம் பல்லைக் கடித்துக் கொண்டு வேதனையை வெளிக் காட்டாமல் இருந்தான். நிமிஷத்துக்கு நிமிஷம் அதன் கடுப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. கொட்டின இடங்களிலெல்லாம் நன்றாகத் தடித்துவிட்டது.

பூங்கோதைக்கு வலிகூடப் பெரிதாகப் படவில்லை. இங்கிருந்து எப்படித் தப்பி வீடு போய்ச் சேரப் போகிறோமென்ற கவலையே பெரிதாக இருந்தது. வண்டுகள் அவ்விடத்தை விட்டுப் போவதாகத் தெரியவில்லை.

சூரியனின் பிரகாசம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டு வந்தது. வெகு வேகமாகக் கார்மேகக் கூட்டங்கள் நாலா திசைகளிலிருந்தும் வந்து கூடத் தொடங்கின. வானமும் வையமும் இருண்டு கொண்டு வந்தன. ஒரு குளிர்ச்சி கலந்த இலேசான காற்று வீசத் தொடங்கியது. சற்றைக்கெல்லாம் காற்றின் கனம் சற்று அதிகமாயிற்று; பிறகு அதற்கு ஒரு பலமும் வரத் தொடங்கியது. அப்புறம் அதற்கு ஒரு வேகமும் வந்து விட்டது!

கொஞ்சம் கொஞ்சமாக வண்டுகள் மறையத் தொடங்கின. சிறிது நேரத்துக்கெல்லாம் ஒரு வண்டுகூட இல்லாமல் எல்லாம் எங்கோ போய் ஒளிந்து கொண்டன.

"பூங்கோதை! வா போகலாம்!" என்று கூறியவாறு கூண்டின் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான் சிவானந்தம். பூங்கோதை வெளியில் வந்ததும் அவசரம் அவசரமாகக் கீழே இறங்கத் தொடங்கினார்கள். ஆனால் காற்று பலமாக வீசிக்கொண்டிருந்தபடியால் இறங்குவதும் அவ்வளவு சுலபமாக இல்லை. கொஞ்சம் நிதானமாகவே அவர்கள் நின்று நின்று இறங்க வேண்டியிருந்தது.

அவர்கள் கீழே இறங்கிக் காரை அடையும் பொழுது மணி ஐந்தரை. ஆனால் அப்போதே



மணி ஏழாகி விட்டது போல் இருட்டிப் போய் விட்டது.

"இன்று நான் தொலைந்தேன். வீட்டுக்குப் போனதும் அம்மா என்னவெல்லாம் பேசப் போகிறாளோ!" என்று சொல்லிக் கொண்டு காருக்குள் உட்கார்ந்தாள் பூங்கோதை.

"கவலைப்படாதே. அரைமணியில் கொண்டு சேர்க்கிறேன்" என்று கூறிவிட்டு வண்டியை எடுத்தான் சிவானந்தம். மழை 'சோ' வென்று கொட்டத் தொடங்கியது.

மழை, காற்று எல்லாவற்றையும் கிழித்துக் கொண்டு கார் காற்றாய்ப் பறந்தது. அவன் முன்பு கூறியது போல் காரை விமானமாக எண்ணித்தான் செலுத்திக் கொண்டிருந்தான். என்றாலும் பூங்கோதையின் உள்ளம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டது.

சுமார் ஒரு மணி நேரம் வண்டி வந்திருக்கும். மாத்தளைக்கு இன்னும் பத்து மைல்கள்

தூரமே இருந்தது. ஆனால் மேற்கொண்டு போக முடியாமல் ஒரு இடத்தில் மோட்டாரை நிறுத்தும்படியாயிற்று. காரணம் ஒரு பெரிய மரம் விழுந்து கிடந்ததுதான். அந்த ரஸ்தாவின் இருபுறங்களிலும் பெரிய தோட்டங்கள். வலதுபுறத் தோட்டத்திலிருந்து விழுந்திருந்த ஒரு பிரும்மாண்டமான மரம், பாதைக்கு மதில்சுவர் கட்டினாற்போல இடது புறத் தோட்டத்துக்குள்ளும் நீண்டு கிடந்தது. அந்தப் பக்கத்தில் மனிதக் காற்றே கிடையாது. "இப்பொழுது என்ன செய்கிறது? இப்பொழுது என்ன செய்கிறது?" என்று திரும்பத் திரும்பக் கேட்டாள் பூங்கோதை.

வெகுநேர மௌனத்துக்குப் பிறகு, "இன்று நாம் போக முடியாது, பூங்கோதை! நாளைக் காலை மரத்தை எடுத்த பிறகுதான் போக முடியும். வேறு வழி கிடையாது" என்றான் சிவானந்தம் வருத்தத்துடன். எரித்து விடுவதைப் போல அவனைப் பார்த்தாள் பூங்கோதை; பிறகு, "என் தலையில் கல்லைப் போட்டு விட்டாயே?" என்று அழுகையும் ஆத்திரமுமாக விஷத்தைக் கக்கினாள்.

✶

பூங்கோதை இப்படிக் கூறியதும் வாஸ்தவமாகவே சிவானந்தத்தின் தலையில் ஒரு பெரிய பாறாங்கல் விழுந்தாற் போல் இருந்தது. அவள் வாயால் இவ்வளவு கடும் சொற்களை அவன் எதிர்பார்க்கவேயில்லை. திகைத்துப் போய் அவளைப் பார்த்தான்.

"நாளைக்கு எப்படி வீட்டுக்குள் நுழைவது? படியேற விடுவாளா, அம்மா? அப்படியே தான் விட்டாலும் எந்த முகத்துடன் அம்மாவைப் பார்க்க முடியும்?" என்று குரலில் கடுமை தொனிக்கக் கேட்டாள். அவள் கண்களைப் பார்க்கவே அச்சமாயிருந்தது. மத்தியானம் மலை உச்சியில் மாஜி அரண்மனை மீது உட்கார்ந்து பேசிக்கொண் டிருக்கையில் பார்த்த விழிகள்தானா இவை என்று சிவானந்தத்துக்குச் சந்தேகமா யிருந்தது.



"உனக்கென்ன, நிம்மதியாக இருக்கிறாய்!" என்று கூறி விட்டு ஒரு வித வெறுப்புடன் அவனைப் பார்த்தாள். சிவானந்தம் பதிலே பேசவில்லை. வெளியில் மழை சக்கைப் போடு போட்டுக்கொண் டிருந்தது. மோட்டாரின் ஒளி தான் அந்தப் பிராந்தியத்துக்கே ஒளியைக் கொடுத்தது.

"அப்படியானால் வேறு வழியே கிடையாதா?" என்றாள் அழாக் குறையாக. எந்த நிமிஷத்திலும் பீறிட்டுக் கொண்டு வரும் அழுகையை அடக்க முடியாமல் 'ஓ' வென்று கதறி விடுவாள் போலிருந்தது. சிவானந்தம் இடிந்து போய் உட்கார்ந்திருந்தானே தவிர, எந்த விதமான பதிலும் சொல்லக் கூடிய நிலையில் அவன் இல்லை.

"என் வாழ்வைப் பாழாக்க வேண்டுமென்று எத்தனை நாட்களாக எண்ணியிருந்தாய்?" என்று வார்த்தையைத் தணலாக உமிழ்ந்தாள் பூங்கோதை.

"என்பேரில் என்ன தவறு, பூங்கோதை? வண்டுக் கூட்டத்தையும் மழையையும் நானா வரச் சொன்னேன்? அல்லது மரத்தை நான் வெட்டி வீழ்த்தினேனா?" என்றான்.

"நீதானே என்னை இங்கு அழைத்துக் கொண்டு வந்தாய்?"

"அது என் தவறுதான். என்னுடைய அவசர புத்தியினால் விளைந்த மன்னிக்க முடியாத தவறு. அதற்காக எந்தத் தண்டனையையும் அனுபவிக்கத் தயாராயிருக்கிறேன். ஆனால் அது என்னுடைய தவறு மட்டும் தானா? யோசித்துப் பார்!" என்றான் சிவானந்தம்.

"என்னுடைய தவறுதான்! பெண்ணாய்ப் பிறந்து விட்டு ஊர் சுற்ற ஆசைப்பட்டது என்னுடைய முட்டாள்தனம்தான்!" என்று கூறியவாறு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். கலங்கிய கண்களிலிருந்து நீர்த்துளிகள் உதிர்ந்தன. சிவானந்தத்துக்கு அவளைப் பார்க்கவே பரிதாபமா யிருந்தது. அவளுடைய அப்போதைய நிலையை நன்றாக உணர்ந்திருந்த சிவானந்தத்துக்குத் தன்மீதே ஒரு எரிச்சல் உண்டாயிற்று. மெள்ள, "பூங்கோதை!" என்றான். வேண்டாவெறுப்புடன் அவன் பக்கம் திரும்பினாள்; கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்து கொண்டிருந்தது.

"கலங்காதே, பூங்கோதை! என்ன செய்வது? நடந்தது நடந்து விட்டது. இனி தண்டனையை ஏற்க நாம் தயாரா யிருக்கவேண்டியதுதான்! அதற்காக இப்பொழுதே ஏன் அழுது வேதனைப்படுகிறாய்?" என்று கூறினான்.

"இனி எப்பொழுதுமே நான் அழ வேண்டியவள்தானே! உனக்கென்ன; ஆண்பிள்ளை. நாலு திட்டுகள் கிடைத்தால் நாளைக்கே அதை மறந்துவிடுவாய். ஆனால் என் விஷயம் அப்படியா? என் வாழ்வுக்கே ஒரு களங்கம் இல்லையா? ஆயுள்முழுதும் அம்மா சொல்லிக் காட்டுவாளே!" என்று கூறித் தேம்ப ஆரம்பித்து விட்டாள்; சிவானந்தத்துக்கு எப்படி அவளைச் சமாதானப் படுத்துவ தென்றே தெரியவில்லை.

இதற்குள் மழை நின்று விட்டது. கொஞ்சநஞ்ச மிருந்த வெண்மேகக் கூட்டங்களும் இழந்த நீரைத் திரும்பப் பெறுவதற்காக எங்கோ வெகு வேகமாகப் போய்க் கொண் டிருந்தன. 'இன்று பௌர்ணமி என்பதை நான் மறக்கவில்லை' என்று நிரூபிப்பதைப் போல ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்துக் கொண்டு வெளிப்பட்டது முழு நிலா. சிறிது நேரம் இருவரும் ஊமை போல உட்கார்ந்திருந்தனர். திடீரென்று பூங்கோதை, ஏதோ வெறி பிடித்தவள் போல் "முடியாது! காலை வரையில் நான் காத்திருக்க முடியாது! நடந்தாவது இப்பொழுதே வீட்டுக்குப் போய் விடுவேன்!" என்று இரைந்தவாறு மோட்டாரின் கதவைத் திறக்க முயன்றாள்.

''இருபத்தைந்து மைல் இருக்கிறது!'' என்றான் சிவானந்தம்.

''இருநூறு மைல் இருந்தாலும் சரி; ஓட்டம் ஓட்டமாக ஓடியாவது சென்று விடுவேன்!'' என்றாள் பூங்கோதை ஆவேசமாக.

''இந்த இரவு வேளையிலா?''

''ஏன்?...பேய் பிசாசு இருக்குமா? சிங்கம் புலி சாப்பிட்டு விடுமா? எதற்கும் நான் தயார்!'' என்று ரௌத்திராகாரமாகக் கூறி விட்டுக் கதவைத் திறந்தாள்.

அவளை இறங்கவிடாமல் கையைப் பிடித்துக் கொண்டு, ''உனக்குப் பைத்தியமா? ஒரு தவறு செய்து விட்டுத்தான் விழிக்கிறோமே; அதற்குள் இன்னொன்றா? பேசாமல் உட்கார்'' என்று குரலில் சிறிது கடுமை தொனிக்கக் கூறிவிட்டுக் கதவை இழுத்துச் சாத்தினான்.

மேலும் அரை மணி நேரம் போயிற்று. பூங்கோதை ஏதேதோ புலம்பிக் கொண்டேயிருந்தாள். சில சமயம் சிவானந்தத்துக்குப் பளீரென்று அவள் கன்னத்தில் நாலு அறை வைக்கலாமா என்று கூடத் தோன்றியது; ஆனால் உள்ளூற அவளுக்காக வருந்தினான். வாயைத் திறக்காமல் அவள் கக்கிய விஷயங்களை யெல்லாம் ஜீரணித்துக் கொண்டிருந்தான். எதிர்ப்புறத்தில் தூரத்திலிருந்து ஒரு காரின் வெளிச்சம் தெரிந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அது நெருங்கிக் கொண்டே வந்தது. அதே சமயத்தில் பின்புறத்திலிருந்தும் ஒரு கார் வந்தது. அதற்குள் எதிர்ப்புறத்திலிருந்து வந்த கார் மரத்துக்குப் பக்கத்தில் வந்து நின்றது. வண்டியிலிருந்து இரண்டொருவர் கீழே இறங்கி வந்து மரத்தைப் பார்த்துவிட்டு ஏதேதோபேசிக் கொண்டார்கள். பின்புறத்திலிருந்து வந்த காரும் நின்றது. அதிலிருந்தும் இரண்டு பேர்கள் இறங்கி, எல்லோருமாக ஒன்றுசேர்ந்தார்கள். சிவானந்தமும் வண்டியை விட்டுக் கீழே இறங்கி அவர்களுக்குச் சமீபத்தில் போய் நின்றான். எல்லோரும் ஒரு அவசர முடிவுக்கு வந்தார்கள். தோட்டத்தின் வேலியை மரத்துக்கு இரண்டு புறமும் கொஞ்சம் பிரித்து விடுவதுதான் வழியென்று தீர்மானித்து அதைச் செய்யவும் முயன்றனர். சிவானந்தமும் கூடமாட ஏதோ செய்தான்.

சிறிது நேரத்துக் கெல்லாம் வண்டிகள் தோட்டத்துக்குள் புகுந்து வேறு வழியாக வெளிப்பட்டுச் சென்றன.

கண்டியை நோக்கிச் சிவானந்தத்தின் கார் காற்றாய்ப் பறக்கத் தொடங்கியது.

வண்டியின் வேகம் அதிகரிக்க அதிகரிக்கப் பூங்கோதையின் பயமும், கவலையும் அதிகரித்துக் கொண்டே வந்தன. 'இன்னும் சற்றைக்கெல்லாம் வீட்டை அடைந்து விடுவோமே; அம்மாவுக்கு என்ன பதில் சொல்வது?' என்று உள்ளம் 'திக் திக்'கென்று அடித்துக் கொண்டது. 'இந்தக் கார் எங்கேயாவது கவிழ்ந்து விடக்கூடாதா?' என்றுகூட நினைத்தாள்.

சரியாக இரவு பதினொரு மணிக்குப் பூங்கோதையின் வீட்டு வாசலில் மோட்டாரைக் கொண்டு வந்து நிறுத்தினான் சிவானந்தம். கதவைத் திறந்துகொண்டு கீழே இறங்கிய பூங்கோதை, தணல்மேல் நடப்பதைப்போல நடந்து வாசற்படியை மிதித்தாள். வீட்டு வாசலில் ஒரு பெரிய பூட்டு தொங்கிக் கொண்டிருந்தது!

நடந்தது இதுதான். அன்று மத்தியானம் சுமார் பன்னிரண்டு மணிக்குச் சங்கரியின் பெயருக்கு ஒரு தந்தி வந்தது; கொழும்பிலிருந்து அவளுடைய சகோதரன் கொடுத்திருந்தான். ஒரு வாரத்துக்கு முன்பு சங்கரியின் கணவர் ஏதோ காரியமாக அங்கே போயிருந்தார்; ஒரு வாரத்தில் திரும்பி விடுவதாகத்தான் கூறி விட்டுச் சென்றார். அவருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சங்கரிக்கு அவளுடைய தலைவனின் தந்திதான் கிடைத்தது. 'உன் கணவர் விபத்தில் சிக்கி விட்டார். உடனே வரவும்' என்று தந்தியில் கண்டிருந்தது. தந்தியைப் படித்ததும் சங்கரியின் உடல் உள்ளமெல்லாம் பதறின. தந்தியை எடுத்துக் கொண்டு சிவானந்தத்தின் தந்தையிடம் ஓடி வந்தாள்.

---

## ஆஸ்திகத்துக்கு ஓர் புதிய ஆலயம்

சென்னை மேல மாம்பலத்தில் உள்ள சில பக்தர்கள் பொது மக்களின் க்ஷேமத்தை உத்தேசித்து அங்கு ஒரு சங்கர மடத்தை ஸ்தாபித்திருக்கிறார்கள். அந்தக் கைங்கர்யத்துக்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகளின் ஆசியும் கிடைத்துள்ளது. மேல மாம்பலத்தைச் சேர்ந்த ஒரு தர்மசீலர் அளித்த உதவியால், ஈசுவரன் கோவில் தெருவில் ஓர் இடம் வாங்கப்பட்டது. சில பண்டிதர்களைக் கொண்டு நடத்திய பதினெண் புராணம், ராமாயண, பாகவத, பாரத கதா காலட்சேபங்களில் கிடைத்த தொகையைக் கொண்டும், பக்தர்கள் அன்புடன் அளித்த நன்கொடைகளைக் கொண்டும் ஸ்ரீ சங்கர மடம் கட்டப்பட்டு வருகிறது. ஒரு பிரமுகருடைய உதவியால் மகா மண்டபத் திருப்பணியும் நடைபெற்று வருகிறது. மேற்படி மடத்தில் 26—1—1958 ஞாயிற்றுக்கிழமை காலை ஏழு மணிக்குமேல் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள் பாதுகா பிரதிஷ்டா அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெற இருக்கிறது. இந்தத் திருப்பணி பூர்த்தியாகவும், மகா கும்பாபிஷேகம் நடைபெறவும் நன்கொடை மூலமே நடைபெற்று வரும் இப்பணிக்கு ஆஸ்திகப் பெருமக்கள் யாவரும் தங்களால் இயன்ற பொருள் உதவி அளித்து, பகவான் ஸ்ரீ சங்கரரின் அருளுக்குப் பாத்திரர்கள் ஆவார்கள் என்று நம்புகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய விலாசம்: ஸ்ரீ ஜி. ஆர். நடராஜ அய்யர், பொக்கிஷதார், சங்கர மடக் கும்பாபிஷேகக் கமிட்டி, 1, ஜவாஹர்லால் தெரு, தியாகராய நகர், சென்னை-17.

"சரி; இரண்டு மணிக்கு ஒரு வண்டி இருக்கிறது. அதிலேயே போய் விடலாம்" என்றார் சிவானந்தத்தின் தந்தை. சங்கரிக்குப் பிறகு தான் பூங்கோதையைப் பற்றிய நினைவு வந்தது. "பூங்கோதை இல்லையே! பார்தேனியாவுக்குப் போயிருக்கிறாள். நாலு மணிக்குத்தான் வருவதாகச் சொன்னாள். விலாசமும் சொல்லவில்லையே?" என்றாள் கவலையுடன். சிவானந்தத்தின் தந்தை சிறிது யோசித்தார். பிறகு "அதனாலென்ன? அவள் வந்தால் இரண்டு நாளைக்கு இங்கு இருந்து விட்டுப் போகிறாள். அப்படித் தேவையானால் நாளைக்கு வரவழைத்துக் கொண்டால் போகிறது. நாம் முன்னால் போகலாம்" என்றார். சங்கரிக்கும் அதுதான் சரியென்று பட்டது. இருவரும் இரண்டு மணிக்குக் கொழும்புக்குப் பிரயாணமானார்கள்.



சிவானந்தத்தின் தாயார், பூங்கோதை வருகிறாளா வென்று அவள் வீட்டு வாசலையே மாலை ஏழு மணி வரையில் பார்த்துக் கொண்டிருந்தாள். பூங்கோதையும் வரவில்லை; சிவானந்தமும் வரவில்லை. பிறகு மழை பிடித்துக் கொண்டு வலுக்கவே, மழையினால் வர முடியவில்லை போலுமென்று நினைத்து மழை விடும் வரையில் அவள் நிம்மதியா யிருந்தாள்.

ஒன்பது மணிக்கெல்லாம் மழை விட்டு விட்டது. பத்து மணிக்கும் திரும்பாமற் போகவே பூங்கோதையைப் பற்றி ஒரு நிம்மதி பெற்றாள். 'சென்ற இடத்தில் இருட்டிலும் மழையிலும் அனுப்புவதற்குப் பயந்து அங்கேயே தங்கச் சொல்லி யிருக்கலாம்; ஆனால், இந்தப் பிள்ளை ஏன் திரும்பவில்லை? காருக்கு ஏதாவது......' என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தாள்.

பதினொரு மணிக்கு மேல் கதவைத் தட்டினான் சிவானந்தம். வெளியில் பூங்கோதையும் நிற்பதைக் கண்டவுடன் "நல்லவேளை! நீயும் வந்து விட்டாயே!" என்று சந்தோஷப்பட்டாளே தவிர, இருவரும் எப்படிச் சேர்ந்து வந்தார்களென்ற சந்தேகமே அவளுக்கு எழவில்லை.

"எங்கள் வீடு பூட்டியிருக்கிறதே. அம்மா எங்கே?" என்றாள் பூங்கோதை, சுற்றிலும் பார்த்துக் கொண்டே. தாயாரின் குரல் வீட்டின எந்தத் திக்கிலிருந்து வருமோ வென்று நடுங்கிக் கொண்டிருந்தாள்.

சிவானந்தத்தின் தாயார் நடந்ததை விவரமாகச் சொன்னாள். பூங்கோதைக்கு அழுவதா சிரிப்பதாவென்றே தெரியவில்லை. நேரம் கழித்து வந்ததோ, சிகிரியா போய்வந்ததோ வீட்டுக்குத் தெரியப் போவதில்லை என்பதை நினைத்துப் பார்த்த பொழுது அவளுக்கு ஒரு நிம்மதி ஏற்பட்டது. ஆயினும் மனத்திலே என்ன என்னவெல்லாமோ இல்லாத எண்ணங்கள் எழுந்து இரவு முழுவதும் அவளைத் தூங்க விடவில்லை.

படுக்கையில் படுத்தவாறே அன்று நடந்தது முழுவதையும் ஒவ்வொன்றாக நினைத்துப் பார்த்தாள் பூங்கோதை. கடைசியில் சிவானந்தத்தினிடம் தான் மூர்க்கத்தனமாக வாயில் வந்தபடி யெல்லாம் பேசியதை நினைக்கும்போது அவள் மனம் மிகவும் சங்கடப்பட்டது! பாவம் அவன் மனம் என்ன பாடுபட்டிருக்கும்? இதை எண்ணி அவள் மனம் படாத பாடுபட்டது. அதோடு தந்தையின் நிலையைப் பற்றிய கவலை வேறு சேர்ந்து கொண்டது.

மறுநாள்காலை ஒன்பது மணிக்கு இன்னொரு தந்தி வந்தது. "கவலை வேண்டாம். நாலுநாட்களில் எல்லோரும் வருகிறோம்" என்று அதில் கண்டிருந்தது. பிறகு தான் பூங்கோதைக்கு உயிர் வந்தது; ஆனால் உத்ஸாகம் வரவில்லை!

சிவானந்தம், ஏன் தன் பக்கமே திரும்ப மாட்டேன் என்கிறான்? மத்தியானம் அவன் அறைக்குள் நுழைந்தாள் பூங்கோதை. அப்பொழுது சிவானந்தத்தின் தாயார் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தாள்.

"சிவானந்தம்!" என்றாள் பூங்கோதை.

"ம்..." என்று அவள் பக்கம் திரும்பினான் சிவானந்தம்.

"என்மீது கோபமா? என்னை மன்னிக்க மாட்டாயா? புத்தியில்லாமல் என்னுடைய தவறுக்கு உன்னை ஏதேதோ பேசிவிட்டேன்" என்றாள் பூங்கோதை.

"தவறு என்னுடையதுதான் பூங்கோதை. உன்னிடம் எனக்குத் துளியும் வருத்தமே கிடையாது. கதிர்காம முருகனை நேற்று வேண்டிக் கொண்டேன். அவன் அருளால் இப்பொழுது எல்லாம் சரியாகி விட்டது. ஆனால் ஒரு பாடம் கற்றுக் கொண்டேன். எதையும் நன்றாக ஆலோசியாமல் அவசர புத்தியில் செய்யக் கூடாதென்றும், பெரியவர்களுக்குத் தெரியாமல் ஒன்றையுமே செய்யக்கூடாதென்றும் தெரிந்து கொண்டேன். அந்த முருகன் சாட்சியாகச் சொல்லுகிறேன்; இனி என் வாழ்நாள் முழுவதும் அப்படியே நடப்பேன். இது சத்தியம்!" என்றான். அப்பொழுது அவன் முகத்தில் ஒரு அலாதி பிரகாசம் குடிகொண்டிருந்தது. சிறிது நேரம் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்த பூங்கோதை "நானும் அப்படித்தான்!" என்றாள். சத்தியத்தில் முடிந்த தங்கள் வாழ்வை எண்ணிப் பார்க்கவே இருவர் முகங்களும் பழையபடி மந்தஹாசத்துடன் மலர்ந்தன!

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

